சரத் சந்த்ரர் நூல்—1

# விஜயா

(ஸ்ரீ சரத் சந்த்ர சட்டர்ஜி இயற்றியது)



எஸ். குருஸ்வாமி, பி. ஏ.,
மொழிபெயர்த்தது



அல்லயன்ஸ் கம்பெனி
மயிலாப்பூர், சென்னை.

 [ரூ. 1—8—0

தயாராகவுள்ள

# பங்கிம் சந்த்ரர் நூல்கள்

| | | ரூ. அ. | | | ரூ. அ. |
|---|---|---|---|---|---|
| (1) | விஷவிருக்ஷம் | 1 8 | (4) | துர்க்கேசநந்தினி | 1 4 |
| (2) | ஆனந்தமடம் | 1 4 | (5) | மாதங்கினி | 1 0 |
| (3) | இந்திரா | 0 12 | (6) | ரஜனி | 0 12 |

## அடுத்து வெளிவரும் பங்கிம் நூல்கள்

(7) கிருஷ்ணகாந்தன் உயில் (இரண்டு பாகங்களும்)
(8) தேவி சௌதுராணி
(9) கபாலகுண்டலா
(10) ஹிரண்மயி, ராதாராணி
(11) சந்திரசேகரன்
(12) ம்ருணாளினி
(13) ஸீதாராம்
(14) ராஜஸிம்ஹன்
(15) கமலாகாந்தனின் தினக்குறிப்பு (தப்தர்)

சாது அச்சுக்கூடம், சென்னை

(1939412-21-1.)

# முன்னுரை

ஆசிரியர் சரத் சந்திர சட்டோபாத்தியாயர் இந்தியப் பேராசிரியர்களுள் ஒருவர். வங்க இலக்கிய உலகில் ரவீந்திரநாத தாகுர் எங்ஙனம் கவிச் சக்கரவர்த்தியாய் விளங்குகிறாரோ, அங்ஙனமே சரத் சந்திரர் உரைநடைச் சக்கரவர்த்தியாய் விளங்குகிறார். இவருடைய நாவல்கள் ஹிந்தி, குஜராத்தி முதலிய இந்திய பாஷைகளிலும், ஆங்கிலம், பிரெஞ்சு முதலிய ஐரோப்பிய பாஷைகளிலும் மொழி பெயர்க்கப்பட் டிருக்கின்றன. இவ்வருடைய திறமையை மெச்சி, டாக்கா சர்வகலாசாலை இவருக்கு 'டாக்டர்' பட்டம் அளித்தது. 'நோபல்' இலக்கியப் பரிசும் இவருக்கு அளிக்கப்படும் என்று யாவரும் எதிர்பார்த்தார்கள். ஆனால் அதற்குள் பரகதி யடைந்துவிட்டார்.

சரத் சந்திரர் ஒரு புரட்சிக்காரர். புரட்சி என்றவுடன் வெடிகுண்டுகளும், இரகசியக் கக்ஷிகளும் நமது கண்களுக்கு முன்பு வருகின்றன. அத்தகைய புரட்சிக்காரரல்ல சரத் சந்திரர். இவருடைய கதைகளும், நாவல்களும் நமது வைதிக எண்ணங்களையும், கொள்கைகளையுந் தகர்த்

தெறிந்து, சமுதாய வாழ்வில் பெரும் புரட்சியை உண்டுபண்ணக்கூடியவை. தமிழர்களுக்கு ஏற்கெனவே பரிசயமான 'ஸௌதாமினி'* என்ற அவருடைய கதை எனது கூற்றை விளக்கும். 'மனிதன் பலஹீனன். இந்திரிய வசப்பட்டும், சந்தர்ப்பங்களுக்கு அடிமைப்பட்டும் அவன் சிற்சில சமயங்களில் நெறி தவறுகிறான். அதற்காகச் சமூகம் அவனை இகழக்கூடாது; மன்னிக்கவேண்டும்' என்பதே இவருடைய கொள்கை. மஹான் டால்ஸ்டாயின் தத்துவமும் இதுவே. சமூகத்தினால் புறக்கணிக்கப்பட்டவர்கள் யாவரும் சரத் சந்திரர் அன்பிற்குப் பாத்திரர்களாயினர். சேற்றில் தாமரையையும், சிப்பியில் முத்தையும் சரத் சந்திரர் கண்டார். ஏழைகளுக்கு இரங்கியது இவர் நெஞ்சம்.

வாழ்க்கையில் கண்டவற்றை இவர் தம் நாவல்களில் சித்திரித்தார். இவருடைய சிருஷ்டிகளை நாவல்கள், கதைகள் என்று சொல்வது தவறு. அவைகளை வாழ்க்கைச் சித்திரங்கள் என்று கூறுவதுங்கூடத் தவறு. வாழ்க்கையே அவை. ஒருவன் அல்லது ஒருத்தியின் வாழ்க்கையினின்று ஒரு பாகத்தை அப்படியே பிய்த்துத் தருகிறார் சரத்

*ஸ்ரீ த. நா. குமாரசுவாமி மொழிபெயர்த்தது. அல்லயன்ஸ் கம்பெனி வெளியீடு.

*சந்திரர். இவருடைய நாவல்களில் 'ஸ்ரீகாந்த்' 'சரித்ரஹீன்' என்பவை தலைசிறந்தவைகளாகக் கருதப்படுகின்றன.*

'விஜயா'வில் இவருடைய இன்னொரு தத்துவம் விளங்கும். ஆணின் கட்டுப்பாட்டினின்றும் பெண் விடுதலை பெறுகிறாள். அதில் ஏற்படும் போராட்டங்களை ஆசிரியர் இந்நூலில் அழகாகச் சித்திரிக்கிறார். விஜயா ஒரு புதுமைப் பெண்; புதுயுகப் பெண். பாரதியார் கனவில் கண்ட புதுமைப் பெண்ணைச் சரத் சந்திரர் வாழ்க்கையில் காண்கிறார். எங்ஙனம் என்பதை நீங்களே பார்க்கலாம்.

சென்னை
13—4—1939

சு. குருசாமி.

# பொருளடக்கம்



# விஜயா

## முதல் அத்தியாயம்

### பூர்வ கதை

ஹாக்ளி பாடசாலைத் தலைமை உபாத்தியாயர் மூன்று மாணவர்களைப் பள்ளிக்கூடத்தின் இரத்தினங்கள் போல மதித்து வந்தார். அவர்கள் மூவரும் வெவ்வேறு கிராமங்களிலிருந்து தினந்தோறும் சுமார் இரண்டு மைல் தூரம் நடந்து பள்ளிக்கூடம் வந்துகொண்டிருந்தார்கள். அவர்களுக்குள் மிகுந்த அந்நியோந்நியம் இருந்துவந்தது. தினந்தோறும் அம்மூன்று நண்பர்களும் ஓர் அத்திமரத்தினடியில் சந்தித்து, ஒன்று சேர்ந்துதான் பள்ளிக்கூடம் வருவார்கள். அவர்களுடைய வீடுகள் ஹாக்ளிக்கு மேற்கே இருந்தன. ஜகதீசன் சரஸ்வதி நதிக்கு அப்பாலிருக்கும் திகடாவிலிருந்து வருவான். வனமாலியும், ராஸ்விஹாரியும் அடுத்தடுத்திருந்த கிருஷ்ணப்பூர், ராதாப்பூர் என்ற இரு கிராமங்களினின்றும் வருவார்கள்.

அம்மூவரிலும் அதிக புத்திசாலி ஜகதீசன். பரம தரித்திரனும் அவனே. அவனுடைய தகப்பனார் ஒரு

புரோகிதர். உபநயனம், கலியாணம், துர்க்காபூஜை முதலியவை செய்வித்து அவர் தம் குடும்பத்தை நிர்வஹித்து வந்தார். வனமாலி நல்ல பணக்காரன். அவன் தகப்பனூர் கிருஷ்ணப்பூரின் ஜமீன்தார். ராஸ்விஹாரிக்கும், உண்ண உடுக்க ஒன்றுங் குறைவில்லை. நன்செய் புன்செய், தோட்டம் துரவு, மாடு கன்று கிராமத்தில் சௌகரியமாய் வசிப்பதற்கு என்னென்ன வேண்டுமோ அவை யாவும் அவனுக்கு இருந்தன. இத்தனை யிருந்தும், இவ்விருவரும் நகரத்திலேயே வாடகைக்கு வீடு எடுத்துக்கொண்டு வசிக்கவில்லை. பனியென்றும், வெயிலென்றும் பாராமல் கால் நடையாகப் பள்ளிக்கூடம் சென்றுகொண்டிருந்தார்கள். காரணம் என்னவென்ருல், அக்காலத்தில் தாய்தந்தையர்கள், தங்கள் குழந்தைகளுக்கு ஏற்படும் இத்தகைய கஷ்டங்களைக் கஷ்டங்களாகவே மதிப்பதில்லை. இவ்வளவு கஷ்டங்கூடப் படாவிட்டால், சரஸ்வதி மாதா குழந்தைகள் நாவில் வசிக்கமாட்டாள் என்பது அவர்களுடைய நம்பிக்கை.

காரணம் எதுவாயினும், இவ்விதமே படித்து நண்பர்கள் மூவரும் மெட்றிக்குலேஷன் பரீட்சையில் தேறிவிட்டார்கள். அத்திமரத்தினடியில் உட்கார்ந்துகொண்டு, அம்மரத்தையே சாக்ஷியாக வைத்து, சகபாடிகள் மூவரும் பின்வருமாறு பிரதிக்ஞை செய்துகொண்டார்கள் : வாழ்க்கையில், அவர்கள் ஒருக்காலும், ஒருவரைவிட்டு ஒருவர் பிரியக்கூடாது ; விவாகம் செய்துகொள்ளக்கூடாது ; வக்கீல் பரீக்ஷை பாஸ்பண்ணி, ஒரே வீட்டில் வசிக்கவேண்டும் ; பணம் சம்பாதித்து அனைவரும் ஒரே பெட்டியில் போடவேண்டும் ; அப்பணத்தைக்கொண்டு தேச நன்மைக்கான காரியங்களைச் செய்யவேண்டும். இத்யாதி, இத்யாதி.

இவை யெல்லாம் இளமைப் பருவத்தின் கற்பனைகள். ஆனல் உண்மையில் அவர்களனைவரும் என்ன செய்தார்க

ளென்பது பின்னால் சொல்லப்படுகிறது. இளமையின் கற்பனைகள் காலேஜ் சென்றதுமே மாறிவிட்டன. பி. ஏ., வகுப்பிலேயே அவர்களுடைய அன்புத்தளை தளர்ந்துவிட்டது. அக்காலத்தில் கல்கத்தாவில் கேசவ சந்திர சேனருடைய பிரதாபம் எங்கும் பரவிக்கொண்டிருந்தது. ஜனங்களிடையே அவருடைய செல்வாக்கு அதிகரித்தது. அவருடைய பிரசங்கங்களில் ஒரு சக்தி உண்டு. கிராமத்து யுவர்களாகிய அம்மூவரும், அச்சக்தியில் முழுகிவிட்டார்கள். அதன் வேகம் அவர்களை அடித்துக்கொண்டு சென்றது. வனமாலியும், ராஸ்விஹாரியும் தீக்ஷை பெற்றுப் பிரம்ம சமாஜத்தில் சேர்ந்தார்கள்!

ஆனால் ஜகதீசன் அங்ஙனம் சேரமுடியவில்லை. அவன் ஆற்றில் ஒருகாலும், சேற்றில் ஒருகாலுமாயிருந்தான். மூவரிலும் அவன் மிக மேதாவியா யிருந்தபோதிலும், திடசித்தமுடையவனல்ல. மேலும், புரோகிதராகிய அவனுடைய தகப்பனார் இன்னும் உயிரோடிருந்தார். வனமாலிக்கும், ராஸ்விஹாரிக்கும் அவ்விதமான சங்கடம் ஒன்றுமில்லை. கொஞ்ச நாட்களுக்கு முன்னமேயே, பிதா பரகதியடைந்துவிட்டதால், வனமாலி கிருஷ்ணப்பூருக்கு ஜமீன்தார் ஆகிவிட்டான். ராஸ்விஹாரியும் தன் பூர்விக சொத்துக்களுக்கு ஏகபோக எஜமானனாயிருந்தான். ஆகையினால், அவ்விரு நண்பர்களும் சில தினங்களுக்குள்ளேயே பிரம்ம சமாஜ கனவான்கள் வீடுகளில் கலியாணஞ் செய்து விதுஷிகளான மனைவியர்களுடன் வீடு திரும்பினார்கள். ஆனால் ஏழை ஜகதீசன் அவர்களைப் பின்பற்றமுடியவில்லை. அவன் சரியான காலத்தில் வக்கீல் பரீக்ஷையில் தேறினான். அதன் பின்னர், பதினொரு வயதுடைய ஒரு பெண்ணை மணந்துகொண்டு தன் தொழில் நிமித்தம் அலஹாபாத் சென்றான்.

வனமாலியும் ராஸ்விஹாரியும் அவரவர்களுடைய கிராமத்திற்குத் திரும்பினார்கள். அவர்களுடைய மனைவிமார், ஜோடு, மேல் ஜோடு அணிந்துகொண்டு, முக்காடில்லாமல் வெளியேறத் தொடங்கினார்கள். இவ்வேடிக்கையைப் பார்ப்பதற்காகச் சுற்றிலுமுள்ள இரண்டு மூன்று கிராமத்து ஜனங்கள் கூட்டங் கூட்டமாய்க் கூட ஆரம்பித்தார்கள். அவர்கள் பேசின பேச்சுக்களையும், நிந்தைகளையும் பொறுத்துக்கொண்டு மானமுள்ள யாரும் அங்கு வசிக்கமுடியாது.

வனமாலி தனவந்தன். ஆகையினால் அவன் கிராமத்தைவிட்டுக் கல்கத்தாவிற்குச் சென்று வசிக்கலானான். ஜமீன் வருமானத்தைக்கூடப் பொருட்படுத்தாது, அவன் ஒரு வியாபாரம் ஆரம்பித்தான். ஆனால் ராஸ்விஹாரியின் வருமானமோ மிகக் குறைவு. அவனை ஜாதிப் பிரஷ்டம் செய்தார்கள். எனினும் அவனும், அவன் மனைவியும் கிராமத்தார் செய்யும் நிந்தைகளையும், அநியாயங்களையும் பொறுத்துக்கொண்டு, என்ன வந்தாலுஞ் சரியென்று, கிராமத்திலேயே தங்கள் காலத்தைக் கழித்துவந்தார்கள்.

இவ்விதம் மூன்று நண்பர்களில், ஒருவன் அலஹாபாத்திலும், ஒருவன் கல்கத்தாவிலும், ஒருவன் ராதாப்பூரிலுமாக வசிக்க ஆரம்பித்தார்கள். முடிவு என்னவென்றால், வாழ்க்கை முழுவதும் விவாகம் செய்யாமல், ஒரே வீட்டில் வசித்துக்கொண்டு, ஒரே பெட்டியில் தங்கள் சம்பாத்தியங்களையெல்லாம் சேர்த்து, தேசோத்தாரணம் செய்யவேண்டுமென்ற பிரதிக்ஞை வெறும் பேச்சளவில்தான் இருந்தது. அப்பிரதிக்ஞைக்குச் சாக்ஷியாயிருந்த அக்கிமரமும், அவர்கள்மீது வழக்கு ஒன்றுந் தொடுக்காமல் மனதிற்குள்ளேயே சிரித்துக்கொண்டது போலும்! இதனிடையில், மூன்று நண்பர்களும் எப்பொழுதாவது சந்திப்பதுண்டு. ஆகை

யினால் பால்ய சிநேகம் ஒரேயடியாய் ஒழிந்துபோய்விட வில்லை.

ஜகதீசனுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தவுடன், அவன் வனமாலிக்கு அந்தச் சுப சமாசாரத்தை யறிவித்து அலஹாபாத்திலிருந்து பின்வருமாறு எழுதினான்: "உனக்குப் பெண் குழந்தை பிறந்தால், அவளை என் மருமகளாக்கிக்கொண்டு, நான் பால்யத்தில் இழைத்த பாவத்திற்காகப் பிராயச்சித்தம் செய்வேன். உன்னுடைய தயவினால்தான் நான் வக்கீலாகிச் சுகமாகக் காலங் கழிக்கிறேன் என்பதை என் வாழ்க்கையில் ஒருபோதும் மறக்கவில்லை; இனிமேலும் மறக்கமாட்டேன்."

வனமாலி இதற்குப் பதிலாக, "மிக்க சந்தோஷம். உன்னுடைய புத்திரனுக்கு என் ஆசீர்வாதம். அவன் சிரஞ்சீவியாக இருக்கவேண்டும். ஆனால் எனக்கு ஸமீபத்தில் பெண் பிறக்குமென்ற நம்பிக்கை இல்லை. ஒரு சமயம் பகவான் அருளால் எனக்குப் பெண் பிறந்தால், அவளை அவசியம் உன் மகனுக்குக் கொடுக்கிறேன்" என்று எழுதினான். கடிதம் எழுதிவிட்டு வனமாலி தன் மனத்திற்குள்ளேயே நகைத்தான். காரணம் என்னவென்றால், இரண்டு வருடங்களுக்கு முன்னால், அவனுடைய இன்னொரு நண்பன் ராஸ்விஹாரிக்கு ஆண் குழந்தை பிறந்தபோது, அவனும் இதே மாதிரிதான் வேண்டிக்கொண்டான். லக்ஷ்மி கிருபையினால் இப்பொழுது வனமாலி பெருந்தனவந்தனாயிருந்தான். ஆகையால் எல்லோரும் அவனுடைய சம்பந்தத்தை நாடினார்கள்.

# இரண்டாம் அத்தியாயம்

## தந்தையும் மகளும்

இரண்டு மூன்று மாதங்களல்ல, 20-வருஷங்களுக்கப் புறம் நடந்த விஷயத்தை இப்பொழுது எழுதுகிறோம். வன மாலிக்கு நாற்பது வயதுக்கு மேலாகிவிட்டது. அநேக வரு ஷங்களாக அவன் வியாதியால் பீடிக்கப்பட்டு வேதனைப்படு கிறான். அவன் படுக்கையில் படுத்த அன்றே அவனுக்கு, தான் இனி எழுந்திருக்கமுடியாது என்பது நிச்சயமாய்த் தெரிந்துவிட்டது. அவனுடைய அந்நியகாலம் கிட்டிவிட் டது. அவன் ஆதியிலிருந்தே கடவுள் பக்தனாகவும், தர்ம வானாகவு மிருந்தவன். ஆகையினால் அவனுக்கு மரணத் தைப் பற்றிச் சிறிதும் பயமில்லை. தன்னுடைய ஒரே புதல்வி விஜயாவுக்குக் கலியாணம் செய்துவிட்டுப் போக முடியவில்லையே என்ற வருத்தந்தான் அவனுக்கு இருந்தது.

ஒருநாள் அவன் திடீரென்று விஜயாவின் கையைப் பிடித்துக்கொண்டு, "குழந்தாய்! எனக்கு மகனில்லையே என்ற துக்கம் எள்ளளவுகூட இல்லை. உன்னையே மகனிலும் பன் மடங்கு அதிகமாகக் கருதி நான் நேசிக்கிறேன். உனக்கு இன்னும் 18-வயதுகூடப் பூர்த்தியாகவில்லை. எனினும் உன் தலையில் இவ்வளவு பெரிய ஜமீன் பாரத்தைப் போட்டுச் செல்வதில் எனக்குக் கொஞ்சமும் பயமில்லை. உனக்குத் தாயில்லை; சகோதரனில்லை; ஒரு சிற்றப்பாகூட இல்லை. என்றாலும் இந்த ஜமீனுக்கு எள்ளளவு நஷ்டமும் வரா தென்று எனக்கு நிச்சயமாய்த் தெரியும். விஜயா! உன் னிடத்தில் எனக்கு ஒரே ஒரு வேண்டுகோள். ஜகதீசன்

இப்பொழுது எப்படியிருந்தாலும் சரி, என்ன செய்தாலும் சரி, அவன் என்னுடைய பால்ய சிநேகிதன். கடனை வசூலிப்பதற்காக அவனுடைய வீடு வாசல் முதலியவைகளை ஒருகாலும் ஜப்தி செய்ய வேண்டாம். அவனுக்கு ஒரு மகன் இருக்கிறான். அவனை இன்றுவரை நான் கண்ணால் பார்த்ததில்லை. ஆனால் அவன் நற்குண நற்செய்கை வாய்ந்த ஒரு பையனென்று கேள்விப்பட்டிருக்கிறேன். தகப்பனுடைய குற்றத்திற்காக அவனை ஆதரவற்றவனாக்கிவிட வேண்டாம். விஜயா, இதுதான் நான் உன்னிடத்தில் செய்துகொள்ளும் கடைசி வேண்டுகோள்" என்றான்.

விஜயாவின் கண்களில் கண்ணீர் பெருகியது. "அப்பா! தங்களுடைய ஆக்ஞையை நான் ஒருகாலும் தட்டமாட்டேன். ஜகதீஷ் பாபு உயிரோடிருக்கும் வரை, நான் அவரைத் தங்களைப்போலவே மதிப்பேன். ஆனால் அவர் இறந்தபின்பு அவருடைய சொத்து முழுவதையும் அவர் மகனுக்கு வீணே ஏன் கொடுக்கவேண்டும்? அவருடைய புத்திரனைத் தாங்களும் பார்த்ததில்லை; நானும் பார்த்ததில்லை. மேலும் அவன் உண்மையிலேயே படித்தவனாகவும் நற்குணமுள்ளவனாகவும் இருப்பானாகில், யாதொரு கஷ்டமுமின்றித் தந்தையின் கடனைத் தீர்த்துவிடலாமல்லவா?"

"கடன் கொஞ்சமில்லையே, அம்மா, இன்னும் அவன் சிறுவன். ஒருவேளை அவனால் தீர்க்கமுடியாவிட்டால்?" என்று கேட்டார்.

"பிதாவின் கடனைத்தீர்க்க முடியாதவன் சற்புத்திரனாவதெப்படி? அவனுக்கு உதவி செய்வதுந் தவறு" என்றாள் விஜயா. கல்வியறிவும் புத்திக்கூர்மையும் வாய்ந்த தன் புத்திரியின் குணத்தை வனமாலி நன்கறிவான். அதனால் அவ்விஷயத்தை அவன் மேலும் வற்புறுத்தவில்லை. ஒரு

நீண்ட பெருமூச்சுவிட்டு, "எல்லா விஷயங்களிலும் கடவுளிடத்தில் நம்பிக்கை வைத்து, எது கடமையென்றும், உசிதமென்றும் தோன்றுகிறதோ அதையே நீ செய். என்னுடைய வேண்டுகோளுக்காக நீ ஒரு காரியமும் செய்ய வேண்டாம்" என்று சொன்னான். இங்ஙனம் சொல்லி க்ஷணநேரம் மௌனமாக இருந்தான். பின்னர், மீண்டும் ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டு, வனமாலி சொல்லலுற்றான்: "விஜயா, நீ பிறப்பதற்கு முன்பு, இதே ஜகதீசன் சுகமாக நல்ல சம்பத்துட னிருக்கும்பொழுது, உன்னைத் தன் மகனுக்கு விவாகஞ்செய்ய வேண்டுமென்று என்னை வேண்டிக் கொண்டான். நானும் அவனுக்கு அங்ஙனமே வாக்களித்திருந்தேன்." இவ்விதம் சொல்லி, வனமாலி விஜயாவின் முகத்தை உற்றுநோக்கலானான்.

விஜயா குழந்தைப் பருவத்திலேயே தன் தாயை இழந்தாள். ஆகையினால், வனமாலியே அவளுக்குத் தாயாகவும், தந்தையாகவுமிருந்தான். தாயைப்பற்றிய கவலையே சிறுமிக்குத் தோன்றாதவாறு வனமாலி நடந்துகொண்டான். ஆகையினால் விஜயா தாயிடத்தில் செய்யவேண்டிய பிடிவாதத்தைத் தந்தை யிடத்தில் செய்வதற்குச் சிறிதும் சங்கோசப்படுவதில்லை. "அப்பா, தாங்கள் விளையாட்டாகப் பேச்சளவில் வாக்களித்திருப்பீர்கள். மனப்பூர்வமாக வாக்குக் கொடுத்திருக்கமாட்டீர்கள்" என்றாள்.

வனமாலி:—ஏன்? அப்படிச் சொல்லுகிறாய் விஜயா?

விஜயா:—மனப்பூர்வமாக வாக்களித்திருந்தால், ஒரு முறையாவது அவனைக் கூப்பிட்டுக் கண்ணாறப் பார்த்திருக்க மாட்டீர்களா?

வனமாலி:—சிறுவன் தன் தாயைப்போலவே பலஹீனனென்றும், அவன் அநேக நாள் ஜீவித்திருப்பதுகூடக் கஷ்டமென்று டாக்டர்கள் அபிப்பிராயப்படுகிறார்களென்

றும் ராஸ்விஹாரி என்னிடம் சொன்னன். ஆகையினல், அவன் பக்கத்திலேயே வசித்தபோதிலும், அவனை வர வழைத்துப் பார்க்க நான் விரும்பவில்லை. இதே கல்கத்தா வில் ஒரு ஹாஸ்டலில் வசித்துக்கொண்டு பி. ஏ., படித்துக் கொண்டிருந்தான். அதன் பின்னர், நான் நோய்வாய்ப் பட்டு அநேக சங்கடங்களுக்குள்ளானேன். ஆகையினல் அவனைப்பற்றிச் சிந்திக்கக்கூட நேரமில்லாமற் போயிற்று. இப்பொழுது யோசிக்குமிடத்து, நான் ஒரு பெருந்தவறு இழைத்துவிட்டேன் என்றே தோன்றுகிறது. ஆயினும், அன்று நான் ஜகதீசனுக்கு எழுதியபோது, நான் மனப் பூர்வமாகத்தான் எழுதினேன்.

சிறிது நேரம் பொறுத்து, வனமாலி மீண்டும் சொல்ல லுற்ருன்: “ஜகதீசன் ஒரு சூதாடி, குடிகாரன், வேலையில் லாத சோம்பேறி என்பது இன்று எல்லோர்களுடைய எண்ணம். ஆனல் இதே ஜகதீசன் ஒரு சமயம் பாடசாலை மாணவர்களிலெல்லாம் மிகவும் சிறந்தவனுகக் கருதப்பட் டான். அறிவையும், புத்தி தீக்ஷண்யத்தையும் பற்றி நான் பேசவில்லை; அநேக மாணவர்களுக்கு அவை இயற்கை யாகவே அமைந்திருக்கின்றன. படிப்பதில் சுறுசுறுப்பும், பரீக்ஷையில் முதல்தரமாகத் தேறுந்திறமையும் வாய்ந்த மாணவர்கள் பலரை நான் பார்த்திருக்கிறேன். ஆனல் ஜகதீசனைப்போல அன்பும், அருளும் வாய்ந்தவர்களை நான் கண்டதில்லை. இறுதியில் அவ்வன்பே அவனுக்குக் காலனய் முடிந்தது. ஜகதீசனிடமுள்ள அநேக குற்றங் களை நானறிவேன். ஆனல், மனைவி இறந்த துக்கமே அத்தனைக்குங் காரணம் என்று நினைக்கும்பொழுது, என் மனத்தில் அவனைப்பற்றி ஒரு நல்லெண்ணமும், நன் மதிப்புமே தோன்றுகின்றன. அவன் மனைவி உண்மை

யில் ஒரு கிருஹலக்ஷ்மியாகவே இருந்தாள். கற்பில் அவளை அருந்ததி யென்றே சொல்லவேண்டும். அவள் சாகுந் தறுவாயில், நரேந்திரனைத் தன் பக்கம் அழைத்து, 'மகனே! உனக்கு என் கடைசி ஆசீர்வாதம் இதுதான். பகவானிடத்தில் நீ என்றும், அழியாப் பக்தியுடனிருக்க வேண்டும்' என்று சொன்னளாம். மாதாவின் இக்கடைசி ஆசீர்வாதம் வீணாகவில்லை என்று நான் கேள்விப்பட்டேன். நரேந்திரன் இப்பொழுதே தன் தாயைப்போலக் கடவுள் பக்தனு யிருக்கிறுன். விஜயா! உலகத்தில் ஒருவனுக்குக் கடவுள் பக்தியைவிட வேறு என்னவேண்டும்?"

"கடவுள் பக்திமட்டும் இருந்தால் போதுமா, அப்பா?"

மரணுவஸ்தையி லிருக்கும் வனமாலியின் கண்களில் நீர் நிரம்பியது. உடனே தன் இரண்டு கைகளையும் நீட்டி, மகளைத் தன் மார்போடு அணைத்துக்கொண்டு நாத் தடுமாற்றத்துடன், "ஆம், விஜயா, உலகத்தில் அதுதான் கிடைப்பதற்கரிய வஸ்து. பூவுலகத்திலும் சரி, பொன்னுலகத்திலும் சரி, அதைவிட அரிய வஸ்து வேறு ஒன்றுமில்லை. பகவானிடத்தில் பக்திசெய்ய உன்னுல் முடிந்தாலும் சரி, முடியாவிட்டாலும் சரி; ஆனுல் அங்ஙனம் பக்தி செய்கிறவர்கள் பாதத்தை வணங்க நீ எப்பொழுதும் தயாராயிருக்க வேண்டும். சாகுந் தறுவாயில் நான் கடைசியாக உனக்கு அளிக்கும் ஆசீர்வாதம் இதுதான்" என்று சொன்னுன்.

தந்தையின் மார்பின்மீது தலையை வைத்துக்கொண்டு, விஜயா, அவனுடைய ஆழ்ந்த ஹிருதயத்தின் உட்புறத்தையே உற்று நோக்குவதுபோல் உட்கார்ந்திருந்தாள். அவள் உள்ளத்தில் விவரிக்க முடியாத அநேக எண்ண அலைகள் தோன்றின. சுமார் ஒரு மணி நேரம் வரை அவள் தியானத்தில் அமர்ந்திருப்பதுபோல் மௌனமாயிருந்தாள்.

"சிறுவன் பெயர் நரேந்திரன். அவன் டாக்டர் பரிக்ஷை தேறிவிட்டதாக ஜகதீசன் சொன்னான். ஆனால் இன்னும் தொழில் ஆரம்பிக்கவில்லை. இப்பொழுது அவன் இந்தியாவில் இருப்பானாகில், அவனைக் கட்டாயம் கூப்பிட்டு நான் என் கண்ணாறப் பார்ப்பேன்" என்று வனமாலி மீண்டும் சொன்னான்.

"இப்பொழுது அவர் எங்கே இருக்கிறார்?" என்று வினவினாள் விஜயா.

"தன் மாமாவினிடம் - பர்மாவில். தற்பொழுது ஜகதீசன் பித்துப் பிடித்தவன்போல் திரிகிறான். மகனைப் பற்றிய சமாச்சாரங்கள் ஒன்றும் அவனால் தெளிவாய்ச் சொல்ல முடியவில்லை. ஆயினும் அவனுடைய பிதற்றல்களினின்று, தாயின் சற்குணங்களெல்லாம் பையனிடத்தும் நிரம்பியிருக்கின்றன என்பது மட்டுந் தெரிகிறது. பகவான் கிருபையால் அவன் எங்கிருந்தாலும் நன்றாயிருக்க வேண்டும்."

இருட்டிவிட்டது. விளக்கேற்றுவதற்கு வந்த வேலைக்காரன் விலாஸ் விஹாரி வந்திருப்பதாகச் சொன்னான். "சரி, நீ கீழே போ. நான் சற்று இளைப்பாறுகிறேன்" என்று வனமாலி விஜயாவிடம் சொன்னான்.

விஜயா, தந்தையின் தலைமாட்டிலிருந்த தலையணைகளைச் சீர்படுத்தி, போர்வையை இழுத்துக் கால்களை மூடினாள். பின்பு, விளக்கைச் சற்று இறக்கிவிட்டுக் கீழே இறங்கிச் சென்றாள். அவள் போனபின், தந்தையின் ஹிருதயத்தினின்றும் ஒரு நீண்ட பெருமூச்சு வெளிக்கிளம்பியது. விலாஸ் வந்த செய்தியைக் கேட்டவுடன், விஜயாவின் முகத்தில் தோன்றிய குறிகள், அவன் உள்ளத்தில் வேதனையை உண்டுபண்ணின.

விலாஸ் விஹாரி ராஸ்விஹாரியின் மகன். அநேக நாட்களாய்க் கல்கத்தாவிலேயே இருந்துகொண்டு, எப். ஏ., பரீட்சையில் தேறி இப்பொழுது பி. ஏ., வகுப்பில் படிக்கிறான். வனமாலி ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்ட பிறகு, கிராமத்திற்கு அதிகம் போவதில்லை. ஆயினும் வியாபாரத்தின் மூலம் அதிகப் பணம் சேர்த்ததோடு, கிராமத்திலுள்ள தன் பூஸ்திதிகளையும் விருத்தி செய்திருந்தான். அவைகளையெல்லாம், அவருடைய பால்ய சிநேகிதர் ராஸ்விஹாரியே மேற்பார்த்து வந்தார். அவ்விஷயமாகத்தான் விலாஸ் வனமாலியின் வீட்டிற்கு வந்துபோக வாரம்பித்தான். ஆனால் சில நாட்களுக்கப்புறம், அவன் வருகையின் காரணம் வேறாகிவிட்டது.

# மூன்றும் அத்தியாயம்

## விஜயாவும் விலாஸ் விஹாரியும்

**வ**னமாலி இறந்து இரண்டு மாதங்களாகின்றன. கல்கத்தாவிலுள்ள அவனுடைய பெரிய வீட்டில் இப்பொழுது விஜயா மட்டும் தனியே வசிக்கிருள். கிராமத்திலுள்ள பூஸ்திதிகளை ராஸ்விஹாரிதான் மேற்பார்த்துக் கொள்கிருர். ஆகையிஞல் அவர் ஒருவிதத்தில் விஜயாவின் கார்டியன் போல் ஆய்விட்டார். அதனுல் அவர் கிராமத்தில் வசித்தத ஞல், கல்கத்தாவில் விஜயாவின் காரியங்களை நிர்வகிக்கும் முழுப்பொறுப்பும், விலாஸ் விஹாரியின் மீதே விழுந்தது. ஆகையிஞல் உண்மையில் அவன்தான் விஜயாவின் கார்டியன் என்று சொல்லவேண்டும்.

அக்காலத்தில் ஒவ்வொரு பிரம்ம சமாஜி வீட்டிலும் 'சத்தியம்' 'நீதி' முதலிய சொற்கள் அதிகமாக வழங்கலாயின. "எது எங்களுக்குச் சரியென்று படுகிறதோ, அதை நாங்கள் செய்வோம். தாயின் கண்ணீரும், தந்தையின் பெருமூச்சும் சத்தியமார்க்கத்திற்கு இடையூறுகளாகும்; அவைகளை நாங்கள் பொருட்படுத்த மாட்டோம். முழுப் பலத்துடனும் அத்தகைய இடையூறுகளை நாம் வெல்ல வேண்டும். அப்பொழுதுதான் நமக்கு வெற்றி கிடைக்கும்" என்று அக்காலத்து வாலிபர்கள் சொல்வதுண்டு. அதை விஜயாவும் கற்றிருந்தாள்.

இன்று கிராமத்தினின்றும் வந்த விலாஸ்விஹாரி ஜகதீசன் இறந்துவிட்டான் என்ற செய்தியைத் தெரிவித்தான். ஜகதீசன் விஜயாவின் தந்தையினுடைய பால்ய சிநேகிதன்

தான். ஆனல் அவன் குடி வெறியில் மாடியினின்றும் கீழே விழுந்து இறந்தான் என்று விலாஸ் சொன்ன பொழுது, நல்லொழுக்கமே பிரதானமாகக் கொண்ட பிரம்ம சமாஜத்தைச் சேர்ந்த விஜயாவுக்கு அவன்மேல் வெறுப்பும், பகையுமே தோன்றின. விலாஸ் மேலும், "ஜகதீஷ் பாபு என் தந்தைக்கும் பால்ய சிநேகிதர்தான். இருவரும் ஒன்ருய்க் கூடி விளையாடியவர்கள். ஆனல் என் தந்தைக்கு அவர் முகத்தில் விழிப்பதற்குக் கூட இஷ்டமில்லை. ஜகதீசர் கடன் கேட்பதற்காக இருமுறை வீட்டிற்கு வந்தார். தந்தையார், வேலையாட்களைக்கொண்டு அவரை வீட்டினின்றும் வெளியேற்றிவிட்டார். இத்தகைய ஒழுக்க ஹீனர்களுக்கு உதவிசெய்வது மஹாபாவம் என்று தந்தையார் அடிக்கடி சொல்வார்" என்ருன்.

"அவர் சொல்வது முற்றிலும் உண்மையே; அதில் என்ன சந்தேகம்?" என்ருள் விஜயா.

விலாஸ் மிக உற்சாகத்துடன் பிரசங்கஞ் செய்ய ஆரம்பித்துவிட்டான். "பந்துவாயினும் சரி, மித்திரனுயினும் சரி, ஒழுக்க முறை தவறி நடப்பானுயின் அவனைக் கண்டிப்பது நம் கடமை. ஜகதீசருடைய சொத்து முழுதும் நியாயப்படி நம்மைச் சேரவேண்டியது. அவர் மகன், தந்தையின் கடனைத் தீர்த்துவிட்டால் நலமே. அவனுல் தீர்க்க முடியாவிட்டால், இந்த க்ஷணமே அவனுடைய சொத்து முழுவதையும் நாம் கைப்பற்றுவதே உசிதம். ஏனென்ருல் நாம் அப்பொருளைக்கொண்டு அநேக நற்காரியங்களைச் செய்யலாம். சமாஜத்தைச் சேர்ந்த யோக்கியமுள்ள ஒரு மாணவனை உயர்தரக் கல்விக்காகச் சீமைக்குக் கூட அனுப்பலாம். சமாஜத்தின் கொள்கைகளைப் பரவச் செய்யலாம். அப்பொருளைக் கொண்டு நாம் என்ன வேண்டுமானுலும் செய்யமுடியும். நீங்களே சொல்லுங்க

ளேன் : நாம் ஏன் அப்படிச் செய்யக்கூடாது ? மேலும், ஜகதீசரோ, அல்லது அவர் மகனோ, நம் சமாஜத்தைச் சேர்ந்தவர்களல்ல. அப்படியிருக்க, அவன்மீது இரக்கங் காட்ட வேண்டுமென்று என்ன அவசியம் ஏற்பட்டிருக்கிறது ? தாங்கள் மட்டும் சம்மதித்துவிட்டால், தந்தையார் எல்லாக் காரியங்களையும் இனிது முடித்துவிடுவார். ஜகதீசருடைய சொத்து முழுதும் ஜப்தி செய்யப்படும். தங்கள் சம்மதத்தைப் பெறுவதற்காகத்தான் என்னை அவர் இங்கே அனுப்பியிருக்கிறார்."

விஜயா, பரகதியடைந்த தன் பிதாவின் அந்திம வார்த்தைகளைப் பற்றிச் சிந்திக்கலானுள். ஒரு பதிலும் அவளால் திடீரென்று சொல்வதற்கு முடியவில்லை. அவளுடைய தயக்கத்தைக்கண்ட விலாஸ் அழுத்தமாக உரத்த குரலில், " இவ்விஷயத்தில் கொஞ்சமேனும் தயக்கமாகாது. அது மஹா பாவம் ; பலஹீனம் ! என் மனத்தில் நான் ஒரு தீர்மானம் செய்திருக்கிறேன். ஜகதீசருடைய வீட்டில், தங்கள் பெயரால் ஒரு பிரம்ம சமாஜக்கோவிலை நிறுவ உத்தேசித்திருக்கிறேன். கிராமங்களில் எங்குமே அம்மாதிரிக் கோவில் இல்லை. கல்வியறிவில்லாத கிராமத்து ஜனங்களுக்குத் தர்மோபதேசம் செய்யவேண்டும். நீங்கள் சற்று யோசித்துப் பாருங்கள். இந்தக் கிராமத்து மூட ஜனங்களின் கொடுமை பொறுக்கமாட்டாமல் அல்லவா, தங்கள் பிதா கிராமத்தைவிட்டு வரவேண்டியிருந்தது ? தாங்கள் அவருடைய புத்திரியல்லவா ? தங்கள் பிதாவுக்கு அவர்கள் செய்த அபகாரத்துக்குப் பதிலாக உபகாரம் செய்து தங்கள் பெருந்தன்மையை நிலைநாட்ட வேண்டாமா ? சொல்லுங்கள். தாங்கள் என்ன நினைக்கிறீர்கள் ?" என்று கேட்டான்.

விஜயா பரபரப்புடன் எழுந்திருந்தாள். விலாஸ் மிகுந்த கர்வத்துடன், "சற்று யோசித்துப் பாருங்கள். தேசம் முழுவதும் தங்களுக்கு எத்தகைய பெயர் உண்டாகும்! எத்தகைய கீர்த்தி பரவும்! பிரம்மசமாஜம் ஓர் உயிருள்ள தர்ம ஸ்தாபனம் என்பதைச் சநாதனி ஹிந்துக்கள் இனிமேல் ஒப்புக்கொள்ளாமலிருக்க முடியாது. அதில், வேலை செய்பவர்கள் சத்தியசீலர்கள், உதாரகுணமுடையவர்கள், தன்னலத் தியாகிகள், பகைவரையும் அன்போடு நோக்கும் பான்மை வாய்ந்தவர்கள் என்பதை அறிவார்கள். எந்த மஹாத்மாவைக் கிராமத்தினின்றும், சமூகத்தினின்றும் துரத்தினார்களோ, அவருடைய புதல்வி, அதே ஜனங்களின் நன்மைக்காக இத்தகைய அருந்தியாகஞ் செய்தால், அந்தக் கீர்த்தி பாரத தேசம் முழுவதும் பரவாதா? நீங்களே சொல்லுங்கள்" என்றான்.

இவ்விதம் சொல்லி விலாஸ் விஹாரி முன்னாலிருந்த மேஜையின்மீது தன் கையை ஓங்கியடித்தான். அதைக் கேட்டு விஜயா ஆனந்த பரவசமானாள். தனக்கு வரப் போகும் கீர்த்தியையும், பெயரையும் நினைத்து நினைத்து அவள் பூரித்தாள். அது விஷயத்தில் தன் பூரண சம்மதத்தை விலாஸிற்குத் தெரிவித்தாள். "அவருடைய குமாரர் பெயர் நரேந்திரன் என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். அவர் இப்பொழுது எங்கிருக்கிறார் என்பது தங்களுக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

விலாஸ் :— தெரியும். தந்தையின் மரணத்தைக் கேள்வியுற்று, அவன் கிராமத்திற்கு வந்திருந்தான். இப்பொழுது அவன் கிராமத்திலேயேதான் இருக்கிறான்.

விஜயா :—அவருடன் தங்களுக்குப் பரிசயமுண்டா?

"பரிச்சயமா? சீ! அவனுடனா? என்னை நீங்கள் என்னவென்று நினைத்தீர்கள்?" என்று சொல்லி விலாஸ் சற்று நகைத்தான்; "அவனும் ஒரு மனுஷனா அவனோடு நாம் சிநேகம் செய்து பேச்சு வார்த்தை வைத்துக்கொள்வதற்கு? நான் அவனோடு பேசவேண்டுமென்று மனதில்கூட நினைக்க வில்லையே. ஆம், அன்றைய தினம் பித்துப் பிடித்தவன்போல் ஒருவன் வழியில் தென்பட்டான். 'இவன் யார்?' என்று ஆச்சரியத்துடன் கிராமத்தான் ஒருவனைக் கேட்டேன். அவன்தான் ஜகதீசருடைய புத்திரன் நரேந்திரனென்று அவன் சொன்னான். நான் அவனை நன்றாய்க்கூடப் பார்க்க வில்லை. பின்னால் பார்த்தாலும் ஒரு வேளை அடையாளங் கண்டுபிடிக்க முடியுமோ என்னவோ!"

"பித்தனைப் போலவா இருக்கிறான்? சீமையிலிருந்து டாக்டர் பரீக்ஷையில் தேர்ச்சியடைந்து வந்திருக்கிறான் என்றல்லவா சொன்னார்கள்!"

விலாஸ் விஹாரி அத்தியந்த வெறுப்புடன் முகத்தைச் சுளித்துக்கொண்டு, "அசல் பித்தன். டாக்டர் என்றா சொல்லுகிறீர்கள்? எனக்கென்னவோ நம்பிக்கையில்லை. கொக்குப்போல் வளர்ந்திருக்கிறான். வியாதியஸ்தன்போல் தோன்றுகிறது. தூரத்திலிருந்தே எலும்புகளை ஒவ்வொன்றாய் எண்ணிவிடலாம்" என்று சொன்னான்.

விலாஸ் உண்மையிலேயே முகலக்ஷணம் வாய்ந்தவன். தன்னழகைக் குறித்துப் பெருமைகொள்ள அவனுக்கு அதிகாரமுண்டு. உருட்டித் திரட்டிவிட்டதுபோல், நல்ல திடகாத்திரமான சரீரம் வாய்ந்தவன். நல்ல ஜவான். நரேந்திரனைப்பற்றி இன்னும் ஏதோ சொல்ல அவன் வாயெடுத்தான். அதற்குள் விஜயா நடுவில் குறுக்கிட்டு, "சரி, விலாஸ் பாபு, நீங்கள் சொல்வதுபோல், நாம் ஜகதீஷ் பாபுவினுடைய வீட்டை ஸ்வாதீனப் படுத்திக்கொண்டால், கிராமத்து

ஜனங்கள் நம்மை நிந்திக்கமாட்டார்களா? அதற்காக நம்மைப் பகைக்கமாட்டார்களா?" என்று கேட்டாள்.

விலாஸ்:—ஒருகாலுமில்லை. சுற்றிலுமுள்ள ஐந்தாறு கிராமங்களில், ஒழுக்கங் கெட்ட ஜகதீசன்மீது இரக்கங் கொள்பவர்கள் ஒருவரையேனும் பார்க்க முடியாது.

பின்னர், கொஞ்சம் சிரித்துக்கொண்டே சொல்லலானன்: "அப்படியே இருந்தாலும், அதில் ஒரு ஹானியும் இல்லை. என்னுடம்பில் உயிர் இருக்கும்வரை, உங்களுக்கு அதைப்பற்றி ஒரு கவலையும் வேண்டாம். ஆனால் என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், நீங்கள் கொஞ்ச நாளைக்குக் கிராமத்தில் சென்று வசிக்கவேண்டுமென்பதே.

விஜயா:—ஏன்? அப்பா என்னை ஒருபோதும் அங்கே கூட்டிக்கொண்டு போனதில்லையே?

விலாஸ்:—(உரத்த குரலில்) அதனால்தான் நீங்கள் அங்கே வசிக்கவேண்டுமென்று நான் சொல்கிறேன். நீங்கள் கட்டாயம் அங்கே போகவேண்டும். குடிகளும் தங்கள் ஜமீன்தாரிணியை ஒருமுறை பார்க்கட்டுமே. எனக்கென்னவோ, இந்த பாக்கியத்தை அவர்களுக்கு மறுப்பது மஹா பாபமென்று தோன்றுகிறது.

விஜயாவின் முகம் வெட்கத்தினால் சிவந்தது. அவள் தலை குனிந்தவண்ணமே என்ன சொல்வதற்கு யத்தனித்தாளோ தெரியவில்லை. ஆனால் விலாஸ் நடுவில் குறுக்கிட்டு, "இதில் கொஞ்சமேனும் தயங்குவதற்கே இடமில்லை; சற்று யோசித்துப் பாருங்கள்; அங்கே நீங்கள் செய்யவேண்டிய வேலைகள் எத்தனை இருக்கின்றன! நான் இன்று உங்களைக் கேட்கிறேன்: தங்கள் பிதா, கிராமத்திற்குத் தலைவராயிருந்தும், சில வெறிநாய்கள் குரைப்பதற்காகப் பயந்து, கிராமத்தைவிட்டு வந்தாரே அது சரியா? நாய்கள் குரைத்துக் கொண்டுதான் இருக்கின்றன; ஆனால் யானை தன் வழியே

செல்கிறது. பிரம்ம சமாஜத்திற்கு அது அழகாகுமா? பிரம்ம சமாஜமேன், எந்த சமாஜத்திற்காவது அது அழகாகுமா?" என்ருன்.

விஜயா சற்றுநேரம் மௌனமா யிருந்தபின், "கிராமத்திலுள்ள நம் வீடு பழுதுபாராமல், பாழாய்க் கிடக்கிறதே, அதில் எப்படி வசிக்கமுடியும்?" என்ருள்.

விலாஸ் :—அதென்ன பெரிய காரியம்? நீங்கள் உத்தரவு கொடுத்தால் போதும் - அங்கே போவதற்கு மட்டும் சம்மதியுங்கள். ஏழெட்டுத் தினங்களுக்குள் நான் அதைப் பழுதுபார்த்து விடுகிறேன். என்மேல் நம்பிக்கை வையுங்கள். அதைத் தங்கள் அந்தஸ்திற்கேற்ற வீடாக்கி விடுகிறேன். இப்பொழுது வெகுநாட்களாக ஒரே எண்ணந்தான் என் மனத்தில் மீண்டும் மீண்டும் உதிக்கிறது. தங்களை என் லக்ஷியமாக வைத்துக்கொண்டு அநேக அரும்பெருங் காரியங்களை வெகு எளிதில் முடித்துவிடக்கூடும் என்று தோன்றுகிறது.

விஜயா கிராமத்திற்குச் செல்லச் சம்மதித்தாள். அதன் பின் விலாஸ் அங்கிருந்து சென்ருன். உட்கார்ந்த இடத்தை விட்டு அசையாமல் விஜயா தன்னுள்ளே யோசிக்கலானுள் :

பிறந்ததிலிருந்து அன்றுவரை அவள் தன் கிராமத்திற்குச் சென்றதில்லை. ஆனல் தந்தையிடம் அதைப்பற்றி அடிக்கடி கேள்விப்பட்டிருக்கிருள். கிராமத்தைப்பற்றிப் பேசும்பொழுதெல்லாம், தந்தையின் உற்சாகமும் ஆனந்தமும் கரை கடந்துவிடும். அக்காலங்களில் கிராமத்தைப் பற்றிய பேச்சு, விஜயாவின் மனத்தை அவ்வளவு தூரம் ஆகர்ஷிக்கவில்லை. கேட்ட நிமிடமே அதை மறந்துவிடுவாள். ஆனல் இன்று ஏனே தெரியவில்லை, கிராம வாழ்க்கை அவளை மிக வசீகரித்தது. கிராமத்திலுள்ள வீடு, கல்கத்தாவிலிருக்கும் வீட்டைப்போல் பெரிதாகவும், அழ

காகவும் இல்லாவிட்டாலும், அது அவளுடைய மூதாதையர்களின் பூர்விக வீடல்லவா! அவர்கள் சுகத்திலும், துக்கத்திலும், நன்மையிலும், தீமையிலும் தங்கள் வாழ்க்கையை அங்கேயே கழித்திருக்கிறார்கள். அவளும் ஏன் அங்கே வசிக்கக்கூடாது?

சூரிய வெளிச்சம் நுழையாதபடி, அவர்கள் வீட்டிற்கு முன்னலிருந்த ஒரு மாடி வீடு தடுத்துக்கொண்டிருந்தது. அவ்விஷயமாகத் தந்தைக்கும் மகளுக்கும் அநேக முறை சம்பாஷணை நடந்திருக்கிறது. சாயந்திர வேளைகளில், சாய்வு நாற்காலியில் அவளுடைய தந்தை படுத்துக்கொண்டு, நீண்ட பெருமூச்சுடன் அடிக்கடி சொல்வதுண்டு: "விஜயா, நான் கிராமத்தில் ஒருகாலும் இம்மாதிரி கஷ்டத்தை அனுபவித்ததில்லை. சூரியாஸ்தமன சுந்தரக்காட்சியைப் பார்ப்பதற்கு அங்கே எந்த மாடி வீடும் இடையூறாக நின்றதில்லை. நீ அதைப் பார்த்ததில்லையே, விஜயா! நமது பூந்தோட்டத்தின் ஓரத்தில் ஓடும் சிற்றாறு, நிர்மலமான ஜலத்தினல் நிறைந்து, அலைகள் ஒன்றன்மேல் ஒன்று மோதிக் கர்ஜித்துக்கொண்டு, அபூர்வ சோபையுடன் ஓடுவதை என் மனக்கண்களினல் நான் இன்றும் பார்க்கிறேன். அதன் மறுகரையில் கண்ணெட்டும் வரை, வயலுக்குப்பின் வயலும், மைதானத்துக்குப்பின் மைதானமும் தோன்றும்; அதற்கப்பால் ஆகாயத்தின் அடிவானத்தில் காணப்படும் சூரியன் கிராமத்தை விட்டுச் செல்வதற்குத் தயங்குவது போல் தோற்றமளிப்பான். அதோ பார் விஜயா, இச்சந்தின் முனையில் ஜனங்கள் அவரவர்களுடைய வேலையை முடித்துவிட்டு, கூட்டங் கூட்டமாகத் தங்கள் வீடுகளை நோக்கிச் சென்று கொண்டிருக்கிறார்கள். கேவலம் நமது கண்களுக்குத் தென்படும் இந்தப் பத்துப்பன்னிரண்டடி தூரத்திற்கப்புறம், அவர்கள்

என்ன செய்கிறார்கள் என்பதை நாம் பார்க்க முடிவதில்லை. அவர்களில் ஒருவரேனும் நமக்குத் தெரிவதில்லை. இதே மாதிரி நமது கிராமத்திலும் ஜனங்கள் நாள் முழுவதும் வயல்களில் வேலை செய்துவிட்டு மாலையில் தங்கள் தங்கள் வீடுகளை நோக்கிச் செல்வதைப் பார்த்திருக்கிறேன். ஆனால் அவர்கள் எல்லோரும் எனக்குத் தெரிந்தவர்கள். அவர்கள் வீட்டிலுள்ள பசு, கன்று, எருது முதற்கொண்டு, எல்லா விஷயங்களும் எனக்குத் தெரியும் " என்பார்.

இவ்விதம் சொல்லி அவர் திடீரென்று நெஞ்சையுடைக்கும் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு மௌனமாகிவிடுவார். இத்தனை சுகத்திலும், ஐசுவரியத்திலுங்கூட அவர் தாம் விட்டுவந்த கிராமத்தையே எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருந்தார். சிற்சில சமயங்களில், தந்தையின் வருத்தம், விஜயாவுக்கும் வெளிப்படையாகத் தெரியும். கிராமத்தை விட்டுவந்ததற்காக அவர் ஏன் இவ்வளவு வருந்துகிறார் என்று, விஜயா தன் வாழ்க்கையில் ஒரு நாளும் சிந்தித்துப் பார்த்ததில்லை. ஆனால் அக்காரணம் இன்று அவளுக்கு ஸ்பஷ்டமாக விளங்கியது. ஜனத்திரள் நிறைந்த கல்கத்தாவிலுங்கூட வனமாலி தனிமையாக நடத்திய துன்ப வாழ்க்கை இன்று அவள் கண்களுக்கு முன்னால் ஒரு சித்திரம்போல் தோன்றியது. அதைக் கண்டதும் அவள் பயந்து நடுங்கினாள். அவள் கண்ணாலும்கூடப் பார்த்திராத கிராமமும், வீடும் இன்று ஓர் அபூர்வ சக்தியால் அவளைத் தம்பால் இழுத்தது ஆச்சரியமன்றோ !

## நான்காம் அத்தியாயம்

## ஒரு வாலிபன்

அநேக வருடங்களாய்க் காலியாக்கிடந்த ஜமீன்தாருடைய வீடு, இப்போது விலாஸின் மேற்பார்வையில் பழுது பார்க்கப்பட்டது. தட்டுமுட்டு ஸாமான்களும் இன்னும் அநேக விசித்திரப் பொருள்களும், மாட்டு வண்டிகளில் தினந்தோறும் வரவாரம்பித்தன. ஜமீன்தாரின் ஒரே புதல்வி கிராமத்தில் வசிக்கவருகிறாள் என்ற விஷயம் கேவலம் கிருஷ்ணப்பூரில் மட்டுமல்ல, ராதாப்பூர், வ்ரஜ்பூர், திகடா முதலிய சுற்றுப்புறத்திலுள்ள கிராமங்களில் எல்லாம் பரவ ஆரம்பித்தது. குடிகளிடையே ஓர் அருவருப்புத் தோன்றலாயிற்று. ஏனென்றால் ஸதா ஜமீன்தாரின் கண்ணெதிரே வாழ்வது அவர்களுக்குக் கஷ்டமாக இருந்தது. இவ்வளவு நாளும், கிராமத்தில் ஜமீன்தார் வசிக்காததால், அதே அவர்களுக்கு வழக்கமாகி விட்டது. ஆகையினால், ஜமீன்தாருடைய குமாரத்தி அங்கு மீண்டும் வந்து வசிப்பது அவர்களுக்குக் கஷ்டமாகத் தோன்றியது. மானேஜர் ராஸ்விஹாரியின் பிரபல அடக்குமுறை காரணமாகக் குடிகளின் கஷ்டத்திற்குக் குறைவில்லை. அதனுடன் ஜமீன்தாரின் புதல்வி வருவதால், ஏதாவது ஒரு புது உபத்திரவம் உண்டாகும் என்ற எண்ணம் ஜனங்களை மேலும் துக்கத்திலாழ்த்தியது. கடைகளிலும், வீதிகளிலும், வீடுகளிலும், எங்கும் இதே பேச்சாயிருந்தது. ஜமீன்தார் வனமாலி உயிரோடிருந்த காலத்தில், எத்தனையோ கஷ்டங்களிருந்தாலும் ஒரு சுகமிருந்தது. கல்கத்தாவிற்கு யாராவது

சென்று, வனமாலியின் முன்னால் தங்கள் குறைகளைச் சொல்லி அழுவார்களேயாகில், எங்ஙனமாயினும் அக்குறைகள் நிவர்த்தி செய்யப்படும். அவர் எதையும் தீர விசாரித்தே செய்வார். ஆனால் ஜமீன்தாரின் புதல்வி விஜயா இளம்பிராயத்தினள்; அனுபவம் போதாது. ராஸ்விஹாரியின் புத்திரனுக்கும் அவளுக்கும் கலியாணம் ஆகப் போகிறது என்ற செய்தியும் கிராமத்தில் பரவிவிட்டது. விஜயாவை அசல் இங்கிலீஷ்காரியென்றும், மிலேச்ச ஸ்திரீயென்றும் ஜனங்கள் நினைத்துக் கொண்டிருந்தார்கள். வைதிக ஆசாரம் ஒன்றையும் அவள் அனுஷ்டிப்பதில்லை. ராஸ்விஹாரியின் அதிகாரத்தையும், கொடுமையையும் நினைத்து நினைத்துக் கிராமத்து ஜனங்கள் யாவரும் நடுங்க ஆரம்பித்தார்கள். பிராமணனாகட்டும், அல்லாதானாகட்டும், யாவரும் தங்கள் ஆசாரங் கெட்டுவிடுமென்று பயந்தார்கள். இத்தகைய பயத்திலும் கவலையிலும் ஒரு வருஷங்கழிந்தது.

சரத்கால ஆரம்பத்தில் ஓர் இனிய காலை வேளை. அன்று ஜமீன்தாருடைய இளம் புதல்வி, ஹூக்ளி ஸ்டேஷனிலிருந்து, இரண்டு அழகான குதிரைகள் பூட்டிய சாரட்டு வண்டியில் ஏறிக்கொண்டு, நூற்றுக்கணக்கான ஸ்திரீ புருஷர்கள் பயமும் சந்தோஷமும் நிறைந்த பார்வையுடன் நோக்க, தன் மூதாதையரின் பழைய வீட்டில் வந்திறங்கினாள்.

ஒரு ஹிந்து ஸ்திரீ, 18, 19 வயதாகிவிட்டது; ஆனால் இன்னும் விவாகமாகவில்லை! அவள் ஜோடு, மேல் ஜோடு அணிந்துகொண்டு முக்காடில்லாமல் வெளியேறுகிறாள். எங்கே வேண்டுமானாலும் போகிறாள்; எவன் வீட்டிலும் சாப்பிடுகிறாள் - கிராமத்து ஜனங்கள், தங்களுக்குள்ளேயே இரகசியமாக அவளை இம்மாதிரி நிந்தனை செய்யலானார்கள். ஆனால் மற்றொருபுறம் குடியானவர்கள் இருவர் மூவர்

சேர்ந்துகொண்டு, தங்களிடமுள்ள அபூர்வமான பொருள்களுடன் ஜமீன்தாரிணியைப் பேட்டிகாண வந்தார்கள். அவள் காலாலிட்ட வேலையைத் தலையால் செய்தார்கள். இவ்விதம் 5, 6 தினங்கள் கழிந்தன. ஒரு நாட்காலை தேநீர் அருந்திய பின், விஜயாவும் விலாஸனும் ஜமீன் விஷயங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தார்கள். அச்சமயம் வேலைக்காரன் வந்து யாரோ ஒரு கனவான் பேட்டிகாண வந்திருப்பதாகச் சொன்னான். "சரி, இங்கே அழைத்துக்கொண்டுவா" என்றாள் விஜயா.

விஜயாவினுடைய குடிகள் யாவரும் சில தினங்களாகத் தங்களிடமுள்ள அரிய பொருள்களுடன் ஜமீன்தாரிணியைப் பேட்டிகாண வந்துகொண்டிருந்தார்கள். ஆகையினால், யாரோ ஒருவர் வந்திருக்கிறார் என்று சொன்னவுடன், விஜயா அதைப்பற்றி விசேஷமான கவனம் ஒன்றும்செலுத்தவில்லை. ஆனால் க்ஷணநேரத்திற்கப்புறம், வேலைக்காரனுக்குப் பின்னால் கண்ணியமும், பெருமையும் வாய்ந்த ஒரு கனவான் வருவதைக் கண்டதும், விஜயா ஆச்சரியமுற்றாள். நூதனமாக வந்த கனவானுக்கு, 24 அல்லது 25 வயதிருக்கலாம். நல்ல உயரம்; ஆனால் உயரத்திற்கேற்ற பருமனில்லை. தோற்றத்தில் திடகாத்திரமாகத் தெரியவில்லை. நிறம் நல்லசிவப்பு. முறுக்கிவிடப்பட்ட மீசை. பாதங்களில் 'ஸ்லிப்பர்' அணிந்திருந்தார். உடம்பில் குடுத்துணியில்லை; ஒரு முரட்டு அங்கவஸ்திரத்தைப் போர்த்தியிருந்தார். புரிநூல் இடுப்பிற்குக் கீழே தொங்கிக்கொண்டிருந்தது. உள்ளே வந்ததும் விஜயாவிற்கு நமஸ்காரம் செய்துவிட்டு, ஒரு நாற்காலியை இழுத்து அதில் உட்கார்ந்தார். இதற்கு முன் பேட்டிகாண வந்தவர்களெல்லாம், விஜயாவின் பாதங்களில் வைப்பதற்காக ஏதாவது பொருள்கள் கொண்டுவந்ததோடல்லாமல், மிகுந்த பயபக்தியுட

னும் வந்தார்கள். ஆனால் இம்மனிதருடைய நடத்தையில் பயம் லவலேசங்கூட இல்லை. அவருடைய நடத்தை கேவலம் விஜயாவிற்கு மட்டும் ஆச்சரியத்தை விளைக்கவில்லை; விலாஸுங்கூட ஸ்தம்பித்துவிட்டான். விலாஸ் அடுத்த கிராமத்துக்காரனாயிருந்தாலும், இக்கிராமத்து ஜனங்கள் யாவரும் அவனுக்குத் தெரிந்தவர்களே. இக்கனவானை மாத்திரம் அவன் முன்னால் பார்த்ததே இல்லை.

வந்த புதிய கனவானே முதலில் பேசவாரம்பித்தார். "என்னுடைய மாமா பூரணசந்திர காங்குலி தங்களுடைய அண்டை வீட்டுக்காரர். தங்கள் வீட்டிற்கு அடுத்தாற் போலிருக்கும் இவ்வீடு அவருடையது. அவருடைய பாட்டனார் முப்பாட்டனார் காலத்திலிருந்து நவராத்திரியின்போது நடந்துவந்த துர்க்காபூஜையை இவ்வருடம் தாங்கள் நிறுத்த விரும்புவதாகக் கேள்விப்பட்டு மிக்க ஆச்சரியம் அடைந்தேன். அதன் அர்த்தம் என்ன?" என்றார்.

இவ்விதம் சொல்லி அவ்விளைஞர் விஜயாவின் பக்கம் நோக்கலானார். கேள்வியையும், கேள்வி கேட்ட விதத்தையும் கண்டு விஜயா பிரமித்துவிட்டாள்; மனதில் சிறிது கோபமுங் கொண்டாள். ஆனால் அவள் ஒன்றும் பதில் சொல்லவில்லை. விலாஸ் பதில் சொன்னான்: "அதற்காக நீங்கள் உங்களுடைய மாமாவின் சார்பாகச் சண்டைபோட வந்திருக்கிறீர்களா, என்ன? நீங்கள் யாரோடு பேசுகிறீர்கள் என்பதை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்" என்று படபடப்புடன் சொன்னான்.

வந்தவர் சிரித்துக்கொண்டே, "நான் அதை மறக்கவில்லை. மேலும் சண்டையிடுவதற்காகவும் நான் வரவில்லை. ஆனால் அவ்விஷயத்தை என்னால் நம்ப முடியவில்லை.

ஆகையினுல் நேருக்குநேர் நன்ருய் விசாரித்து அறிந்து கொள்ளலாம் என்று வந்திருக்கிறேன்" என்ருர்.

"ஏன் நம்பிக்கை இல்லை ?"

"எப்படி நம்பமுடியும்? அர்த்தமில்லாமல் பிறருடைய மத விஷயங்களில் தலையிடுவது புத்திமான்கள் செய்கை யாகாது. ஆகையால் பெரிய மனிதர்கள் சம்பந்தப்பட்டிருக்கும் விஷயத்தில், இம்மாதிரி அர்த்தமற்ற செய்திகளை முதலில் நம்பாமலிருப்பதே நலம் என்பது என் அபிப் பிராயம்."

தத்துவார்த்த விஷயங்களில் தர்க்கம் செய்வதென்ருல், விலாஸிற்குப் பால்யத்திலிருந்தே மிகவும் பிரியம். உற்சாகத்தால் அவனுடைய முகம் சோபையுற்றது; "நீங்கள் எதை அர்த்தமற்றது என்று சொல்லுகிறீர்களோ, அது மற்றவர்களுக்கு அர்த்தமுள்ளதாகத் தோன்றலாம். எங்கள் அபிப் பிராயத்தில் விக்கிரஹ ஆராதனை தர்ம விரோதமானது. அதை நிறுத்துவது சரி என்பதே எங்களுடைய எண்ணம்."

வந்தவர் கம்பீரத்துடனும் ஆச்சரியத்துடனும் விஜயாவின் முகத்தை நோக்கி, "நீங்களும் அதே மாதிரி தான் சொல்லுகிறீர்களா ?" என்ருர்.

அவருடைய ஆச்சரியம் விஜயாவின் ஹிருதயத்தைப் புண்படுத்தியதுபோல் இருந்தது. ஆனுல் அவள் அதை மறைத்துக் கொண்டு சகஜபாவத்துடன், "அதற்கு விரோதமான அபிப்பிராயத்தை என்னிடத்தில் கேட்கலாம் என்ற நம்பிக்கையுடனு தாங்கள் வந்தீர்கள் ?" என்ருள்.

விலாஸ் கர்வத்துடன் சிரித்தான்; "அப்படித்தான் போலும்! இவர் அந்நியர். உங்களைப்பற்றி இவருக்கு ஒன்றுந் தெரியாதுபோல் தோன்றுகிறது" என்ருன்.

வந்தவர் க்ஷணநேரம் விஜயாவின் முகத்தைப் பேசாமல் பார்த்துக்கொண்டிருந்தார். பின்பு அவளையே நோக்கிச்

சொல்லலானார்: "நான் அந்நியன் அல்ல; என்றாலும் இவ்வூர்க்காரனல்ல என்பது உண்மை. தாங்கள் இம்மாதிரிச் சொல்வீர்களென்று நான் நினைக்கவில்லை. கடவுள் உருவமுள்ளவரா, உருவமற்றவரா என்ற பழைய விவாதத்தை நான் இப்பொழுது கிளப்ப விரும்பவில்லை. நீங்களெல்லாம் பிரம்ம சமாஜிகளென்பதை நான் அறிவேன். ஆனால் கேவலம் இதை விக்ரஹ ஆராதனை என்ற ஹோதாவில் மட்டும் எடுக்கவேண்டாம். கிராமத்தில் இது ஒரே உற்சவந்தான் நடக்கிறது. ஆதி காலந்தொட்டு இது நடந்துவருகிறது. நவராத்திரி கொண்டாடுவதற்காக ஜனங்கள் வருஷ முழுவதும் ஆவலுடன் இருக்கிறார்கள். அது எப்பொழுது வருமென்று எதிர்பார்த்துக்கொண்டே இருக்கிறார்கள்"

இவ்விதம் சொல்லி அக்கனவான் விஜயாவின் முகத்தை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்துப் பின்னும் சொல்லலுற்றார்: "கிராமம் தங்களுடையது; அதிலுள்ளவர்கள் தங்கள் குடிகள். தாங்கள் குடிகளின் தாயார் ஸ்தானத்தில் இருக்கிறீர்கள். தங்கள் வரவினால் கிராம உற்சவத்தின் ஆடம்பரம் பன்மடங்கு அதிகரிக்கவேண்டும். ஜனங்களின் நம்பிக்கையும் அதுவே. ஆனால் அவ்விதஞ் செய்யாமல் நிரபராதிகளான தங்கள் குடிகளின்மீது, இத்தகைய கொடுந் தண்டனையை விதிக்கத் தங்களுக்கு மனம் வருமா? இதை யார் நம்புவார்கள்? தாங்கள் அத்தகைய நிஷ்டூரம் வாய்ந்தவர்கள் என்று நான் என்னவோ நம்பமாட்டேன்" என்று சொல்லி நிறுத்தினார்.

விஜயாவால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. தாய்க்கும் பிள்ளைகளுக்குமுள்ள சம்பந்தம் தனக்கும் குடிகளுக்குமிருக்கிறதென்பதைக் கேட்டவுடன் அவளுடைய கோமள ஹிருதயம் அன்பினாலும் அருளாலும் நிறைந்தது. பிரஜைகளின் நிராசையையும், துக்கத்தையும் நினைக்கும்

பொழுது, அவள் மனம் வேதனை யடைந்தது. சிறிது நேரம் வரை ஒருவரும் ஒன்றும்பேசவில்லை.

விஜயா பேசாமலிருப்பதைக் கண்டதும், விலாஸ் விஹாரியின் உள்ளங் கொதித்தது. "நீங்கள் ஏதோ பிரமாதமாகப் பேச ஆரம்பித்துவிட்டீர்கள். உங்களோடு விக்கிரஹ ஆராதனையைப்பற்றி விவாதிப்பதற்கு எங்களுக்கு நேரமில்லை. உங்களுடைய மாமா ஒன்றல்ல நூறு விக்ரஹங்களைச் செய்துகொண்டு, தம் வீட்டில் உட்கார்ந்து தூர்க்கை பூஜை செய்யட்டும். அதைப்பற்றி எங்களுக்கு ஒரு கவலையுமில்லை. ஆனால் இரவும் பகலும் மணி, வாத்தியம், மேளம் முதலியவைகளை அடித்து ஜமீன்தாரிணி அவர்களைத் தொந்தரவு செய்யவேண்டாமென்றுதான் நான் சொல்லுகிறேன்" என்று விலாஸ்விஹாரிர் கோபத்துடனும் படபடப்புடனும் சொன்னான்.

"இரவும் பகலும் மேளவாத்தியம் வாசிப்பதில்லை. பூஜையில் ஆரத்தி, நைவேத்தியம், ஸ்ரீபாராதனை முதலியவைகள் நடக்கும்பொழுதுதான் வாத்தியம் வாசிக்கவேண்டியிருக்கும். உற்சவமென்றால் சிறிது மேளதாளம் இருக்கத்தான் செய்யும்" என்று அக்கனவான் சிரித்துக்கொண்டே சொன்னார்.

பின்பு விஜயாவை நோக்கி மீண்டும் சொல்லலுற்றார்: "அதனால் தங்களுக்குக் கொஞ்சநேரம் சிறிது அசௌகரியம் ஏற்படுமாயின், அதைச் சகித்துக்கொள்வது தங்கள் கடமை. நீங்கள் எங்களுக்கெல்லாம் தாய் போன்றவர்கள். பிள்ளைகளின் ஆனந்தத்தினால் உண்டாகும் சிறிது உபத்திரவத்தைத் தாங்கள்கூடச் சகிக்காவிட்டால் வேறு யார் சகிப்பார்கள்?"

விஜயா முன்போலவே பேசாமல் உட்கார்ந்திருந்தாள். விலாஸ் அத்தியந்த வெறுப்புடன் சிரித்தான். "உங்கள்

காரியங் கைகூடுவதற்காக நீங்கள் கற்பனை செய்திருக்கும் மாதா - புத்திரன் என்ற உபமானம் கேட்பதற்கு எவ்வளவு அழகாயிருக்கிறது ! நான் உங்களை ஒன்று கேட்கிறேன் : நீங்கள் முஸல்மானாக விருந்து, உங்கள் மாமாவின் காது களில் முகரம் வாத்தியத்தை வாசித்து அட்டஹாசம் செய்து கொண்டிருந்திர்களானால், அதை உங்கள் மாமா விரும்புவாரா ? அதிக வாக்குவாதம் செய்வதற்கு எங் களுக்கு இஷ்டமில்லை. தகப்பனார் என்ன உத்தரவிட்டிருக் கிறாரோ அந்தப்படிதான் நடக்கும்; அதை மாற்றமுடியாது" என்றான் விலாஸ்விஹாரி.

விலாஸின் படபடத்த வார்த்தைகளைக் கேட்டவுடன், கனவான் கோபமுற்றார். அவர் விலாஸின் முகத்தை முறைத்துப் பார்த்து, " உங்கள் தந்தை யார் ? இதைத் தடுப்பதற்கு அவருக்கு என்ன அதிகாரம் இருக்கிறது என்று எனக்குத் தெரியவில்லை. முகரத்திற்கும் துர்க்கா பூஜைக்கும் எவ்வித சம்பந்தமுமில்லை. நான் தங்களையே கேட் கிறேன் : துர்க்கா பூஜையில் வாசிக்கப்படும் மேளதாளங் களுக்குப் பதிலாக, இன்று யாராவது ஒரு முஸல்மான் வந்து மாரடித்துக்கொண்டு பறையடிப்பானாகில் அவனை நீங்கள் என்ன செய்வீர்கள் ? அவ்வுபத்திரவத்தைப் பேசா மல் சகித்துக்கொண்டுதானே இருக்கவேண்டும் ? நம் சகோதரர்களுக்கு மட்டும் அவ்வுரிமையை மறுத்தால், அது அநியாயமல்லாமல் வேறென்ன?" என்றார்.

விலாஸ் திடீரென்று நாற்காலியினின்றும் எழுந்து நின்றான். அவன் கண்கள் சிவந்தன. " தகப்பனார் விஷயத் தில் உஷாராய்ப் பேசு. முதலிலேயே உனக்கு எச்சரிக்கை செய்கிறேன். இல்லாவிட்டால் அவர் யார் என்பதையும் இதைத் தடுப்பதற்கு அவருக்கு என்ன அதிகாரம் இருக்கிற

தென்பதையும், நீ அறியும்படி செய்வேன்" என்று விலாஸ் உரத்த குரலில் கத்தினன்.

கனவான் ஆச்சரியத்துடன் விலாஸின் முகத்தை நோக்கினர். அதில் பயக்குறிகள் சிறிதுமில்லை. ஆனல் விஜயாவின் முகத்தில் சிறிது பயந் தோன்றியது. விலாஸின் நடத்தை விஜயாவிற்குப் பிடிக்கவில்லை. அவளுடைய வீட்டில் உட்கார்ந்துகொண்டு, அவளுடைய அதிதியைக் காரணமில்லாமல் இத்தகைய அவமானத்துக் குள்ளாக்குவதா! கோபத்தினுலும், லஜ்ஜையினுலும் விஜயாவின் முகம் சிவந்தது. கனவான் சிறிது நேரம் விலாஸின் முகத்தைப் பார்த்துக்கொண்டே இருந்தார். அதன் பின்பு விஜயாவை நோக்கிச் சொல்லலுற்ருர்: "என்னுடைய மாமா ஜமீன்தாரரல்ல. அவருடைய பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் சாதாரணமானவைகளாகவே இருக்கும். தங்களுடைய ஏழைக்குடிகளுக்கு வருஷம் முழுவதும் இந்த ஒரே சந்தோஷக் கொண்டாட்டந்தான் என்பதையும் தாங்கள் மறக்கவேண்டாம். இந்த உற்சவத்தின் ஆடம்பரத்தால் தங்களுக்குச் சிறிது அசௌகரியம் உண்டாகலாம். ஆனல் தங்கள் குடிகளின் சந்தோஷத்திற்காக, தாங்கள் இரண்டொரு தினங்களின் அசௌகரியத்தைப் பொறுத்துக் கொள்ளக்கூடாதா?"

விலாஸ் கோபமிகுதியால் உன்மத்தமடைந்தான். முன்னலிருந்த மேஜையின்மீது ஓங்கிக் கையால் அடித்து உரத்த குரலில், "முடியாது; ஒருகாலும் முடியாது. சில அறிவுகெட்ட குடியானவர்களுடைய பித்துக்கொளித்தனத்தையும், உபத்திரவத்தையும் சகித்துக் கொண்டிருப்பதற்காக நாங்கள் ஜமீன் ஆளவில்லை. வேறு ஏதாவது பேசுவதற்கில்லாவிட்டால் நீ போகலாம். வீணே எங்கள் காலத்தைப் போக்கவேண்டாம்" என்று சொன்னன்.

இவ்விதம் சொல்லி விலாஸ் கையினுல் வாசலைக் காட்டினுன். அவனுடைய அநாகரிகமான நடத்தையைக் கண்டு கனவான் சற்றுத் திடுக்கிட்டார். உடனே அவரால் ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை. ஆனுல் விஜயாவுக்கு அவளுடைய தகப்பனுர் கூறியிருந்த அறிவுரை வீணுகவில்லை. அவள் சாந்தத்துடனும் தைரியத்துடனும் விலாஸை நோக்கி, " தங்கள் தந்தையார் என்னைத் தன் புத்திரியைக் காட்டிலும் அதிகமாக நேசிக்கிறுர். ஆகையினுல், என்னுடைய அசௌகரியத்தை எண்ணி, அவர் இவர்களைத் துர்க்காபூஜை உற்சவத்தைக் கொண்டாட வேண்டாம் என்று சொல்லியிருப்பார். ஆனுல் நான் என்ன சொல்கிறேன் என்றுல், இரண்டொருதினங்கள் சிறிது அசௌகரியம் ஏற்பட்டாலும்........" என்று விஜயா தான் சொல்லவந்ததை முடிப்பதற்கு முன்பே விலாஸ் நடுவே குறுக்கிட்டு, "அவர்களுடைய ஆரவாரமும் கூக்குரலும் சகிக்கமுடியாததாக இருக்கும். அதெல்லாம் உங்களுக்குத் தெரியாது" என்று உரத்த குரலில் கத்தினுன்.

விஜயா சிரித்தாள்; "இரண்டு மூன்று தினங்களுக்குச் சிறிது ஆட்டமும் பாட்டமுமாயிருந்தால் ஒன்றும் முழுகிப் போய்விடாது! மேலும் தாங்கள் என்மீது கொண்ட அன்பின் காரணமாக எனக்கு எள்ளளவு அசௌகரியமும் ஏற்படக் கூடாதென்று நினைக்கிறீர்கள். ஆனுல், கல்கத்தாவாயிருந்தால், தாங்கள் என்ன செய்வீர்கள்? அங்கே யாராவது அறுபது நாழிகையும், காதுகளுக்குப் பக்கத்தில் பீரங்கி போட்டுக் கொண்டிருந்தாலும் பேசாமல் பொறுத்துக் கொண்டிருக்க வேண்டியதுதானே!"

கனவான் பக்கந்திரும்பி, சிரித்துக்கொண்டு மீண்டும் விஜயா, "வருடந்தோறும் தங்கள் மாமா எப்படி துர்க்கா பூஜை உற்சவத்தைக் கொண்டாடினுரோ, அப்படியே இவ் வருடமும் கொண்டாடலாம் என்று நீங்கள் அவரிடம்

சொல்லுங்கள். எனக்கு அதைப்பற்றிக் கொஞ்சமும் ஆக்ஷேபனை கிடையாது" என்றாள்.

கனவானும், விலாஸ் பாபுவும் இருவரும் ஆச்சரியத்துடன் விஜயாவின் முகத்தை நோக்கலானார்கள்.

"சரி, தாங்கள் போகலாம்" என்று விஜயா கனவானுக்கு நமஸ்காரம் செய்தாள். விஜயாவுக்குப் பிரதி நமஸ்காரம் செய்து விலாஸையும் நமஸ்கரித்துவிட்டுக் கனவான் மெள்ள வெளியேறினார். விலாஸ்விஹாரி வெடுக்கென்று முகத்தை இன்னொரு பக்கந் திருப்பிக்கொண்டான். கனவானுடைய நமஸ்காரத்துக்குக்கூடப் பதிலளிக்கவில்லை. அவர்கள் முன்பின் பார்த்திராத அக்கனவான்தான் ஜகதீசருடைய மகன் நரேந்திரன் என்பது விஜயாவுக்கோ அல்லது விலாஸுக்கோ தெரியாது.

# ஐந்தாம் அத்தியாயம்

## ராஸ் விஹாரி

நரேந்திரன் போன பிறகு க்ஷணநேரம்வரை விஜயா சிறிது துக்கத்துடன் மௌனமாக இருந்தாள். பின்னர்த் திடீரென்று தலைநிமிர்ந்தாள். அவளுடைய கன்னங்கள் சிறிது சிவந்திருந்தன. விலாஸ் வேறு எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தான். இல்லையானல் அதைக் கண்டு அவன் ஆச்சரியமும் கோபமும் அடைந்திருப்பான் என்பதில் சந்தேகமில்லை. "நாம் பேசிக் கொண்டிருந்த அவ் விஷயம் இன்னும் முடியவில்லையே. அந்த ஜமீன் வாங்கியே விடலாம் என்பதுதான் சிற்றப்பாவின் அபிப்பிராயமா ?" என்று விஜயா புன்னகையுடன் கேட்டாள்.

விலாஸ் ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருந்தான் ; "உம்" என்று முகத்தைத் திருப்பாமல் வெளியே பார்த்தவண்ணம் பதில் சொன்னன்.

விஜயா :—ஆனல் அதில் பின்னல் ஒன்றும் தகராறு வராதே ?

விலாஸ் :— வராது.

விஜயா :—இன்று சாயந்திரம் சிற்றப்பா இங்கே வருவாரா ?

விலாஸ் :—நிச்சயமாய்ச் சொல்லமுடியாது.

விஜயா :—(சிரித்துக்கொண்டே) உங்களுக்கு என் மீது கோபமா என்ன ?

உடனே விலாஸ் முகத்தைத் திருப்பிக் கம்பீர பாவத்துடன், "கோபமில்லாவிட்டாலும், பிதாவிற்கு நேர்ந்த

அவமானத்திற்காகப் புத்திரனுக்கு வருத்தம் ஏற்படுவது சகஜந்தானே ?" என்றான்.

விலாஸினுடைய இப்பதில் விஜயாவைப் புண்படுத்தியது. ஆயினும் அவள் சிரித்துக்கொண்டே, "இதனால் தங்கள் பிதாவுக்கு அவமானம் நேர்ந்துவிட்டதென்ற எண்ணம் உங்கள் மனத்தில் எப்படி உற்பத்தியாயிற்று ? அன்பின் காரணமாக, அவர் எனக்குத் துர்க்கா பூஜையின் ஆரவாரத்தினால் கஷ்டம் உண்டாகலாமென்று நினைத்திருக்கிறார். அக்கனவானிடத்தில் "அதனால் எனக்கு ஒரு கஷ்டமும் ஏற்படாதென்றுதான் சொன்னேன். விலாஸ் பாபு ! இதில் மான அவமானத்தைப்பற்றிய பேச்சே இல்லையே" என்று சொன்னாள்.

இப்பதிலினால் விலாஸ் சிறிதேனும் திருப்தியடையவில்லை. "விஷயம் அதுவல்ல. தங்கள் ஜமீன் பொறுப்பைத் தாங்களே ஏற்றுக்கொள்ள விரும்புகிறீர்கள். தாராளமாக ஏற்றுக்கொள்ளுங்கள். நானும் தகப்பனரிடம் இவ்விஷயத்தைச் சொல்லிவிடுகிறேன். இல்லையென்றால், என் கடமையைச் செய்யத் தவறியவனாவேன்" என்றான்.

இப்பதிலைக் கேட்டவுடன் விஜயா திகில்டைந்தாள். க்ஷணநேரம் பேசாமல் இருந்துவிட்டுப் பின் அத்தியந்த துக்கத்துடன், "விலாஸ் பாபு! இந்தச் சாதாரண விஷயத்தை இவ்வளவு பிரமாதப்படுத்துவீர்களென்று நான் நினைக்கவே இல்லை. நான் தவறுதலாகத் தங்களுக்கு ஏதாவது அபராதம் இழைத்திருந்தால், அக்குற்றத்தை நான் ஒப்புக்கொள்கிறேன். இனிமேல் நான் இம்மாதிரியான தவறு செய்யமாட்டேன்" என்று சொன்னாள்.

இவ்விதம் சொல்லி விஜயா விலாஸின் முகத்தை ஒரு முறை பார்த்துப் பெருமூச்சு விட்டாள். குற்றத்தை ஒப்புக்கொண்ட பின்பு, எவ்விதமான குறையுஞ் சொல்ல எவருக்

கும் இடமிராது என்று விஜயா நினைத்தாள். ஆனால், ஒருவர் செய்த தவற்றை எக்காலத்திலும் மன்னிக்காதவர்களும் சிலர் இருக்கிறார்கள் என்பதை அவள் அறியவில்லை.

"அப்படியானால், ராஸ்விஹாரி பாபு என்ன கட்டளையிட்டிருக்கிறாரோ, அதை மாற்றுவதற்கு, உங்களுக்கு அதிகாரம் இல்லையென்பதாகப் பூர்ண காங்குலிக்குச் சொல்லி அனுப்பிவிடுங்களேன்?" என்று விலாஸ் கூறினான்.

விஜயா சிறிது நேரம் அவன் முகத்தைப் பேசாமல் பார்த்துக்கொண்டே இருந்தாள். அவன், பிறருக்கு ஹிம்சை செய்வதற்காகவே உருவெடுத்து வந்தவன்போல் அவளுக்குத் தோன்றினான்: "அது பெரிய அநியாயமாக அல்லவா இருக்கும்? சரி, நானே கடிதம் எழுதித் தங்கள் பிதாவின் அனுமதியைப் பெற்றுக்கொள்கிறேன்" என்று மெதுவாய்ச் சொன்னாள்.

"இப்பொழுது அவருடைய அனுமதி பெறுவதும், பெறாததும் ஒன்றுதான்: கிராமத்தில் அவருக்கு மரியாதை இல்லாதவாறு செய்யவேண்டுமென்று நீங்கள் விரும்புவீர்களேயானால், எனக்கும் அத்தியந்த அருவருப்பான ஒரு கடமையை நிறைவேற்றவேண்டிய அவசியம் ஏற்படும்" என்று விலாஸ் சொன்னான்.

விஜயாவின் உள்ளம் கோபத்தினால் கொதித்தது. ஆனால் அதை அடக்கிக்கொண்டு, தைரியமாக, "அந்தக் கடமை என்ன? சொல்லுங்களேன், கேட்போம்" என்றாள்.

"அது என்னவென்றால் தங்கள் ஜமீன் விஷயத்தில் தந்தையாரைத் தலையிடவேண்டாம் என்று சொல்வதே."

"நீங்கள் வேண்டாம் என்று சொன்னவுடன் அவர் நின்றுவிடுவார் என்று நினைக்கிறீர்களா?"

"நான் அவரை எச்சரிக்கை செய்யவாவது வேண்டாமா?"

விஜயா க்ஷணநேரம் மௌனமாக இருந்தாள். பின்பு முகத்தை ஒருபுறம் திருப்பிக்கொண்டு அமைதியுடன், "சரி, உங்களால் முடிந்ததைச் செய்துகொள்ளுங்கள். ஆனால் மற்றவர்களுடைய மத விஷயங்களில் நான் பிரவேசிக்க மாட்டேன்" என்றாள்.

விஜயாவின் குரல் மிக மிருதுவாக இருந்தபோதிலும், அவளுடைய உள்ளக் கொதிப்பு வெளிக்குத் தெரியாமலில்லை.

"இப்பொழுது உங்களுடைய பிதா உயிரோடிருந்தால், அவர் இம்மாதிரியாகச் சொல்லியிருக்கமாட்டார்" என்று விலாஸ் உரத்த குரலில் சொன்னான்.

விஜயா எழுந்து நின்று விலாஸின் முகத்தை ஒருமுறை ஏறிட்டுப் பார்த்தாள். "விலாஸ் பாபு! என்னுடைய பிதாவைப் பற்றி உங்களைவிட எனக்கு நன்றாகத் தெரியும். ஆகையினால் அவருடைய பெயரை இங்கே இழுக்கவேண்டாம். நான் குளிப்பதற்கு நேரமாகிவிட்டது. போகிறேன்" என்றாள்.

இவ்விதம் சொல்லி விஜயா எழுந்து நின்றாள். உடனே கோப உன்மத்தமடைந்திருந்த விலாஸ் நாகரிக ஒழுக்கங்களை மறந்தான். தனது முரட்டு ஸ்வபாவத்தை வெளிக்காட்டிக் கடுஞ்சொற்களில், "பெண்களே இப்படித்தான் நன்றிகெட்டவர்கள்" என்றான்.

விஜயா செல்வதற்குக் கால் எடுத்தவள், அப்படியே மின்னற்கொடிபோல் திடீரென்று திரும்பி, விலாஸை ஒருமுறை ஏற இறங்கப் பார்த்துவிட்டுப் பேசாமல் போய்விட்டாள். விலாஸ் கோபத்தில் என்னவோ இம்மாதிரியான

கடுஞ்சொற்கள் சொல்லிவிட்டான்; ஆனால் அதற்காக வருந்தினான்.

தந்தையின்மீதுள்ள பக்தி சிரத்தையின் காரண னால் அவன் இவ்விவாதத்தைக் கிளப்பினான் என்று வாசக கள் நினைக்கவேண்டாம். அவனைப் போன்ற மனிதர்கள், விஷயம் எவ்வளவு அற்பமானதாயிருந்தாலுஞ் சரி, அதன் காரணம் எவ்வளவு அசம்பாவிதமாயிருந்தாலுஞ் சரி, ஒரு சிறு குற்றத்தைக் கண்டவுடன், அதைப் பெரிதாகச் செய்து எளியவர்களை வாட்டுவதிலும் பலஹீனர்களைப் பயமுறுத்து வதிலும் ஆனந்தமடைகிறார்கள். அவர்களுடைய சுபாவமே அது. ஆனால் விஜயா அவனுக்குச் சிறிதும் இடங்கொடா மல், அவனைத் துச்சமாக எண்ணி, வெறுப்புடன் அங் கிருந்து சென்றபொழுதுதான் விலாஸுக்கு 'நாம் எவ்வளவு அற்பத்தனமாகவும், முட்டாள்தனமாகவும் நடந்துகொண் டோம்' என்பது தெரியவந்தது. அவன் சிறிது நேரம் பேசா மல் உட்கார்ந்திருந்தான். பின்பு எழுந்து மெள்ளமெள்ளத் தன் வீட்டுக்குச் சென்றான்.

அன்று மாலை ராஸ்விஹாரி மகனைக் கூட்டிக்கொண்டு விஜயாவைப் பார்ப்பதற்காக வந்தார். "நீ செய்தது சரியல்ல. பெண்ணே! என்னுடைய கட்டளைக்கு மாறான கட்டளை கொடுத்து என்னை மிகவும் அவமானப்படுத்திவிட்டாய். சரி, அது போகட்டும். ஜமீன் உன்னுடையது. ஆகையினால் இவ்விஷயத்திற்காக உன்னோடு கோபித்துக்கொள்ள எனக்கு இஷ்டமில்லை. ஆனால் இனிமேலும் நீ இப்படிச் செய்வா யாகில், என்னுடைய மரியாதையைக் காப்பாற்றிக்கொள்வ தற்காக, நான் சற்று விலகியே இருக்கவேண்டி நேரிடும். இதை உனக்கு இப்பொழுதே சொல்லிவைக்கிறேன்" என்றார்.

...ா பதில் ஒன்றுஞ் சொல்லவில்லை. அவளுடைய ...ன் பாவனையானது, அவள் தன் குற்றத்தை ஒரு ...று ஒப்புக்கொண்டதாகவே காட்டிற்று. உடனே ராஸ் ...ஹாரி ஜமீன் சம்பந்தமாகச் சில விஷயங்கள் பேச ஆரம் பித்தார். புதிய ஜமீன் வாங்குகிற விஷயத்தை ஒரு வித மாக முடித்துக்கொண்டு, அவர் சொல்லலுற்றார் :

"ஜகதீசனுடைய வீட்டை நீ சமாஜத்திற்குத் தானஞ் செய்துவிட்டாய். பின் அதை ஸ்வாதீனப்படுத்துவதில் ஏன் தாமதஞ் செய்யவேண்டும்? இந்தப் பூஜா உற்சவம் முடிந்தவுடன், நாம் அதன்மேல் ஆக்கிரமித்தலே நலம் என்று நினைக்கிறேன். நீ என்ன சொல்லுகிறாய்?"

"தங்கள் இஷ்டப்படியே செய்யுங்கள். அவர் பணங் கொடுக்கவேண்டிய வாயிதா தீர்ந்துவிட்டதா?" என்றாள் விஜயா.

"அது தீர்ந்து வெகு நாளாய்விட்டது. ஜகதீசன் தன் கடன் முழுவதையும் தீர்ப்பதற்காக உன் தந்தையி னிடத்தில், பதினாயிரம் ரூபாய்க்குத் தன் சொத்து முழுவ தையும் அடைமானமாக எழுதிவைத்தான். எட்டு வருஷ வாயிதா கொடுக்கப்பட்டது. அதற்குள் கடனைத் தீர்க்கா விட்டால், அவனுடைய தோட்டம், வயல், குளம், வீடு முதலிய எல்லாச் சொத்துக்களும் நம்மைச் சேர்ந்துவிடும். அவ்வெட்டு வருஷம் முடிந்து, இப்பொழுது ஒன்பதாவது வருஷம் ஆரம்பமாகிவிட்டது."

விஜயா சிறிது நேரம் தலைகுனிந்து மௌனமாக யோசித்துக்கொண்டிருந்தாள். பின்பு அவள் மெல்லிய குரலில், "அவருடைய குமாரர் இப்பொழுது இங்கே இருப்ப தாகக் கேள்விப்பட்டேன். அவரைக் கூப்பிட்டு, இன்னுங் கொஞ்சநாள் வாயிதா கொடுத்துப் பார்த்தால் நலமல்லவா?

ஒரு வேளை கடனைத் தீர்ப்பதற்காக அவர் ஏதாவது வழி செய்யக்கூடும்" என்று சொன்னாள்.

ராஸ்விஹாரி தலையாட்டிக்கொண்டே, "அவனால் ஒன்றுஞ் செய்யமுடியாது; ஏதாவது செய்யமுடிந்தால்........" என்று சொல்லத் தொடங்கினார்.

தந்தை சொல்லி முடிப்பதற்குள் விலாஸ் கத்த ஆரம்பித்துவிட்டான்; "இப்பொழுது அவன் கடனைத் தீர்க்கத் தயாராயிருந்தாலும், நாம் ஏன் விடவேண்டும்? வாயிதா தீர்ந்துவிட்டதல்லவா? ரூபாய் வாங்கும்பொழுது என்ன நிபந்தனையின் பேரில் வாங்கினானென்பது, அக்குடிகாரனுக்குத் தெரியாமலா போய்விட்டது? கடனை எப்படித் தீர்ப்பதாக நினைத்தான்?"

விஜயா விலாஸை ஒரு முறை பார்த்துப் பின்பு ராஸ்விஹாரியை நோக்கி, சாந்தத்துடனும் தைரியத்துடனும், "அவர் என் தந்தையின் நண்பர். அவரை மிக மரியாதையுடன் நடத்தும்படி தந்தை எனக்குக் கட்டளை யிட்டிருக்கிறார்" என்றாள்.

அவள் சொல்லி வாய் மூடுவதற்குள், விலாஸ் கர்ஜித்தான்: "அவர் ஆயிரம் சொல்லியிருந்த போதிலுங் கூட, எனக்கு இது சொல்வதில் கொஞ்சமும் சங்கோசமில்லை. அவன் ஒரு................"

"நீ பேசாமலிரு, விலாஸ்" என்று ராஸ்விஹாரி தம் புத்திரனை அடக்கினார்.

பின்னும் விலாஸ் நிற்கவில்லை. "இம்மாதிரி வீண் யோசனைகளையும், வெட்டிப் பேச்சுக்களையும், நான் சிறிதும் சகியேன். இதற்காக யார் என்னைக் கோபித்தாலுஞ் சரி, யார் என்னைப் பகைத்தாலுஞ் சரி. உண்மை கூறுவதில் எனக்குப் பயமில்லை. சத்தியத்தைக் காப்பாற்றுவதற்காகவும், நற்காரி

யம் செய்வதற்காகவும் நான் பின்வாங்க மாட்டேன்" என்ருன்.

அவ்விருவரையும் சாந்தப்படுத்துபவர்போல், (ராஸ் விஹாரி) சிரித்துக்கொண்டே, "அது சரிதான், அது சரிதான். நம் வம்சத்தாரின் சுபாவமே அதுதான். என்னிடத்திலும் அக்குற்றம் அதிகமுண்டு. கேள் விஜயா! நானும் உன் தந்தையும் இம்மாதிரி சுபாவமுடையவர்களாய் இருந்ததனுல்தான், கிராமத்தார்கள், பந்து மித்திரர்கள் முதலிய எல்லோருடைய விருப்பத்திற்கும் விரோதமாகத் தர்ம மார்க்கத்தைக் கடைப்பிடிப்பதற்குக் கொஞ்சமும் பின்வாங்கவில்லை" என்ருர்.

"கடனை வசூலிப்பதற்காகத் தம் பால்ய சிநேகிதருடைய வீடுவாசல் முதலியவைகளை ஜப்தி செய்யவேண்டாம் என்று தகப்பனுர் இறப்பதற்கு முன்பு எனக்கு ஆக்ஞையிட்டுச் சென்றிருக்கிருர்" என்ருள் விஜயா.

பேசும்பொழுதே அவளுடைய கண்களில் கண்ணீர் ததும்பியது. தந்தையின் ஜீவிய காலத்தில் அசம்பாவிதமாகத் தோன்றிய அதே வேண்டுகோள், இன்று அவர் இறந்தபின்பு, ஓர் தேவ ஆக்ஞைக்குச் சமமாகத் தோன்றலாயிற்று.

"அப்படியானுல், அவரே எல்லாக் கடனையும் பத்திரத்தில் வரவு வைத்துவிட்டு ஏன் செல்லவில்லை?" என்று விலாஸ் கேட்டான்.

விஜயா இதற்கு ஒரு பதிலும் சொல்லாமல் ராஸ் விஹாரியை நோக்கி, "ஜகதீஷ் பாபுவினுடைய புத்திரரைக் கூப்பிட்டு, இப்பொழுதுகூட அவர் தம் கடனெல்லாவற்றையும் தீர்த்துவிட்டு வீடுவாசலை மீட்டுக் கொள்ளலாம் என்று நாம் சொன்னுல் என்ன? அதுதான் என்னுடைய விருப்பம்" என்ருள்.

தந்தை பதிலுரைப்பதற்கு முன், மகன் இடைமறித்து, "அவன் பத்துப் பன்னிரண்டு வருஷம் வாயிதாக் கேட்பானுகில், அவ்வளவும் அவனுக்குக் கொடுப்பதா? அப்படியானுல், கிராமத்தில் சமாஜ மந்திரம் ஸ்தாபிக்கும் ஆசையை அடியோடு விட்டுவிட வேண்டியதுதான் என்று நினைக்கிறேன்!" என்முன்.

விஜயா இதற்கும் யாதொரு பதிலும் சொல்லாமல், ராஸ்விஹாரியை நோக்கி, "தாங்கள் அவரை ஒருமுறை கூப்பிட்டு விடுங்கள். இது விஷயத்தில் அவருடைய அபிப் பிராயம் என்ன என்பதைத் தெரியலாம். தாங்கள் தயை செய்து அவ்வாறு செய்வீர்களா?" என்றுள்.

ராஸ்விஹாரி பெரும் வஞ்சகன்; மஹா தந்திரசாலி. மகனுடைய முட்டாள்தனத்திற்காக மனத்திற்குள் கோப முற்ற போதிலும், வெளியில் அவன் சொல்வதே சரி என்று ரூபிக்கும் நோக்கத்துடன் வெகு சாமர்த்திய மாகச் சொல்லலுற்றுன்: "இதோ பார் குழந்தாய்! உங்கள் இருவருடைய வாதவிவாதத்தில் மூன்றுவது மனுஷன் கலந்துகொள்வது உசிதமல்ல. ஏனென்முல் இன்றில்லா விட்டால், நாளை நீங்கள் இருவரும் ஒத்துப்போவீர்கள். அதற்காக இந்தக் கிழவன் வந்து உங்களுக்குப் புத்திமதி சொல்லவேண்டிய அவசியமிராது. ஆனுல் உண்மை என்ன வென்று கேட்பாயாகில், இவ்விஷயத்தில் நீ செய்வதுதான் தவறு என்று சொல்லியே தீரவேண்டும். ஜமீன் ஆளும் விஷயத்தில் நானும் விலாஸினிடத்தில் தோல்வியை ஒப்புக் கொள்ளவேண்டியதுதான் என்பதை நான் அநேக முறை கண்டிருக்கிறேன். சரி, நீயே சொல்லு. யாருக்குச் சிரத்தை ஜாஸ்தி? உனக்கா, நரேந்திரனுக்கா? அவனுல் கடனைத் தீர்க்கமுடியுமானுல், தானே வந்து வாயிதாக் கேட்டிருக்க மாட்டானு? நீ வந்திருப்பதுதான் அவனுக்குத் தெரியு

மல்லவா ? இந்தச் சமயம் நமக்குத்தான் சிரத்தையிருப்பது போல, அவனை வலியக் கூப்பிட்டு விடுவோமானால், அவன் கட்டாயம் அதிக வாயிதாக் கேட்பான். அதன் பலன் என்னவாகுமென்றால், அவனால் தொகையையுங் கொடுக்க முடியாது, உன் கிராமத்தில் சமாஜமந்திரம் ஸ்தாபிக்கும் சங்கற்பமும் வெகுநாள்வரை முடியாமலே இருக்கும். நன்றாய் யோசித்துப் பார் குழந்தாய், நான் சொல்லுவது சரியா, தவறா ?" என்று கேட்டார்.

விஜயா பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அவளுடைய மனோபாவனையை அறிந்துகொண்டு சிறிது நேரம் கழித்து மீண்டும் ராஸ்விஹாரி, "அது சரிதான். அவனுக்குத் தெரியாமல் நாம் ஒரு காரியமும் செய்யப் போகிறதில்லை. வீட்டை ஜப்தி செய்யும் சமயம் வாயிதாவை நீடிக்கவேண்டுமென்று அவன் கேட்பானாகில், அதைப்பற்றி அப்பொழுது யோசிக்கலாம். என்ன விஜயா ?" என்றார்.

விஜயா, "சரி" என்று தலையசைத்தாள். எனினும் பூரண மனத்துடன் அவள் இவ்விஷயத்திற்குத் தன் சம்மதத்தை அளிக்கவில்லை யென்பது அவளுடைய முகத்தினின்றும் ஸ்பஷ்டமாகத் தெரிந்தது. ராஸ்விஹாரி இன்று விஜயாவை நன்கு அறிந்துகொண்டார். இவள் சாதாரணப் பெண்ணல்ல வென்பதை அவர் நிச்சயமாகத் தெரிந்துகொண்டார். சிறு வயதாயிருந்த போதிலும், தன் தந்தையின் ஜமீனுக்குத் தானே அதிகாரியென்பதை நன்கு அறிந்திருக்கிறாள். இவளை வசப்படுத்த வெகு நாளாகும். ஆகையினால் ஒரு சாதாரண விஷயத்தைப்பற்றி அதிகம் வற்புறுத்தல் சரியல்ல.

இவ்விதம் எண்ணி அவர் மாலைப் பிரார்த்தனைக்குச் செல்லவேண்டுமென்கிற சாக்குச் சொல்லி எழவே, விஜயா பேசாமல் கைகூப்பிய வண்ணம் தன் ஆசனத்தினின்றும்

எழுந்தாள். ராஸ்விஹாரி அவளை ஆசீர்வதித்தபின் அங்கிருந்து சென்றுவிட்டார். விஜயா சிறிது நேரத்திற்குப் பின்பு விலாஸை நோக்கி, "நான் அநேக கடிதங்கள் எழுத வேண்டும். தங்களுக்கு என்னிடம் ஏதாவது வேலையிருக்கிறதா?" என்று கேட்டாள்.

"ஒன்றுமில்லை. நீங்கள் போகலாம்."

"உங்களுக்குத் தேநீர் கொண்டுவரச் சொல்லட்டுமா?"

"இல்லை. ஒன்றும் வேண்டாம்."

"சரி. நமஸ்காரம்" என்று விஜயா இருகைகளையுங் கூப்பி நமஸ்கரித்துவிட்டு முற்றத்தினின்றும் போய் விட்டாள்.

# ஆறுவது அத்தியாயம்

## மீண்டும் சந்திப்பு

ஜகதீஷ் புாபுவின் வீடு ஸரஸ்வதி நதிக்கு அப்பாலிருந்தது. சரத் காலம் முடிந்துவிட்டது. மாரிக் காலத்தில் வெள்ளப் பெருக்கு எடுத்து மூடிக்கொண்டிருந்த ஸரஸ்வதி நதியில் இப்பொழுது தண்ணீர் குறைய ஆரம்பித்தது. கரையின்மீது ஜனங்கள் நடந்துசெல்லும் பாதையும், காலடி படுவதனுல் ஈரம் உலர்ந்து கெட்டியாயிற்று. அப்பாதையில் இன்று மாலை விஜயா, வாசற் காவலாளியாகிய கன்னையா சிங்கைக் கூட்டிக்கொண்டு உலாவச் சென்ருள். கரையின் மீதிருந்த மா, பலா, மூங்கில் முதலிய விருக்ஷங்களின் இலைகளின் வழியாக அஸ்தமன சூரியனின் செங்கிரணங்கள் இடையிடையே விஜயாவின் சுந்தரவதனத்தின்மீது விழுந்துகொண்டிருந்தன.

அவள் வெகு சாவதானமாக இருகரைகளிலும் உள்ள பொருள்களையும் காட்சிகளையும் பார்த்துக்கொண்டே வடதிசையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தாள். போகும் பாதையில் ஓரிடத்தில் சில மூங்கில்களைக் கட்டி இக்கரையினின்றும் அக்கரைக்குப் போய்வருவதற்காக நதியின் மத்தியில் ஒரு பாலங்கட்டியிருப்பதைக் கண்டாள். அப்பாலத்தை நன்ருய்ப் பார்ப்பதற்காக விஜயா நீர் ஓரத்தில் வந்து நின்றபொழுது, சிறிது தூரத்தில், ஒரு மனிதர் உட்கார்ந்துகொண்டு ஏகாக்கிர சிந்தையுடன் மீன் பிடித்துக்கொண்டிருப்பதைப் பார்த்தாள். அவள் வந்த சத்தம் கேட்டவுடன் அம்மனிதர் திரும்பிப் பார்த்து அவ

ளுக்கு நமஸ்காரஞ் செய்தார். அதே சமயம் விஜயாவின் முகத்தின்மீது சூரியகிரணம் பட்டதோ என்னவோ தெரியாது; ஆனால் இருவர் கண்களும் சந்தித்ததும், விஜயாவினுடைய வெண்ணிறமான முகமண்டலம் ஒரே சிவப்பாக மாறியதென்னவோ உண்மை.

மீன் பிடித்துக்கொண்டிருந்தவன் பூரண பாபுவினுடைய சகோதரி மகனே. மாமாவின் சார்பாக அன்று விஜயாவினிடத்தில் விண்ணப்பித்துக்கொள்வதற்காக வந்த அதே ஆசாமிதான். விஜயாவும் கைகூப்பி நமஸ்காரஞ் செய்தாள். சிரித்த முகமுள்ள அந்நவயுவனும் எழுந்து விஜயாவை நோக்கிவந்தான். "மாலையில் உலாவுவதற்கு இந்நதிக்கரை ஏற்ற இடந்தான். அதில் சந்தேகமில்லை. ஆனால் இப்பொழுது, இங்கே மலேரியா பயம் அதிகமுண்டு. அதைப்பற்றி உங்களுக்கு ஒருவரும் எச்சரிக்கை செய்யவில்லை போலும்" என்று அந்தப் புதிய யுவன் சிரித்துக்கொண்டே சொன்னான்.

விஜயா, "இல்லை" என்று தலை அசைத்தாள்.

பின்பு சற்றுச் சாவதானமாகப் புன்முறுவல் செய்தவண்ணம் விஜயா, "மலேரியா ஆளைக்கண்டு வராதே? எனக்குத்தான் அது தெரியாது. அதனால் வந்துவிட்டேன். ஆனால் தாங்கள் எல்லாம் தெரிந்திருந்தும் ஏன் நீர்க்கரையில் உட்கார்ந்திருக்கிறீர்கள் என்பதுதான் எனக்கு விளங்கவில்லை. எங்கே பார்ப்போம். நீங்கள் என்ன என்ன மீன் பிடித்திருக்கிறீர்கள்?" என்றாள்.

யுவன் :—(சிரித்துக்கொண்டு) வரால் மீன். அதுவும் இரண்டு மணி நேரத்திற்குக் கேவலம் இரண்டுதான். என்ன செய்வது? தங்களைப்போல் நானும் இவ்வூருக்குப் புதிது. இங்கே ஒருவரையும் எனக்குத் தெரியாது. குழந்தைப் பருவத்திலிருந்து நான் வெளியிலேயே வசித்துக்கொண்

டிருந்தேன். மாலை நேரத்தைக் கழிப்பதற்கு ஏதாவது வேலை வேண்டுமல்லவா?

விஜயா :—(புன்முறுவலுடன்) என் நிலைமையும் ஏறக்குறைய அதே மாதிரிதான். தங்களுடைய வீடு பூர்ண பாபுவின் வீட்டிற்குப் பக்கத்தில் இருக்கிறதுபோலும்.

யுவன் :—இல்லை. (கையினால் நதியின் அக்கரையைக் காட்டி) என் வீடு நதிக்கப்பால் நிகடாவில் இருக்கிறது. இம் மூங்கிற் பாலத்தின் வழியாகப் போகவேண்டும்.

விஜயா :—அப்படியானால், தங்களுக்கு ஜகதீஷ் பாபுவினுடைய மகன் நரேந்திரனைத் தெரிந்திருக்கலாம்.

யுவன் 'ஆம்' என்று சொல்லி முடிப்பதற்குள் விஜயா அதிக உவகையுடன், "அவர் எப்பேர்ப்பட்டவர் என்று உங்களால் சொல்ல முடியுமா?" என்று கேட்டாள்.

ஆனால் அக்கேள்வி அவள் வாயினின்றும் வெளியேறியதும், அது எத்தகைய அசம்பாவிதமானது என்றறிந்து மிகுந்த லஜ்ஜை யடைந்தாள். அந்த லஜ்ஜையை யுவனும் பார்த்துவிட்டான். அவன் சிரித்துக்கொண்டே "அவருடைய வீடுவாசலைத்தான், தங்களுடைய கடனுக்காக நீங்கள் எடுத்துக்கொண்டீர்களே. இப்பொழுது அவரைப் பற்றிக் கேட்பதனால் என்ன பிரயோஜனம்? ஆனால் தாங்கள் அவருடைய வீட்டை ஒரு நல்ல உத்தேசத்துடனேயே எடுத்துக்கொண்டிருக்கிறீர்கள் என்பது யாவரும் அறிந்ததே" என்று சொன்னான்.

விஜயா:—நரேந்திர பாபுவினுடைய வீட்டை எடுத்துக் கொண்டோம் என்று கிராமத்தில் சமாச்சாரம் பரவியிருக்கிறது?

யுவன் :—அதுதான் எல்லோருக்கும் தெரிந்த விஷமாயிற்றே? ஜகதீஷ் பாபுவினுடைய சகல சொத்தும் தங்கள் பிதாவினிடத்தில் எட்டு வருஷத்திற்கு அடைமானமாக

வைக்கப்பட்டிருக்கிறதென்பதைத் தெரியாதார் யார்? அவருடைய மகன் அப்பெருந் தொகையைக் கொடுத்து வீடு வாசலைத் திருப்பும் சக்தி வாய்ந்தவனல்ல. மேலும் பணங் கொடுக்கவேண்டிய வாயிதாவும் தீர்ந்துவிட்டதல்லவா?

விஜயா :—அவ்வீடு எப்பேர்ப்பட்டது?

யுவன் :—மிகப் பெரிது. நீங்கள் எந்த உத்தேசத்துடன் அதைத் தங்கள் ஸ்வாதீனமாக்க விரும்புகிறீர்களோ, அதற்கு அது மிகவும் பொருத்தமானது. வாருங்கள்; இன்னுங் கொஞ்சதூரம் போனால், அவ்வீடு தென்படும்.

விஜயா :—நீங்கள் அக்கிராமத்திலேயே வசிப்பதால், உங்களுக்கு எல்லா விஷயமும் தெரிந்திருக்குமென்று நினைக்கிறேன். நரேந்திர பாபு சீமையிலிருந்து அதிகீர்த்தியோடு டாக்டர் பரீக்ஷையிலே தேர்ச்சி பெற்று வந்திருக்கிறார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். இன்னும் கொஞ்சம் வாயிதா வாங்கிக்கொண்டு ஏதாவது ஒரு நல்ல இடத்தில் தொழில் ஆரம்பித்துப் பிதாவினுடைய கடனை அவரால் தீர்க்கமுடியாதா?

யுவன் :—அது முடியாத காரியம். டாக்டர் தொழில் செய்வதாகவே அவருக்கு உத்தேசமில்லையென்று தோன்றுகிறது.

விஜயா:—(ஆச்சரியத்துடன்) அப்படியானால் அவருடைய நோக்கமென்ன? இவ்வளவு பணம் செலவழித்துச் சீமைக்குப் போய்க் கஷ்டப்பட்டு வைத்தியக் கல்வி படித்து வந்ததன் பலன்தான் என்ன? சுத்த சோம்பேறிபோலும்!

யுவன்—(மனத்திற்குள் சிரித்துக்கொண்டே) இருக்கலாம். ஆனால் வைத்தியஞ்செய்து, ஜனங்களுடைய வியாதிகளை ஒழிப்பதற்குப் பிரயத்தனம் செய்வதைக் காட்டிலும், பெரும்பாலான ஜனங்களுக்கு உபயோகப்படும்படி வேறு ஏதாவது ஒரு பெரிய ஸேவை செய்ய வேண்டுமென்று

நரேந்திர பாபு நினைப்பதாக நான் கேள்விப்பட்டேன். அதற்காக அதிக சிரமத்துடன் அவர் அநேக ஏற்பாடுகள் செய்துகொண்டிருப்பதாகவும் அறிகிறேன்.

விஜயா :—(திடுக்கிட்டு) அது மிக நல்ல யோசனைதான். ஆனால் அவருடைய வீடுவாசல்களெல்லாம் கையை விட்டுப் போனபிற்பாடு, இந்தக் காரியத்தை அவர் எப்படிச்செய்யப் போகிறார்? ஜீவனத்திற்கு ஏதாவது தொழில் செய்யவேண்டியிருக்குமே? சரி; அதிருக்கட்டும். சீமைக்குச் சென்றதனால், அவரை இவ்வூர்க்காரர் ஜாதிப் பிரஷ்டம் செய்திருக்கிறார்களா என்ன?

யுவன் :—ஆம், அதற்கென்ன கேட்கவா வேண்டும்? என் மாமா பூர்ணபாபு அவருக்கும் ஒருவிதத்தில் சொந்தந் தான். என்றாலும் அவரைத் துர்க்கா பூஜைக்குத் தம் வீட்டிற்கு அழைப்பதற்கு மாமாவுக்குத் தைரியமில்லை. ஆனால் நரேந்திரர் இதையெல்லாம் பொருட்படுத்துவதில்லை. அவருண்டு, அவர் காரியமுண்டு. அவகாசங் கிடைத்தால், சில சமயங்களில் சித்திரமும் எழுதுகிறார். வீட்டைவிட்டு அதிகம் வெளியேறுவதே கிடையாது. இதுதான் அவருடைய வீடு."

இவ்விதம் சொல்லி யுவன் பசுமையான விருக்ஷங்களாலும், கொடிகளாலும் சூழப்பட்ட ஒரு பெரிய வீட்டை விஜயாவுக்கு விரலினால் சுட்டிக் காண்பித்தான்.

அதே சமயம் விருத்த கன்னையாசிங், வீட்டிலிருந்து அவர்கள் வெகுதூரம் வந்துவிட்டதாகவும், திரும்பிச் செல்வதற்குள் இருட்டிவிடுமென்றும் எச்சரிக்கை செய்தான்.

யுவன் திடீரென்று நின்று, "பேசிக்கொண்டே நாம் வெகுதூரம் வந்துவிட்டோம்" என்றான்.

யுவனும் அதே மூங்கிற்பாலத்தின் வழியாகவே தன் கிராமத்திற்குச் செல்லவேண்டும். ஆகையால் அவனும்

விஜயாவுடனேயே திரும்பவேண்டியிருந்தது. விஜயா மனத்திற்குள் ஏதோ நினைத்துக்கொண்டு, "உங்களை நான் ஒன்று கேட்கவேண்டும். வீடுவாசல் போனபின்பு, இந்த ஊரில் வசிப்பதற்கு அவருக்கு வேறு யாரேனும் பந்துக்கள் இருக்கிறார்களா ?" என்று கேட்டாள்.

யுவன் :—ஒருவரும் இல்லை.

சிறிது தூரம் விஜயா பேசாமல் சென்றாள்.

விஜயா :—அவர் யாரிடத்திலும் போவது வருவது; பேசுவது பழகுவது இல்லையே! இம்மாதக் கடைசியில் வீட்டைக் காலி செய்யவேண்டுமென்று அவருக்கு நாங்கள் நோட்டீஸ் கொடுத்திருக்கிறோம். வேறொருவராயிருந்தால், எங்களை ஒருமுறையாவது வந்து கண்டு பேசாமலிருப்பாரா ?

யுவன் :—ஒரு வேளை அவருக்கு வீடு அவசியமில்லை போலும்! தவிர, கண்டு பேசுவதால் என்ன பலன் என்று நினைத்திருக்கலாம். ஒரு சமயம் அவர் வந்து, தங்களைக் கேட்கிறார் என்றே வைத்துக்கொள்வோம். நீங்கள் வீட்டை விடச் சம்மதிப்பீர்களா ?

விஜயா :—அவருக்கே சொந்தமாய் விட்டுவிட முடியாது. ஆனால் இன்னும் கொஞ்ச நாள் வாயிதாவாவது கொடுக்கமுடியுமல்லவா ? எத்தனைதான் கடன் கொடுக்க வேண்டியிருந்தாலும், ஒருவரை அவருடைய பூர்விக வீட்டிலிருந்து வெளியேற்றுவதென்றால் யாருக்குமே சிறிது வருத்தமாய்த்தானே இருக்கும் ? ஆனால் - நீங்கள் பேசும் விதத்திலிருந்து - உங்களுக்கு அவரோடு விசேஷப் பரிசயம் உண்டென்று தோன்றுகிறது. என்னுடைய அனுமானம் சரிதானே ?

யுவன் சிரித்தான். ஒன்றும் பேசவில்லை. இருவரும் பாலத்தண்டை வந்துவிட்டார்கள் ; "இதுதான் எங்கள்

கிராமத்திற்குச் செல்லும் வழி ; நமஸ்காரம்" என்றான் யுவன்.

கைகளைப் பின்னால் கட்டிக்கொண்டு, ஏதோ யோசித்த வண்ணம் அந்த யுவன் மூங்கிற்பாலத்தின்மீது தள்ளாடித் தள்ளாடி நடந்து ஆற்றைக் கடந்தான். பின்பு விருக்ஷங்களுக்கிடையே மறைந்துவிட்டான்.

கிழக் கன்னையாசிங் விஜயாவைத் தன் தோளிலேயே தூக்கி வளர்த்தவன். ஆகையினால் சாதாரண வேலைக்காரனைவிட அவனுக்குப் பன்மடங்கு அதிகாரம் உண்டு. அவன் சமீபத்தில் வந்து, "குழந்தாய்! இக்கனவான் யார் ?" என்று கேட்டான்.

அச்சமயம் விஜயா ஏதோ ஆழ்ந்த சிந்தனையில் இருந்தாள். கிழவன் கேட்ட கேள்வி அவள் காதில்கூட விழவில்லை. இருள் சூழ்ந்த அந்நதிக்கரையில் மாதுர்யமான காட்சி ஒன்றையும் அவள் கவனியாமல், சொப்பனவுலகத்தில் சஞ்சரிப்பவள்போல், அம்மனிதர் யார், அவரை மீண்டும் எப்பொழுது சந்திக்கமுடியும் என்பவற்றையே நினைத்தவண்ணம் வீட்டை நோக்கிச் சென்றுகொண்டிருந்தாள்.

## ஏழாம் அத்தியாயம்

## சந்திப்பும் சம்பாஷணையும்

ராஸ் விஹாரி:—நாமே நோட்டீஸ் கொடுத்துவிட்டு இப்பொழுது நாமே அதை ரத்து செய்தால், குடிகள் என்ன நினைப்பார்களென்று நீயே யோசித்துப்பார்.

விஜயா:—கடனைத் தீர்ப்பதாக அவருக்கு எண்ண மிருந்தால், நாம் இன்னும் கொஞ்ச நாள் வாயிதா கொடுப்ப தற்கும் தயாரா யிருக்கிறோமென்று நீங்கள் ஏன் அவருக்குக் கடிதம் எழுதக் கூடாது? கேவலம், அவமானத்திற்குப் பயந்துதான் அவர் இங்கே வரத் தயங்குகிறாரென்று நான் நினைக்கிறேன்.

ராஸ்:—அவமானமா? இதிலென்ன அவமானம்?

விஜயா:—அவருடைய வேண்டுகோளை நாம் நிரா கரித்து விடுவோமென்று அவர் நினைத்துக் கொண்டிருக் கலாம்.

ராஸ்:—அவன் மிக்க மானமுள்ளவன்; ஆகையினால் எல்லா அவமானத்தையும் நம் தலையில் ஏற்றுக்கொண்டு இன்னும் கொஞ்சம் வாயிதா வாங்கிக்கொள்ளுமாறு அவ னிடத்தில் நாம் விண்ணப்பம் செய்துகொள்ளவேண்டுமோ!

விஜயா:—அப்படிச் செய்தாலும் அதில் என்ன குற் றம் சிற்றப்பா? ஒருவருக்கு உபகாரம் செய்வதற்கு நாம் வெட்கப்பட வேண்டாமே!

ராஸ்:—வெட்கப்பட வேண்டாம். அதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால் சமாஜ மந்திரம் ஸ்தாபிக்க

வேண்டுமென்று நாம் கொண்ட சங்கற்பம் என்ன வாகிறது?

விஜயா :—அதற்கு நாம் வேறு ஏற்பாடு ஏதாவது பண்ணலாம்.

ராஸ் விஹாரிக்கு மனத்திற்குள் வெகுகோபம். ஆனால் வெளிக்குச் சிறிது சிரித்துக்கொண்டார்; "பெண்ணே! உன் தந்தை ஏராளமாக பணம் வைத்துவிட்டுப் போயிருக்கிறார். ஆகையினால் மந்திரத்துக்காக நீ எத்தகைய ஏற்பாடும் செய்ய வல்லவளென்பதை நான் அறிவேன். ஆனால் நீ இன்றுவரை கண்ணால்கூடப் பார்த்திராத ஒருவனுக்காக ஏன் இத்தனை வருத்தமும், கருணையுங் காட்டவேண்டுமென்பதுதான் எனக்கு விளங்கவில்லை. பகவான் கிருபையில் உனக்கு இன்னும் எத்தனையோ குடிகள் இருக்கிறார்கள். கடன் கொடுக்கவேண்டியவர்களும் கணக்கு வழக்கில்லை. அவர்கள் அத்தனை பேர்மீதும் நீ இம்மாதிரி கருணைகாட்ட முடியுமா? காட்டுவதனால்தான் உனக்கு லாபமுண்டா? இதற்குப் பதில் சொல், விஜயா" என்றார்.

விஜயா :—இது தந்தையின் வேண்டுகோளென்று நான் முன்னமே உங்களுக்கு சொல்லியிருக்கிறேனே! மேலும்.....

ராஸ் :—மேலும் என்ன?

விஜயா :—சீமைக்குச் சென்று வந்திருப்பதால், அவரைக் கிராமத்தில் ஜாதிப்பிரஷ்டஞ் செய்துவிட்டதாகக் கேள்விப்பட்டேன். அவருடைய வீட்டை நாம் பிடுங்கிக் கொண்டால், அவர் வசிப்பதற்கு எங்கும் இடங்கிடைக்காது. பின் அவருடைய கதி என்னவாகும்? அதை நினைக்கும்பொழுது என் மனம் மிக வருந்துகிறது.

ராஸ் :—சிறு பெண்ணாகிய உனக்கு இத்தகைய வருத்தமுண்டானால், எனக்கு எத்தகைய வருத்தமுண்டாகுமென்று நீயே யோசித்துப்பார். என்னுடைய இந்நீண்ட

வாழ்நாளில் துன்பம் தரத்தக்க கடமையை நிறைவேற்ற வேண்டி நேர்ந்தது இதுதான் முதல் தடவை என்று நினைக்கிறாயா? இல்லை, விஜயா இல்லை. எப்பொழுதும் நான் கடமையைக் கடமையாகவே மதிக்கிறேன்; அது எவ்வளவு கொடூரமானதாக இருந்தாலும் சரி. கடமையின் முன்னால் கருணை, அன்பு, தயை முதலியவை தலைகாட்டுவதே கூடாது. அண்ணா வனமாலி என் தலையில் ஒரு பெரும் பாரத்தை வைத்துவிட்டுச் சென்றிருக்கிறார். எனக்கு எவ்வளவு துக்கம் வந்தாலும் சரி, கஷ்டம் வந்தாலும் சரி, என் வாழ்க்கையின் கடைசி நிமிஷம் வரை நான் அதைச் சுமந்தே தீர வேண்டும். இப்பொறுப்பினின்றும் ஒன்று என்னை விடுவித்து விடு; அல்லது நான் சொல்கிறபடி கேள். அவனுக்காக நீ இவ்வளவு பச்சாத்தாபப்படுவது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

விஜயா ஒன்றும் பேசவில்லை. தந்தையின் குற்றத்திற்காக ஒரு பாவமுமறியாத தனயனை வீடில்லாமல் கஷ்டப்படுத்த வேண்டுமென்கிற எண்ணம் அவளுடைய உள்ளத்தில் எத்தகைய வேதனையை உண்டாக்கியதோ, அதைவிடப் பன்மடங்கு வேதனையைச் சகித்துக்கொண்டு, ராஸ்விஹாரி கேவலம் கடமையை நிறைவேற்றுவதற்கே முனைந்து நிற்கிறார் என்பது அவளுக்கென்னவோ விளங்கவில்லை. இப்பிடிவாதம், ஓர் ஆதரவற்ற அனாதை வாலிபன்மீது கொண்ட ஈவிரக்கமில்லாத கொடுமை யென்றே அவளுக்குத் தோன்றியது. ஆனால் தன்னுடைய இஷ்டப்படி காரியத்தைச் செய்வதற்கும் அவளுக்குத் தைரியமில்லை. கிராமத்தில் ஆடம்பரமாக ஒரு சமாஜ மந்திரம் ஸ்தாபித்து, பேரும் புகழும் பெறவேண்டுமென்ற ஆசையினால், விலாஸே, தன் தந்தையின் பின்னால் இருந்துகொண்டு இத்தனையும் செய்கிறான் என்பதும் அவளுக்குத் தெரியாமல் இல்லை.

ராஸ் விஹாரி வேறு ஒன்றும் சொல்லவில்லை. விஜயாவும் மௌனமாயிருந்தாள். அது ராஸ் விஹாரி சொன்னதற்கெல்லாம் அவள் சம்மதித்ததுபோ லிருந்தது. ஆனால், அவளுடைய கோமள நாரீ ஹிருதயத்தில், அக்கிழவர்மீது வெறுப்பும், அவருடைய மகன்மீது பகையுமே பரிபூரணமாக நிறைந்திருந்தன.

ராஸ் விஹாரி உலக விஷயங்களில் கைதேர்ந்த பேர் வழி. உதாரகுணத்தினால்கூட, ஒருவன் லாபமடைய முடியுமானால், அதற்கேற்ற சந்தர்ப்பம் இதுவே என்பது அவருக்கு நன்றாகத் தெரியும். விஜயாவின் முகத்தை நோக்கி ராஸ் விஹாரி சிரித்துக்கொண்டே, "விஜயா! பொருள் உன்னுடையது; யாருக்காவது நீ அதைக் கொடுக்க விரும்பினால், நான் அதை ஏன் தடுக்கவேண்டும்? விலாஸ் செய்ய விரும்புவதெல்லாம் கேவலம் தன்னலத்துக்காக வல்ல என்பதையே நான் உனக்குக் காட்ட விரும்பினேன். கடமையை நிறைவேற்றுவதற்காகவே அவன் அவ்விதம் செய்ய விரும்பினான். என்னுடைய சொத்தும், உன் பிதாவின் சொத்தும் ஒரு நாள் ஒன்றாகப் போகின்றன. அப்பொழுது நீங்கள் இருவரும் அதற்கு அதிகாரிகளாக இருப்பீர்கள். அச்சமயம் உங்களுக்கு உதவி செய்வதற்கு இக்கிழவன் பக்கத்தில் இருக்கப் போவதில்லை. அக்காலத்தில் நீங்கள் இருவரும் ஒற்றுமையா யிருக்கவேண்டுமென்பதே என் விருப்பம். நீ உன் கணவனிடத்தில் பக்திசிரத்தையுடன் இருக்கவேண்டும்; அவனிடத்தில் விசுவாசம் வைக்க வேண்டும். தானம் செய்வதற்கும், தர்மம் செய்வதற்கும் அவனுக்கும் தெரியும்; எனக்கும் தெரியும். ஆனால் பாத்திர மறிந்து பிச்சையிட வேண்டும். இதைத்தான் நான் உனக்குச் சொல்லவேண்டுமென்று நினைத்தேன். நாங்கள் ஜகதீசனுடைய புத்திரன்மீது ஏன் எள்ளளவுகூடக் கருணை காட்ட

வில்லை என்பது இப்பொழுதாவது உனக்கு விளங்குகிறதா?" என்றார்.

இவ்விதம் சொல்லிக் கிழவர் அன்போடு விஜயாவின் முகத்தைப் பார்க்கலானார். சாரம் நிறைந்த, யுக்தி பூர்வமான இவ்வுபதேசத்திற்கு விரோதமாக யார் என்னசொல்ல முடியும்? விஜயா பேசாமல் உட்கார்ந்துகொண்டிருந்தாள். ராஸ் விஹாரி மீண்டும் சொல்லலுற்றார்:

"விலாஸ் இன்னும் சிறுவனாயிருந்த போதிலும், எதிர் காலத்தில் என்னென்ன நடக்கப் போகிறதென்பதை எங்ஙனம் தீர யோசித்துக் காரியங்களைச் செய்கிறான் என்பது உனக்கு விளங்குகிறதா? நான் இங்கு வேலை செய்துசெய்து என் மயிரும் நரைத்துவிட்டது; என்றாலும், ஜமீன் விஷயங்களில் விலாஸ் எவ்வளவு தந்திரமாகக் காரியங்களைச் செய்கிறான் என்பதைக் கண்டால் எனக்கே அதிசயமாயிருக்கிறது."

விஜயா தலையசைத்து, "உம்" என்றுமட்டும் சொன்னாள்; வாயால் ஒன்றும் பேசவில்லை.

"மணி நாலரையாகப் போகிறது" என்று சொல்லி அவளுடைய கையைப் பிடித்துக்கொண்டு, ராஸ் விஹாரி எழுந்து நின்றார். "சமாஜ மந்திர ஸ்தாபனத்தைப்பற்றி விலாஸுக்கு இருக்கும் கவலை வேறு எவருக்குமே இல்லை. அவனுடைய பேச்சு, எண்ணம், செய்கை எல்லாம் இப்பொழுது அதையே பற்றி நிற்கிறது. அச்சுப தினத்தை இக்கண்களால் நான் பார்த்துவிட்டுச் செல்லவேண்டும் என்பதே, ஈசுவரன் பாதங்களில் நான் செய்துகொள்ளும் பிரார்த்தனை." இவ்விதம் சொல்லி இருகைகளையும் கூப்பி அவர் திரும்பத் திரும்பப் பரப்ரம்மத்தை நமஸ்கரித்தார். பின்பு வாசலண்டை வந்து திடீரென்று நின்றுகொண்டு, "ஆஹா! எப்பேர்ப்பட்ட பயல்! ஒரு தடவையாவது என்னிடத்தில் வந்தானா? கிடை

யாது. இதைப்பற்றி ஏதாவது கவலைப்படுகிறானா? அதுவும் கிடையாது. பாவி, அதிர்ஷ்டங்கெட்ட பயல், அதிர்ஷ்டங் கெட்ட பயல்! தகப்பனுக்கேற்ற பிள்ளைதான்!" என்று சொல்லிக்கொண்டே கிழவர் போய்விட்டார்.

அவ்விடத்தைவிட்டு அசையாமல் உட்கார்ந்துகொண்டு, விஜயா என்னென்ன நினைத்துக் கொண்டிருந்தாளோ தெரியவில்லை. திடீரென்று அவளுடைய பார்வை வெளியே சென்றது. பொழுது சாய்ந்துவிட்டது. நதிக்கரையின் ரம்மியமான காற்று அவளை வசீகரித்தது. அவள் நாற் காலியினின்றும் எழுந்து இன்றும் அவ்வேலைக்காரக் கிழ வனைக் கூட்டிக்கொண்டு உலாவுவதற்காக வெளியே சென்றாள்.

முன் சந்தித்த அதே இடத்தில் அந்த யுவன் இன்றும் உட்கார்ந்து மீன் பிடித்துக்கொண்டிருந்தான். விஜயா வெகு தூரத்திலிருந்தே அவனைப் பார்த்துவிட்டாள்; ஆனால் சமீபத்திலே சென்ற பிறகுங்கூட, அவனைப் பார்க்காதவள் போல் தன் வழியே போய்க் கொண்டிருந்தாள். திடீ ரென்று கன்னையா சிங், "சலாம் பாபுஜீ! இன்று ஏதாவது மீன் கிடைத்ததா?" என்று பின்னாலிருந்து கேட்டான்.

கன்னையா சிங்கின் வார்த்தைகள் அவள் காதில் விழுந்தவுடன், அவளுடைய கன்னங்களில் ஒரு செவ் விளங்கிரணம் பாய்ந்து முகம் முழுதும் சிவந்தது. நெருங்கிய நட்புண்டாவதற்கு அநேக நாள் கூடிப்பழகவும் வேண் டாம்; அதிக சம்பாஷணை செய்யவேண்டிய அவசியமும் இல்லை. விஜயா அப்படியே நின்றுவிட்டாள். அம் மனிதன் மீன் பிடிக்குந் தூண்டிலைக் கரையில் வைத்துவிட்டு நமஸ் காரம் செய்து சிரித்துக்கொண்டே பக்கத்தில் வந்து, "தேசத்தின்மீது தங்களுக்குள்ள அன்பு அபாரமாயிருக்

கிறது! அதிலுள்ள மலேரியாவின்மீதுகூடத் தங்களுக்கு வெகு பிரியம் போலும்!" என்றான்.

விஜயா:—(சிரித்துக் கொண்டே) தங்களுக்குக்கூட அப்படித்தானோ?"

அம்மனிதன்:—டாக்டர்களுடைய விஷயம் வேறு........

அவர் சொல்லி முடிப்பதற்குள், "தாங்கள் டாக்டரா?" என்று விஜயா கேட்டாள்.

யுவன் திடுக்கிட்டு விழித்தான். ஆனால் கூடிய சீக்கிரம் சமாளித்துக்கொண்டு சற்று வேடிக்கையாக, "ஏன் இருக்கக்கூடாது? நாங்கள் எவ்வளவு பெரிய டாக்டருக்குப் பக்கத்தில் இருக்கிறோம். எல்லோருக்கும் மலேரியாவைக் கொடுத்தபின்பு மீதத்தையல்லவா நாங்கள் எடுத்துக்கொள்ள வேண்டும்" என்றான்.

விஜயா ஒன்றும் பதில் சொல்லவில்லை. சிறிது நேரம் பேசாமல் இருந்தபின்பு, "அண்டை வீட்டுக்காரர் மட்டுமல்ல; தாங்கள் அவருடைய விசேஷ பந்துவாயிருக்கலாம் என்று நான் முன்னமேயே நினைத்தேன். நான் சொன்ன விஷயங்களைப்பற்றி நீங்கள் அவரிடத்தில் ஏதாவது பிரஸ்தாபித்தீர்களா?" என்று கேட்டாள்.

அவன்:—எந்த விஷயம்? நீங்கள் அவரைச் சோம்பேறி என்று சொன்னீர்களே, அதைத்தானே? அது எல்லோரும் சொல்லுவதுதான். நீங்கள் ஒன்றும் புதிதாய்ச் சொல்லிவிடவில்லை. ஆனால் ஒரு விஷயம்: உங்களைக்கண்டு பேசுவதற்காக அவர் என்றைக்காவது ஒருநாள் தங்களிடம் வருவார்.

விஜயா:—(மிகுந்த லஜ்ஜையுடன்) என்னைக் கண்டு பேசுவதனால் அவருக்கென்ன லாபம் உண்டாகப் போகிறது?...............நிற்க; அவர் விஷயத்தில் நான் அம்மாதிரி ஒன்றுஞ் சொல்லவில்லையே.

அம்மனிதன் :—நீங்கள் அம்மாதிரி சொல்லவில்லை; ஆனால் சொல்லியிருந்தால் நலமாயிருக்கும்.

விஜயா :—என் நலமாயிருக்கும்?

அவன் :—வீடு வாசலை எல்லாம் பறிகொடுக்கும் ஒருவனை எல்லோரும் சோம்பேறி என்றுதான் சொல்லுவார்கள். நானுங்கூட அப்படித்தான் சொல்லுவேன். அவனுக்கு நேரே இல்லாவிட்டாலும், ஒளிமறைவாகச் சொல்வேன்.

விஜயா :—(சிரித்துக்கொண்டு) பேஷ்! நீங்கள் அவருக்கு உண்மையான நண்பர்தான்!

அம்மனிதன் :—நீங்கள் சொல்வது சரிதான்! நற்காரியத்துக்காக, நல்லுத்தேசத்துடன் அவருடைய வீட்டைத் தாங்கள் சுவாதீனப் படுத்திக்கொள்ளப் போவது எனக்குத் தெரிந்திராவிட்டால், அவருக்காக நானே தங்களிடத்தில் வந்து மன்றாடியிருப்பேன்.

விஜயா ஒருமுறை தலைநிமிர்ந்து மட்டும் பார்த்தாள். ஆனால் இது விஷயமாய் ஒன்றும் சொல்லவில்லை.

பேசிக்கொண்டே இருவரும் இன்று முந்தைய தினத்தைவிடச் சற்று அதிக தூரமே போய்விட்டார்கள். நதியின் அக்கரையில் சில மனிதர்கள் வரிசையாக நரேந்திர பாபுவினுடைய வீட்டை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார்கள். அதில் ஐம்பது வயதுக் கிழவர்களிலிருந்து பதினைந்து வயதுச் சிறுவர்கள் வரையும் இருந்தார்கள். அம்மனிதன் அவர்களைச் சுட்டிக்காட்டி, "அந்த ஜனங்கள் எங்கே போகிறார்களென்று உங்களுக்குத் தெரியுமா? அவர்களெல்லாம் நரேந்திர பாபுவினுடைய வீட்டிற்குப் படிக்கச் செல்கிறார்கள்" என்றான்.

விஜயா :—(ஆச்சரியத்துடன்) அவர் இந்தத் தொழிலுமா செய்கிறார்? ஆனால் ஒருவரிடத்தும் சம்பளம் வாங்கமாட்டார் என்று நினைக்கிறேன். அப்படித்தானே?

அவன் :—(சிரித்துக்கொண்டு) நீங்கள் அவரை நன்கு அறிந்துகொண்டீர்கள். உண்மை என்னவென்றால், சோம்பேறி மனிதர்கள் எங்கே போனாலும் சும்மா யிருக்க முடியாது!

பின்பு கம்பீர பாவத்தோடு, மீண்டுஞ் சொல்லலுற்றான்: "நம் தேசத்தில் உண்மையான குடியானவர்கள் இல்லையென்று நரேந்திரர் சொல்லுகிறார். வியவசாயம் செய்வதற்கு அறிவு அதிகம் வேண்டாமென்று நம் தேசத்தில் பலர் நினைக்கிறார்கள். ஆகையால் ஏழைக் குடியானவர்கள் காலமென்றும் அகாலமென்றுந்தெரியாமல்,நிலத்தை இரண்டு முறை உழுதுவிட்டு, விதை விதைத்து, ஆகாயத்தை நோக்கிய வண்ணம், 'சிவனே!' என்று உட்கார்ந்திருக்கிறார்கள். இதை வியவசாயம் செய்வதென்று சொல்லக்கூடாது; லாட்டரிச் சீட்டுப் போடுவதென்று சொல்லலாம்! எந்த நிலத்தில் எப்போது உரம்போடுவது? உரம் என்றால் என்ன? உண்மை வியவசாயம் என்றால் என்ன? இவ்விஷயங்களெல்லாம் அவர்களுக்குத் தெரியவே தெரியா. சீமையிலிருக்கும் பொழுது டாக்டர் பரிக்ஷைக்குப் படித்ததோடு, வியவசாயமும் அவர் கற்றார். ஒரு நாள் நீங்கள் அவருடைய பள்ளிக்கூடத்தைப் பார்க்க வாருங்களேன்? மைதானத்தில் மரத்தின் நிழலில் உட்கார்ந்துகொண்டு, தகப்பன், பிள்ளை, பேரன் முதலிய எல்லோரும் படிக்கிறார்கள்."

விஜயா திரும்பிச் செல்லத் தயாராயிருந்தாள். ஆகையினால் அவளடைந்த குதூகலத்தை அடக்கிக்கொண்டு, "பரவாயில்லை; அதிருக்கட்டும். ஆனால் இவ்வளவு பெரிய வீட்டை வைத்துக்கொண்டு, மரத்தினடியில் ஏன் அவர் பாடசாலை நடத்துகிறார்?" என்றாள்.

அவன் :—இம்மாதிரி சிக்ஷை யெல்லாம் கேவலம் வாயினால் பிரசங்கஞ் செய்வதனாலோ, அல்லது புத்தகங்கள்

கற்றுக்கொடுப்பதினாலோ வருவதில்லை. குடியானவர்களுக்கு வியவசாய வேலைகளை யெல்லாம் கையினாலேயே செய்து காட்டி, இதோ பார், இம்மாதிரி வியவசாய ஞானத்தை அறிந்துகொண்டு செய்வதனால், நான்கு மடங்கு, ஐந்து மடங்கு வரை அதிகப் பலன் எடுக்கலாமென்று அவர்களுக்குச் சொல்லவேண்டும். அதற்காக மைதானம் அவசியம்; வியவசாயம் செய்து காட்ட வேண்டியதும் அவசியம். எல்லாம் அதிர்ஷ்டப்படியே நடக்குமென்று வானத்தை நோக்கி உட்கார்ந்து கொண்டிருப்பது முட்டாள்தனம் என்று கேவலம் வாயினால் சொல்வதில் ஒரு பிரயோஜனமும் இல்லை. நரேந்திரருடைய பாடசாலை மரத்தினடியில் ஏன் நடக்கிறதென்று இப்பொழுது தங்களுக்கு விளங்குகிறதா? தாங்கள் ஒருமுறை அவருடைய பள்ளிக்கூடத்து நிலங்களின் மகசூலைப் பார்த்தீர்களானால், வெகு ஆச்சரியப் படுவீர்கள். இன்னும் பொழுது போகவில்லை. இன்றே வாருங்களேன். இதோ சமீபத்தில்தான் அது இருக்கிறது.

விஜயா :—இல்லை, இன்று வேண்டாம்.

அம்மனிதன் :—நல்லது. அப்படியானால் வாருங்கள்; உங்களைக் கொஞ்ச தூரம் கொண்டுவந்து விடுகிறேன்.

இவ்விதஞ் சொல்லி அவன் அவள் கூடவே சென்றான். ஐந்துஆறு நிமிஷங்கள்வரையில் விஜயா ஒன்றும் பேசவில்லை. அவள் மனத்தில் ஒரு விதமான நாணம் தோன்ற ஆரம்பித்தது. எவ்வளவு யோசித்தும் அந்நாணத்தின் காரணம் இன்னதென்று அவளுக்குத் தெரியவில்லை.

அவன் மீண்டும், "தாங்கள் தர்ம காரியத்துக்காகவே அவருடைய சொத்தை எடுத்துக்கொள்ளப் போகிறீர்கள். அவரும் ஒரு நற்காரியத்திற்காகவே அநேக ஏக்கர் நிலத்தைப் பயன்படுத்தியிருக்கிறார். ஆகையினால் தாங்கள்

ஒரு கஷ்டமுமில்லாமல் அப்பூமியை அவருக்கு விட்டுவிடலா மல்லவா ?'' என்றார்.

இவ்விதஞ் சொல்லி அவன் புன்னகை செய்தான். விஜயா அதி கம்பீரத்துடன், " இம்மாதிரி அவருக்காகத் தாங்கள் பேசுவதற்கு தங்களுக்கு என்ன அதிகாரம் இருக் கிறது ?'' என்று கேட்டாள். கேட்டுவிட்டு அவனைக் கடைக் கண்ணால் பார்த்தாள். அவனுடைய சிரித்த முகத்தில் ஒரு மாறுபாடும் தோன்றவில்லை.

அவன் :—இத்தகைய அதிகாரம் ஒருவரால் கொடுக் கப்படுவதல்ல; தானே எடுத்துக் கொள்ளப்படுவது. மனிதன் ஜன்மம் எடுக்கும்போதே, கடவுள் அவனுக்கு நற்காரியஞ் செய்வதற்கு அதிகாரம் கொடுத்திருக்கிறார். அவ்வதிகாரத் திற்காக அவன் ஒருவனிடத்தில் கைநீட்ட வேண்டிய அவ சியமில்லை. நான் கேட்பதை நீங்கள் தயைசெய்து கொடுப் பீர்களேயானால், அதனால் நன்மையடைபவர்கள் யாரென்று தங்களுக்குத் தெரியும். நமது தேசத்தில் குடிப்பதற்குங் கஞ்சி யற்று வாடுபவர்கள் குடியானவர்களே. தரித்திரர்களெல் லாம் நாராயணனின் அம்சங்களென்று நமது சாஸ்திரங் களில் எழுதியிருக்கிறது. அவர்களுக்கு ஸேவை செய்யும் உரிமை எல்லோருக்கும் உண்டு. நீங்களே சொல்லுங்கள். அவ்வதிகாரத்தை எனக்குக் கொடுக்கும்படி நான் நரேந்திர ரிடத்தில் போய் ஏன் கேட்கவேண்டும்?

இவ்விதம் சொல்லி அவன் சிரித்தான்.

விஜயா :—ஆனால் தங்கள் நண்பர் கேவலம் இந்த வேலைக்காக இங்கேயே உட்கார்ந்திருக்க முடியாதே!

அவன் :—முடியாது. ஆனால் இவ்வேலை யெல்லாவற் றையும் ஒரு வேளை என்னிடத்தில் ஒப்பித்துவிட்டுச் செல்லலாம்.

விஜயாவின் இதழ்களில் ஒரு சிறு நகையின் ரேகை தோன்றி மறைந்தது; "நான் அப்படித்தான் நினைத்தேன்" என்றாள் அவள்.

அவன் :—நீங்கள் நினைத்தது சரிதான். பாருங்கள். முன் காலத்தில் இவ்வேலையெல்லாம் ஜமீன்தார்களே செய்வது வழக்கம். ஆனால் இக்காலத்தில் அவர்கள் இதையெல்லாம் கவனிப்பதில்லை. யார் யார் நிலம் உழுகிறார்கள்; யார் யார் வரிகொடுக்கவில்லை என்ற இம்மாதிரி விஷயங்களிலேயே அவர்களுடைய கவனம் செல்லுகிறது.

இதைச் சொல்லிவிட்டு அவன் சிரிக்க ஆரம்பித்தான். விஜயாவும் அச்சிரிப்பில் கலந்துகொள்ள விரும்பினாள். ஆனால் அவளுக்குச் சிரிப்பு வரவில்லை. இப்பரிகாசம் அவளுடைய அந்தக்கரணத்தில் போய்த் தைத்து, ஒரு முள் குத்தியது போல் உறுத்திக் கொண்டிருந்தது. சிறிது தூரம்வரை பேசாமல் சென்று, பின் திடீரென்று, "நீங்களே உங்களுடைய நண்பருக்கு உதவி செய்யலாமல்லவா?" என்று கேட்டாள்.

அவன் :—ஆனால் நான் இங்கே நிரந்தரமாக வசிப்பதில்லை. ஒரு வாரத்திற்கப்புறம் நான் இவ்வூரைவிட்டுச் செல்ல நேரிடுமென்று நினைக்கிறேன்.

விஜயா திடுக்கிட்டாள்.

"ஆனால் தங்களுடைய வீடு இங்கிருப்பதால், தாங்கள் நிச்சயம் இங்கே வரத்தானே வேண்டும்?"

அவன் :— இல்லை. இனிமேல் நான் இங்கே வரவேண்டிய அவசியம் இராது.

விஜயாவின் உள்ளம் துடித்தது. இவ்விஷயத்தைப்பற்றி மேலும் கேள்வி கேட்பது உசிதமல்லவென்று நினைத்தாள். மிக மெல்லிய குரலில், "இங்கே தங்களுடைய வீடுவாசலைப்

பார்த்துக்கொள்வதற்கு யாராவது இருப்பார்கள்போலும்" என்ருள்.

அவன் :—இல்லை ; அப்படி ஒருவருமில்லை.

விஜயா :—தங்கள் தந்தை........

அவன் :— எனக்குத் தாய், தந்தை, சகோதரர், சகோதரிகள் ஒருவருமில்லை. இதோ! உங்கள் வீடு வந்துவிட்டது. நமஸ்காரம். நான் சென்றுவருகிறேன்.

விஜயா மிருதுவான குரலில், "உள்ளே வாருங்களேன்" என்ருள்.

அவன் :—இல்லை ; திரும்பிப் போவதற்குள் இருட்டிவிடும். நமஸ்காரம்.

விஜயா கையெடுத்துப் பிரதி நமஸ்காரம் செய்துவிட்டு, மிகுந்த சங்கோசத்துடன் மெல்லிய குரலில், " ராஸ் விஹாரி பாபுவை ஒருமுறை சென்று பார்க்கும்படித் தங்கள் நண்பரிடத்தில் சொல்லமுடியுமா ?" என்று கேட்டாள்.

அவன் :—அவரை ஏன் பார்க்கவேண்டும் ?

விஜயா :—அவர்தானே என் தந்தையாரின் சொத்துக்களையெல்லாம் மேற்பார்க்கிருர் ?

அவன் :—அது எனக்குத் தெரியும். ஆனல் அவரிடத்தில் எதற்காகச் செல்லவேண்டுமென்று தாங்கள் சொல்லுகிறீர்கள் ?"

இக்கேள்விக்கு விஜயாவால் பதில் சொல்ல முடியவில்லை. பதிலை எதிர்பார்த்து அவன் சற்று நேரம் நின்றுகொண்டிருந்தபின், " இருட்டிவிட்டது. நான் செல்கிறேன் " என்று சொல்லி வேகமாய் நடக்கலானன்.

# எட்டாம் அத்தியாயம்

## நெருப்பில் நெய்

விஜயாவின் வீட்டைச் சுற்றிலும் ஒரு பெரிய தோப்பு இருந்தது. உயர்ந்த மாமரங்களும், இலையடர்ந்த பலாமரங்களும் இன்னும் பன்மடங்கு இருளை அதிகப்படுத்தின. "அம்மா, நேரம் சிறிது அதிகமானாலும், நல்ல பாதை வழியாகச் செல்வது நலம்" என்று வேலைக்காரக் கிழவன் சொன்னான்.

அந்தச் சமயம் அவளுடைய மனம் இம்மாதிரி விஷயங்களிலே கவனத்தைச்செலுத்தும் நிலையில் இல்லை. "வேண்டாம்" என்று சொல்லி அவள் திடீரென்று இருள் நிறைந்த அத்தோப்பினுட் புகுந்து வீட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தாள். இரண்டு விஷயங்கள் அவளுடைய மனத்தில் உறுத்திக்கொண்டிருந்தன. ஒன்று, அவள் பெரிய வீட்டுப் பெண் என்ற காரணத்தாலும், ஸ்திரீ ஜாதிக்கே நிந்தனை ஏற்படும் என்ற காரணத்தாலும், அம்மனிதனுடைய பெயரைக்கூட அவளால் அறிவதற்கு முடியவில்லை. இரண்டாவதாக, நாலைந்து தினங்களுக்குப் பின், "அம்மனிதர் எங்கே செல்லப் போகிறார்" என்ற கேள்வியைக் கேட்க வேண்டுமென்று எத்தனையோ முறை வாயெடுத்த போதிலும், லஜ்ஜை காரணமாக அது அவள் நாவினின்றும் வெளியேறவில்லை. அவ்வாடவன் சம்பந்தப்பட்ட மட்டில், ஒரு விஷயம் விஜயாவை முதலிலிருந்தே அவன்பால் இழுத்தது. அதென்னவென்றால் அவன் யாராயிருந்த போதிலும், அதிகக் கல்வியறிவுள்ளவன்; கிரா

மத்தில் பிறந்தவனு யிருந்தபோதிலும் பெரிய வீட்டுப் பெண்களோடு சங்கோசமில்லாமல் பேசவும், பழகவும் அவன் அப்பியாசம் பெற்றிருக்கிறுன் என்பதே. அவன் பிரம்ம சமாஜி அல்ல; எனினும் இந்தச் சிக்ஷையை எங்கே, எவ்விதம் அவன் பெற்றுன் என்று யோசித்தவண்ணம் விஜயா வீட்டிற்குள் காலே வைத்ததும் வேலேக்காரி வந்து, விலாஸ் பாபு வெகு நேரமாய் வெளித்திண்ணேயில் உட்கார்ந்து, அவளுக்காகக் காத்துக்கொண்டிருப்பதாகச் சொன்னுள். அதைக் கேட்டதும் அவளுடைய மனத்தில் கோபமும்,ஒருவிதமான அருவருப்பும் தோன்றின. அவளோடு சண்டை போட்டுக் கொண்டு போனதிலிருந்து, இன்றுவரை அவன் வரவே இல்லே. ஆனல் இன்று அவன் என்ன காரணத்திற்காக வந்திருக்கிறுனே தெரியவில்லே. விஜயாவின் அந்தக்கரணம் முழுதும் அச்சமயம் எந்த மனிதனுடைய அன்பினுல் நிறைந்திருந்ததோ அவனேப்பற்றி அவளுக்கு விசேஷமாய் ஒன்றுந் தெரியாது; என்றுலும் இவ்விரு மனிதர்களுக்குமிடையே ஆகாயத்திற்கும் பாதாளத்திற்குமுள்ள வித்தியாசம் இருப்பதைமட்டும் அவள் நன்கு உணர்ந்தாள். "நான் வந்துவிட்ட விஷயத்தை அவருக்குத் தெரியப்படுத்திவிட்டாயா, என்ன ?" என்று மெல்லிய குரலில் கேட்டாள்.

வேலேக்காரி :—இல்லே அம்மா. நான் இப்பொழுதே சதீஷை அனுப்பித் தெரிவித்துவிட்டு வரச் சொல்லுகிறேன்.

விஜயா :—அவரைத் தேநீர் அருந்தச் சொன்னுயா ?

வேலே :—சொன்னேன். நீங்கள் திரும்பி வந்தபின் உங்களோடு சாப்பிடுவதாகச் சொல்லிவிட்டார்.

இன்னும் கொஞ்ச நாட்களில் விலாஸ் பாபுவே இவ்வீட்டிற்கு ஏஜமானராகப் போகிறுர் என்ற விஷயம் எல்லோருக்கும் தெரிந்ததே. ஆகையினுல் அவருக்கு உபசாரங்கள் செய்வதில் யாவரும் ஒரு குறைவும் வராமல் பார்த்துக்

கொண்டார்கள். விஜயா வேறொன்றுஞ் சொல்லாமல் மாடியில் தன் அறைக்குச் சென்றுவிட்டாள்.

ஏறக்குறைய இருபது நிமிஷங்களுக்கு அப்புறம் கீழே வந்து பார்த்தபொழுது வெளி வாசலுக்கு முன்னால், மேஜையின்மீதுள்ள விளக்கு வெளிச்சத்தில், விலாஸ் சில காகிதங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டாள். விஜயாவின் காலடிச் சத்தத்தைக் கேட்டதும், தலைநிமிர்ந்து ஒரு நமஸ்காரம் செய்துவிட்டு மீண்டும் முன்போலவே கம்பீரமாய் உட்கார்ந்திருந்தான். "உன்மீது கோபித்துக் கொண்டு நான் இத்தனை நாட்களும் இங்கே வராமலிருந் தேன் என்று நீ நினைத்திருப்பாய். உண்மை அதுவல்ல. ஒருவேளை அப்படியே கோபித்திருந்தாலும், அது தவறல்ல என்பதை இப்பொழுது உனக்கு ரூபித்துக் காட்டுகிறேன்" என்றான்.

விலாஸ் இதுவரை விஜயாவை, 'நீங்கள்' என்றே சொல்லுவது வழக்கம். ஆனால் இன்று புதிதாக அவன் 'நீ' என்று அழைத்ததன் காரணம் என்னவென்று தெரியவில்லை. விஜயாவுக்கு இது கொஞ்சமேனும் பிடிக்கவில்லை. அவள் ஒரு பதிலும் சொல்லாமல், மெதுவாக ஒரு நாற்காலியை இழுத்து, விலாஸினின்றும் சற்று விலகியே உட்கார்ந்தாள். விலாஸ் அதைச் சிறிதேனுங் கவனிக்காமல், "நான் எல்லாம் ஒழுங்குபடுத்திவிட்டு, இப்பொழுதுதான் கல்கத் தாவினின்றும் திரும்பி வருகிறேன். இன்னும் அப்பா வைக்கூட நான் பார்க்கவில்லை. நீ இம்மாதிரிப் பேசாமல் உட்கார்ந்திருந்து விடுகிறாய். என்னால் அப்படி இருக்க முடியவில்லை; எனக்கு எப்பொழுதும் இதே கவலைதான். ஒரு மாபெரும் வேலை என் தலையின்மீது இருக்கிறது; அதைச் செய்து முடித்தாலொழிய, சாவகாசமாய் நான் ஒரு நிமிஷ நேரமும் உட்கார முடியாது. இக்கோடை விடு

முறையிலேயே பிரம்ம சமாஜ மந்திரத்தை நாம் பிரதிஷ்டை செய்யவேண்டும். அதற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் இப்பொழுது செய்துவிட்டு வந்திருக்கிறேன். ஜனங்களுக்கு அழைப்பு அனுப்புவதுகூடப் பாக்கியில்லை. நேற்று விடியற் காலத்திலிருந்து நாள் முழுவதும் அலைந்துகொண்டே இருந்தேன். அப்பா! ஒருவாறாக அங்கே செய்யவேண்டிய வேலைகளெல்லாம் முடிந்துவிட்டன. யார் யார் வருவார்கள் என்பதுகூட இக்காகிதத்தில் எழுதிக்கொண்டு வந்திருக் கிறேன். இதைக் கொஞ்சம் பாரேன்" என்றான்.

இவ்விதஞ் சொல்லி விலாஸ் மிக்க சந்தோஷத்துடன் முன்னால் வைத்திருந்த காகிதத்தை விஜயாவின் பக்கம் நீட்டினான்.

அப்பொழுதும் விஜயா ஒன்றும் பேசவில்லை. அழைக் கப்பட்டவர்கள் சம்பந்தமாய் அவள் எள்ளளவேனும் தன் சந்தோஷத்தைத் தெரிவித்துக்கொள்ளவில்லை. அப்படியே உட்கார்ந்திருந்தாள். இவ்வளவு நேரமாய் விஜயா பேசாம லிருப்பதைக்கண்டு விலாஸ் சற்று ஆத்திரத்துடன், "விஷயம் என்ன? இம்மாதிரி ஏன் பேசாமல் இருக்கிறாய்?" என்றான்.

விஜயா :—நீங்கள் அழைப்பு அனுப்பிவிட்டு வந்திருக் கிறீர்களே; அவர்களிடத்தில் இப்பொழுது என்ன சொல் வது என்று யோசித்துக்கொண்டிருக்கிறேன்.

விலாஸ் :—அப்படியென்றால்?

விஜயா :—மந்திரம் ஸ்தாபிக்கும் சம்பந்தமாய் நான் ஒன்றும் இன்னும் நிச்சயஞ் செய்யவில்லை.

விலாஸ் நாற்காலியில் நிமிர்ந்து உட்கார்ந்தான். சிறிது நேரம் விஜயாவின் முகத்தைத் தீவிர திருஷ்டியுடன் பார்த் துக் கொண்டிருந்துவிட்டு, "இதன் அர்த்தமென்ன? இவ் விடுமுறையிலேயே அதைப் பிரதிஷ்டை செய்துமுடிக்கா விட்டால், பின்பு அது எப்பொழுது முடியப்போகிறது?

உனக்கு இஷ்டமானபோதெல்லாம் இங்கேவந்து ஆஜராவதற்கு, அவர்கள் உன் வீட்டு வேலைக்காரர்கள் அல்லவே! 'நான் ஒன்றும் நிச்சயஞ் செய்யவில்லை' என்கிறாயே! அதன் தாத்பர்யம் என்ன?" என்றான்.

கோபத்தினால் விலாஸின் கண்களில் தீப்பொறி பறந்தது. விஜயா வெகு நேரம் வரை தலைகுனிந்த வண்ணம் பேசாமல் இருந்து, பிறகு, "நான் யோசித்துப் பார்த்ததில் இவ்விஷயமாக அதிக ஆடம்பரம் பண்ணவேண்டிய அவசியமே இல்லை என்று தோன்றுகிறது" என்றாள்.

விலாஸ் :—ஆடம்பரமா? ஆடம்பரம் பண்ணவேண்டுமென்று நான் சொல்லவில்லையே! இதுகூட எனக்குத் தெரியாதா? எந்தக் காரியத்தையும் சாந்தத்துடனும், அமைதியுடனும், ஆடம்பரமில்லாமல் செய்வதுதான் பிரம்ம சமாஜிகளின் சுபாவம். அதைப்பற்றி உனக்கு ஒரு கவலையும் வேண்டாம்.

விஜயா :—இங்கே பிரம்ம மந்திரம் ஸ்தாபிப்பதனால், ஒரு பிரயோஜனமும் உண்டாகாது. அதற்கு அவசியம் இருப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. ஆகையினால் நான் மந்திரம் ஸ்தாபிக்கப் போவதில்லை.

விலாஸ் திடுக்கிட்டு விழித்தான். அவன் நாவினின்றும் ஒரு பதிலும் திடீரென்று வெளியேறவில்லை. சிறிது நேரத்திற்குப்பின், "நீ உண்மையில் பிரம்மசமாஜியா, இல்லையா என்று நான் முதலில் அறிய விரும்புகிறேன்" என்றான்.

விஜயா மிகுந்த கோபத்துடன் தலைநிமிர்ந்து அவன் பக்கம் நோக்கினாள். ஆனால் சிறிதுநேரத்தில் தன் கோபத்தை அடக்கிக்கொண்டு, "இப்பொழுது ஒன்றும் பேச வேண்டாம்; நீங்கள் வீட்டிற்குப் போய்க் கோபத்தை ஆற்றிக்கொண்டு வாருங்கள்; பின்னால் பேசிக் கொள்ளலாம்" என்றாள்.

இவ்விதஞ் சொல்லி அவள் எழுந்திருக்க யத்தனித்தாள். அதே சமயம் வேலைக்காரன் தேநீர் கொண்டுவருவதைப் பார்த்து மீண்டும் உட்கார்ந்தாள். விலாஸ் அவள் பக்கமே திரும்பவில்லை. பிரம்மசமாஜியா யிருந்தபோதிலும், பெருந்தன்மையோடு நடந்துகொள்ள அவன் இன்னும் படிக்கவில்லை. வேலைக்காரன் இருப்பதையும் அவன் கவனிக்காமல் கத்தவாரம்பித்தான்.

"நாங்கள் மட்டும் நினைத்தால், நிமிஷ நேரத்தில் உன் சம்பந்தமே வேண்டாம் என்று அறவே ஒழிக்க முடியுமென்பதை நீ அறிவாயா?"

விஜயா பேசாமல் தேநீர் தயார் செய்துகொண்டிருந்தாள். ஒன்றும் பதில் சொல்லவில்லை. வேலைக்காரன் போனபின்பு அவள் மெதுவாக, "இது விஷயமாய் நான் சித்தப்பாவோடு பேசிக்கொள்ளுகிறேன்; உங்களோடு பேச எனக்கு இஷ்டமில்லை" என்றாள்.

இவ்விதம் சொல்லி ஒரு டம்ளர் நிறையத் தேநீர் ஊற்றி அதை விலாஸின் பக்கம் நீட்டினாள். விலாஸ் தேநீரைத் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை. "நாங்கள் உன் சம்பந்தத்தை ஒழித்துவிட்டால் உன் கதி என்னவாகும் தெரியுமா?" என்று மீண்டும் அவன் கேட்டான்.

விஜயா:—தெரியாது. அது எப்படியானாலும் ஆகட்டும். ஆனால் என்னுடைய சம்மதத்தைக் கேளாமல், நீங்கள் யார் யாருக்கு அழைப்பு அனுப்பி அவமானம் செய்திருக்கிறீர்களோ, அதன் பொறுப்பை நீங்களே ஏற்றுக்கொள்ளுங்கள். அதில் அணுவளவேனும் நான் ஏற்றுக்கொள்ளத் தயாராயில்லை.

விலாஸ்:—நான் எப்பொழுதும் காரியத்தில் கண்ணாயிருப்பவன். வேலையே எனக்குப் பிரதானம். இம்மாதிரி

விளையாட்டுத்தனத்தை வெறுக்கிறேன். இதை ஞாபகம் வைத்துக்கொள், விஜயா!

விஜயா :—சரி. அதை நான் எப்போதும் மறக்க மாட்டேன்.

ஹா! இவ்வார்த்தைகளில் எத்தகைய கடுஞ்சித்தம்! அதைக் கண்டு விலாஸ் உள்ளங் கலங்கினுன். விஜயா பேசாமல் தலைகுனிந்த வண்ணம் கரண்டியை இட்டுக் கலக்கித் தேநீரை ஆற்றிக்கொண் டிருந்தாள். விலாஸும் சிறிது நேரம் பேசாமலிருந்தான். பின்பு, "அவ்வளவு பெரிய வீட்டை என்ன செய்வது? சும்மா காலியாக வைத்திருக்க முடியாதே!" என்றுன்.

அப்பொழுது விஜயா தலைநிமிர்ந்து, அவனை நோக்கித் திடமான குரலில், "அந்த வீட்டை எடுத்துக்கொள்ளத்தான் போகிறோம் என்பதும் இன்னும் நிச்சயமாக வில்லையே?" என்றுள்.

இதைக் கேட்டதும் விலாஸிற்குக் கோபம் பொறுக்க முடியவில்லை. "நிச்சயமாய்விட்டது; நூறுதடவை நிச்சயமாய்விட்டது! கண்ணியமும், பெருந்தன்மையும் வாய்ந்த பிரம்மசமாஜக் கனவான்களுக்கு அழைப்பு அனுப்பிவிட்டு, அவர்களை இம்மாதிரியாக அவமதிக்க நான் ஒருகாலும் சம்மதியேன். அவ்வீடு நமக்கு அவசியம் வேண்டும்; அதை நான் ஒருபோதும் விடமாட்டேன். இதை நான் உனக்கு இப்பொழுதே சொல்லிவிடுகிறேன்" என்று காலை ஓங்கித் தரையில் மிதித்துக்கொண்டு சொன்னுன்.

இவ்விதம் சொல்லி விஜயாவின் பதிலைக்கூட எதிர் பாராமல், அவன் வேகமாய் எழுந்துபோய்விட்டான்.

# ஒன்பதாம் அத்தியாயம்

## இரகசியம் வெளியாதல்

அந்த யுவன் அவ்வூரைவிட்டுப் போவதற்கு முன்னால் தன்னுடைய நண்பரை அழைத்துக்கொண்டு ஒரு முறையாவது தன்னைப் பார்க்கவருவானென்று விஜயா ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவனோடு விஜயா பேசிய ஒவ்வொரு வார்த்தையும் அவனுடைய மனத்தில் ஆழப் பதிந்துவிட்டது. ஒருவார்த்தை கூட அவள் மறக்கவில்லை.அவ்வாலிபன் மனத்தில் அவனுடைய மித்திரன் விஜயாவினிடம் நாம் ஒன்றுமே எதிர்பார்க்கமுடியாது என்கிற எண்ணம் உண்டாகும்படி, ஏதாவது சொல்லிவிட்டோமா என்று, இரவும் பகலும் யோசித்து யோசித்துப் பார்த்தாள். நரேந்திரன், அவளுடைய பிதாவின் நண்பருடைய மகன் என்பதையும் அவள் அவனிடத்தில் சொன்ன ஞாபகம் வந்தது. இன்னுங் கொஞ்சம் வாயிதாக் கொடுத்தால், நரேந்திரனால் கடனைத் தீர்க்கமுடியுமா என்பதையும் அவ்வாலிபனிடத்தில் அவள் கேட்டிருக்கிறாள். சொத்து முழுவதையும் இழக்கப்போகும் ஒருவனுக்கு இவ்வளவு சந்தர்ப்பங் கொடுத்திருக்கும் போது ஏதாவது முயற்சி செய்யாமலிருப்பானா? சிறிதேனும் நம்பிக்கை இல்லாத இடத்திலும் கூட, ஏதாவது முயற்சி செய்துபார்ப்போமே என்று மனிதர்கள் நினைப்பார்கள்! அப்படியிருக்க நரேந்திரனும் அவனுடைய மித்திரனும் அப்படியென்ன உலகப் பற்றை அறவே ஒழித்தவர்களா!

அதன் பின்பு விஜயா அவ்வாலிபனை மீண்டும் நதிக் கரையில் சந்திப்பதற்கு முடியவில்லை. தினந்தோறும் விஜயா காலையிலிருந்து மாலைவரை, 'இன்று கட்டாயம் அவர் வருவார் வருவார்' என்ற நம்பிக்கையிலேயே நேரத்தைக் கழித்தாள். ஆனுள் நாட்கள் சென்றன ; அவ்விளைஞனும் வரவில்லை, அவனுடைய அதிசய மித்திரன், டாக்டர் நரேந் திரனுடைய தரிசனமும் கிடைக்கவில்லை.

ராஸ்விஹாரி பாபுவை அவள் சந்தித்தாள். ஆனுல் அவருடைய புத்திரனுக்கும் விஜயாவுக்கும் நடந்த சம் பாஷணையைப் பற்றி அவர் ஒன்றுமே சொல்லவில்லை. தமக்கு அதைப்பற்றி ஒன்றுமே தெரியாதவர்போல் அவர் நடந்துகொண்டார். மந்திரம் ஸ்தாபிக்கும் விஷயம் ஒருவிதமாகத் தீர்மானமாய்விட்டது போல், அவர் பேச ஆரம்பித்தார். அவ்விஷயத்தில் எவரேனும் எவ்விதமான இடையூறோ அல்லது தடையோ செய்யமுடியும் என்கிற சந்தேகமே அவருடைய மனத்தில் தோன்றுததுபோல் அவர் நடித்தார். விஜயாவுக்கும் அப்பிரச்னையைத் தானே கிளப்பிவிடுவதற்குத் தைரியமில்லை. ஆனி மாதம் முடிந்து விட்டது. ஆடிமாதப் பிறப்பன்று தந்தையும் மகனும் சேர்ந்து விஜயாவின் வீட்டிற்கு வந்தார்கள். "பெண்ணே! இனி மேல் நாள் அதிகமில்லை. காரியங்களை விரைவில் முடிக்க வேண்டும்" என்ருர் ராஸ்விஹாரி.

விஜயா :—அவராக எப்பொழுது வீட்டைவிட்டுப் போகிருரோ, அப்பொழுதுதான் நாம் ஏதாவது செய்ய முடியும்.

விலாஸ் விஹாரி முகத்தைச் சுளித்துக்கொண்டு சிரித்தான்.

ராஸ் :—யார், ஜகதீசனுடைய புத்திரனைப்பற்றித் தானே பேசுகிறாய்? அவன் நேற்றே வீட்டைக் காலி செய்துவிட்டானே?

இச்செய்தி உண்மையாகவே விஜயாவின் ஹிருதயத்தில் ஓர் அம்புபோல் பாய்ந்தது. அவள் உடனே விலாஸின் பக்கமிருந்து திரும்பி, அவன் முகமே தன் கண்ணில் படாதபடி உட்கார்ந்துகொண்டாள். க்ஷணநேரம் அவள் பேசாமல் இருந்தாள். பின்பு தன் துக்கத்தை ஒருவாறு அடக்கிக்கொண்டு, "அவருடைய சாமான்களெல்லாம் என்னவாயின? எல்லாவற்றையும் எடுத்துக்கொண்டு போய்விட்டாரா?" என்று விஜயா கேட்டாள்.

"சாமான்கள் என்ன பிரமாதம்! மூன்று கால் கட்டில் ஒன்று - அதில்தான் அவன் தூங்குவது போலும்! வெளியே மரத்தினடியில் நான் அதை இழுத்தெறிந்தேன். அவனுக்கு இஷ்டமானால் எடுத்துக்கொண்டு போகட்டும். அதைப்பற்றி நமக்கென்ன கவலை?" என்று விலாஸ் சிரித்துக்கொண்டே சொன்னான்.

விஜயா ஒன்றும் பேசவில்லை; ஆனால் அவளுடைய முகத்தில் வேதனைக்குறிகள் தோன்றின. இதைக் கண்டதும் ராஸ்விஹாரி தம் மகனைக் கண்டிப்பதுபோல் பாசாங்கு செய்யத் தொடங்கினார் :

"விலாஸ்! அதுதான் உன்னுடைய குற்றம். மனிதன் எத்தகைய பாவியாயிருந்தாலும் சரி, பகவான் அவனை எத்தகைய் தண்டனைக்கு உள்ளாக்கினாலும் சரி; நாம் அவனுக்காகப் பச்சாத்தாபப் படவேண்டும்; கருணை காட்டவேண்டும். அதுதான் நம்முடைய கடமை. உன் உள்ளத்தில் அவன்மீது அன்பில்லை, அவனுக்காக நீ வருந்தவில்லை என்று நான் சொல்லவில்லை. ஆனால் நீ அதை வெளியிலும் கொஞ்சங் காட்டவேண்டுமென்றே நான் சொல்லுகிறேன்.

ஜகதீசனின் புத்திரனை நீ சந்தித்தாயா ? என்னை ஒரு முறை யாவது வந்துபார்க்கும்படி ஏன் அவனிடத்தில் சொல்ல வில்லை ?"

பிதா பேசி முடிப்பதற்குள் புத்திரன் அவர் காட்டிய குறிப்பைக் கொஞ்சமும் அறிந்துகொள்ளாமல் முகத்தில் அத்தியந்த வெறுப்புக் குறிகளுடன், "அப்பா! அவனைச் சந்தித்து, நம் வீட்டுக்கு வரும்படி அழைப்பதைவிட எனக்கு வேறு வேலை ஒன்றும் கிடையாதா ? மேலும் நான் அங்கே போவதற்குள்ளேயே டாக்டர் சாஹேப் தம் பெட்டி, சாமான் முதலியவைகளை எடுத்துக்கொண்டு போய்விட்டாரே !" என்று சொன்னான்.

விலாஸ் இம்மாதிரி இன்னும் பேசிக்கொண்டே போயிருப்பான். ஆனால் ராஸ்விஹாரி அம்பினுங் கூரிய தம் பார்வையால் விஜயாவினுடைய மனோபாவத்தை யறிந்துகொண்டார் ; "விலாஸ்! உன்னுடைய முட்டாள்தனமான வார்த்தைகளை நான் இனிமேல் சகிக்கமுடியாது. உனது செய்கைக்காக நீ பச்சாத்தாபப்பட வேண்டும்" என்று கோபமாய்ச் சொன்னார்.

ஆனால் விலாஸ் எள்ளளவேனும் வருந்தவில்லை ; "பிறர் துக்கத்தைக் கண்டு வருந்துவதைக் காட்டிலும், அதைத் தீர்க்க முயலுவது நலமென்று நான் படித்திருக்கிறேன். ஆனால் நம் வீட்டில் வந்து, நம்மை ஒருவன் அவமதிப்பானகில், அத்தகைய கர்வியை நான் ஒருகாலும் மன்னிக்கமாட்டேன்" என்று அவன் பதிலளித்தான்.

விலாஸின் பதிலைக் கேட்டு விஜயாவும் ராஸ்விஹாரியும் ஆச்சரியமடைந்தார்கள். "வீட்டிற்கு வந்து யார் உன்னை அவமானஞ் செய்துவிட்டார்கள்? நீ யாரைப் பற்றிப் பேசுகிறாய் ?" என்று ராஸ்விஹாரி கேட்டார்.

"ஜகதீஷ் பாபுவின் சற்புத்திரன் நரேந்திர பாபுவைப் பற்றித்தான் நான் பேசுகிறேன்! அவன் ஒரு நாள் இதே முற்றத்தில் உட்கார்ந்துகொண்டுதான், என்னை அவமானஞ் செய்தான். அதுவரைக்கும் அவனை எனக்குத் தெரியாது. (கையினல் விஜயாவைச் சுட்டிக்காட்டி) இவர்களையும் அவமானம் செய்வதற்கு அவன் பின்வாங்கவில்லை. அவ்விஷயம் உங்களுக்குத் தெரியுமா?" என்று விலாஸ் கம்பீரமாகக் கேட்டான்.

விஜயா திடுக்கிட்டு முகத்தைத் திருப்பி விலாஸின் பக்கம் நோக்கினுள். அதே சமயம் விலாஸ் அவளைப்பார்த்து, "அன்று பூர்ண பாபுவினுடைய மருமகன் என்று தன்னைச் சொல்லிக்கொண்டு வந்தானே, அவன் யார்? அந்தச் சமயம் நீ அவனை வெகு மரியாதையாக நடத்தினுயே! அம் மஹான்தான் நரேந்திர பாபு! அப்பொழுது அவன் உண்மையில் தான் யாரென்று தெரிவித்திருப்பானுகில், நான் அவனை மனிதன் என்று சொல்லுவேன். கோழைப் பயல்!" என்று உறுமினுன்.

இவ்விதம் சொன்னவுடன், விஜயாவின் முகமண்டலம் நிமிஷ நேரத்தில் வாடி வதங்கிவிட்டதை விலாஸும் அவனுடைய தந்தையும் கண்டார்கள்.

# பத்தாம் அத்தியாயம்

## நரேந்திரனைச் சந்தித்தல்

கோடைக்கால விடுமுறை முடியப்போகிறது. ஆகை யினால் ஜகதீஷ் பாபுவினுடைய வீட்டின் முக்கிய பாகத்தைப் பிரம்ம மந்திரத்துக்காகவும், மற்ற அறைகளைக் கல்கத்தாவி லிருந்து வரப்போகும் அதிதிகளுக்காகவும் அலங்காரம் செய்துகொண்டிருந்தார்கள். விலாஸ் விஹாரி தானே அவ் வேலைகளை மேற்பார்த்துக்கொண் டிருந்தான். கல்கத்தாவி லிருந்து வரும் கனவான்களின் தொகையும் கொஞ்சமாய் இராது. விலாஸ் விஹாரியினுடைய இஷ்டமித்திரர்கள் ராஸ் விஹாரியின் வீட்டிலும், மற்றவர்கள் விஜயாவின் வீட்டிலும் தங்கவேண்டுமென்று தீர்மானமாகிவிட்டது. ஸ்திரீகளும் விஜயாவின் வீட்டிலேயே தங்குவார்கள். அதற்கு வேண் டிய ஏற்பாடுகளும் செய்திருந்தார்கள்.

ஒருநாள் காலை விஜயா ஸ்நானாதிகளை முடித்துவிட்டுக் கீழே முற்றத்திற்குச் சென்றபொழுது, அங்கே சதீசனும், அவனுடைய தாயும் நின்றுகொண்டிருப்பதைக் கண்டாள். சதீஷ் ஒரு கையினால் தன் தாயின் முன்றானையைப் பிடித்து வாயில் வைத்து மென்றுகொண்டிருக்கிறான்; இன்னொரு கையினால் பக்கத்தில் கட்டியிருக்கும் பசுவின் கழுத்தைச் சொரிந்து கொடுக்கிறான். பசுவும் வெகு சொகுசாய்க் கண் களை மூடிக்கொண்டு கழுத்தைத் தூக்கிக்கொடுத்து, ஆனந் தத்துடன் சிறுவனின் உபசாரத்தை ஏற்றுக்கொள்கிறது!

வெவ்வேறு பிறவியைச் சேர்ந்த அவ்விரண்டு ஜீவன் களின் நட்பிற்கும், விஜயாவின் மனத்தில் தேங்கியிருக்கும்

வேதனைக்கும் என்ன சம்பந்தம் என்று சொல்ல இயலாது. ஆனால் அதைப் பார்த்தவுடன் விஜயாவின் இரண்டு கண்களிலும் கண்ணீர் ததும்பியது. விஜயாவிற்கு அச்சிறுவன் மீது அத்தியந்தப் பிரியம். அவள் தன் கண்களைத் துடைத்துக் கொண்டு சிறுவனைத் தன் பக்கம் கூப்பிட்டாள். "அடே சதீஷ்! உங்கம்மா உனக்கு இந்த வேஷ்டிதான் வாங்கிக் கொடுத்தாளா? சி! அந்தக் கரையைப் பார், எவ்வளவு அவலக்ஷணம்!" என்று அன்பு கனிந்த குரலில் சொன்னாள்.

சதீஷ தலைகுனிந்து மனத்திற்குள்ளேயே தன் வேஷ்டியின் கரையோடு, விஜயாவின் பட்டு ஜரிகைப் புடைவையின் கரையை ஒப்பிட்டுப் பார்த்து மிகுந்த வருத்தமடைந்தான். அவனுடைய மனோபாவனையை யறிந்து, தன் புடைவையின் கரையை எடுத்துக் காட்டி "உன்னுடைய வேஷ்டிக்கு இம் மாதிரிக் கரையிருந்தால், உனக்குச் சந்தோஷமாயிருக்கும், ஏண்டா சதீஷ்?" என்று கேட்டாள்.

சதீஷ் உடனே விஜயா சொன்னதை ஆமோதித்து, "அம்மாவுக்கு வேஷ்டி வாங்கவே தெரிவதில்லை" என்றான்.

விஜயா :—சரி, நான் உனக்கு இதே மாதிரி ஒரு வேஷ்டி வாங்கிக் கொடுக்கிறேன்; ஆனால் நீ........

இம்மாதிரி ஆனால் - கீனாலப்பற்றி எல்லாம் சதீசனுக்கு ஒரு கவலையுமில்லை. அவன் காது வரை வாயைப் பிளந்துகொண்டு, "எப்பொழுது வாங்கிக் கொடுப்பீர்கள்?" என்று கேட்டான்.

விஜயா :—சீக்கிரம் வாங்கித் தருகிறேன்; ஆனால் நான் சொல்வதை நீ கேட்கவேண்டும்.

சதீஷ் :—என்ன?

விஜயா :—(சிறிது நேரம் யோசித்துவிட்டு) உன்னுடைய அம்மா அல்லது வேறு யாரிடத்திலாவது அதைச்

சொன்னயோ, உனக்கு அந்த வேஷ்டி கிடைக்காது, பாத்துக்கோ.

வேஷ்டி வாங்குவதற்காக அவன் எவ்விதக் கஷ்டங்களையும் சகிப்பதற்கு அச்சமயத்தில் தயாராயிருந்தான்; “ அம்மாளுக்கு எதற்காகச் சொல்கிறேன் ? நீங்கள் சொல்லுங்கள், இப்பொழுதே செய்கிறேன் ” என்று தலையை ஆட்டிக்கொண்டே அவன் சொன்னன்.

விஜயா :—திகடா கிராமம் உனக்குத் தெரியுமா ?

கையை நீட்டிக் காட்டிக்கொண்டு, “ அதோ, அது தானே ? வண்ணத்திப்பூச்சி பிடிப்பதற்கு நான் தினந்தோறும் அங்கேதான் போகிறேன் ” என்ருன்.

விஜயா :—அங்கே எல்லாவற்றையும்விடப் பெரிதும், உயரமானதுமான வீடு யாருடையது தெரியுமா ?

சதீஷ் :—ஆம், ஜகதீஷ் பாபுவினுடைய வீடு. சென்ற வருடம் மாடி இடிந்து விழுந்ததே அதுதானே ? அதற்குப் பக்கத்தில்தான் கோவிந்தனுடைய மிட்டாய்க் கடை இருக்கிறது. அந்தக் கடையோடு ஒட்டித்தான் ஜகதீஷ் பாபு வீட்டின் வராந்தா இருக்கிறது. கோவிந்தன் என்ன சொல்கிருன் தெரியுமா, அம்மா ? முக்கால் துட்டுக்கு ஐந்து பேடா கிடைக்கும், ஆனல் காலேயரைக்கால் துட்டுக்கு இரண்டரைப் பேடா கிடைக்காது, இரண்டு பேடாதான் கிடைக்கும் என்கிருன். ஆனல் நீங்கள் ஒரு அண, இரண்டணவுக்குச் சேர்ந்தாற்போல் வாங்கினல், முக்கால் துட்டுக்கு ஐந்தரைப் பேடாவீதம் நான் வாங்கிக் கொண்டு வந்து கொடுக்கிறேன்.

விஜயா :—அரையணவுக்குப் பேடா வாங்கிக்கொண்டு வருகிருயா ?

சதீஷ் :—உம், இந்தக் கையில் காலணவுக்கு ஐந்தரைப் பேடா எண்ணி வாங்கிக்கொண்டு, பின்பு, இந்தக்

கையில் இன்னும் ஐந்தரைப் பேடா எண்ணிக்கொடு என்று அவனிடத்தில் சொல்லுவேன். அவன் கொடுத்தபின்பு ஜமீன்தாரிணியம்மா இரண்டு பேடா வரியாக வசூலித்துக் கொண்டு வரச்சொன்னார்கள் என்று சொல்வேன். ஏனம்மா? அப்புறந்தான் அரையணாவை அவன் கையில் கொடுப்பேன். சரிதானே?

விஜயா :—(சிரித்துக்கொண்டே) உம், அப்புறந்தான் கொடுக்க வேண்டும். அத்துடன் கடைக்காரனிடத்தில், அந்தப் பெரிய வீட்டில் வசித்துக்கொண்டிருந்த நரேந்திர பாபு எங்கே போய்விட்டார் என்பதையும் கேட்டுக் கொண்டு வா. இப்பொழுது எந்த வீட்டில் அவர் வசிக்கிறார் என்று கேள். ஏண்டா சதீஷ், இந்த வேலை உன்னால் செய்ய முடியுமல்லவா?

"உம், அணாவைக் கொடுங்கள். நான் ஒரே ஓட்டமாய்ப் போய் வாங்கிக்கொண்டு வருகிறேன்" என்று தலையை ஆட்டிக்கொண்டே அவன் சொன்னான்.

விஜயா :—நான் கேட்டுக்கொண்டு வரச்சொன்னேனே, அது?

சதீஷ் :—உம், அதையும் கேட்டுக்கொண்டு வருகிறேன்.

விஜயா :—பேடா கையில் கிடைத்ததும், அதை மறந்து விடாதே.

சதீஷ் :—நீங்கள் அணாக் கொடுங்களேன்; நான் இப்பொழுதே ஓடிப்போய் வாங்கி வருகிறேன். மறக்க மாட்டேன்.

விஜயா :—உன்னுடைய அம்மா கூப்பிட்டு, 'அடே சதீஷ்! நீ எங்கே போயிருந்தாய்?' என்று கேட்டால் என்ன சொல்வாய்?

சதீஷ் மிக்க புத்திசாலித்தனமாகச் சிரித்துக்கொண்டே, “அதற்கெல்லாம் எனக்குத் தந்திரம் தெரியும். பேடாவை இந்த மாதிரி மடியில் ஒளித்துக்கொண்டு, ‘அங்கே, அந்தக் கிராமத்தில் ஜகதீஷ் பாபுவினுடைய வீட்டில் நரேன் பாபு இருந்தாரே, அவர் இப்பொழுது எங்கே போயிருக்கிறார் என்று தெரிந்துகொண்டு வருவதற்காக அம்மா என்னை அனுப்பினாள்’ என்று சொல்வேன். நீங்கள் அணுவைக் கொடுங்களேன்?” என்றான்.

விஜயாவிற்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை; “நீ எத்தகைய மடையனடா, சதீஷ்! அம்மாளிடத்தில் யாராவது பொய் சொல்வார்களா? கேட்டால், பேடா வாங்கப் போயிருந்தேன் என்று உண்மையைச் சொல். ஆனால், கடைக்காரனிடத்தில், நரேந்திர பாபுவினுடைய சங்கதியை விசாரிக்க மறந்துவிடாதே. மறந்தால் வேஷ்டி கிடையாது, பார்த்துக்கொள். அதை இப்பொழுதே சொல்லிவிடுகிறேன்.”

“சரி” என்று சொல்லி அரையணாவை வாங்கிக் கொண்டு சதீஷ் வேகமாய் ஓடினான். விஜயா சூன்யமய திருஷ்டியுடன் அதே திசையை நோக்கிப் பார்த்து, ஒன்றும் பேசாமல் நின்றுகொண்டிருந்தாள். அநேக நாட்களுக்கு முன்னமேயே, மிக்க சுலபமாய், தான் தெரிந்துகொண்டிருக்கக் கூடிய ஒரு விஷயத்தை அறிவதற்கு இப்பொழுது ஏன் இவ்வளவு கஷ்டப்பட வேண்டும் என்பதை நினைத்த மாத்திரத்தில் அவள் மிகுந்த லஜ்ஜைப்பட்டாள்.

அநேக கடிதங்கள் எழுதவேண்டி யிருந்தன. நேரத்தைக் கழிப்பதற்காக, விஜயா மேஜையின் முன்னால்போய், காகிதத்தையும் பேனாவையும் எடுத்துக்கொண்டு உட்கார்ந்தாள். ஆனால் எழுதவேண்டிய விஷயம் கோவையாக அவளுடைய மனத்தில் வரவில்லை. அநேக காகிதங்களை எழுதி எழுதிக் கிழித்தெறிந்தாள். பேனாவை அப்படியே

மேஜையின்மீது வைத்தாள். சதீசனும் இன்னும் வர வில்லை. அவளுடைய மனம் சஞ்சலமடைந்தது. மாடியின் மீது ஏறி, சதீஷ் வருகிருனு என்று பார்க்க ஆரம்பித்தாள்.

வெகு நேரத்திற்கு அப்புறம், சதீஷ் நதிக்கரையி லுள்ள பாதையின் வழியாக ஓடிவருவது தெரிந்தது. விஜயா வின் ஹிருதயம் துடித்தது. அவளுடைய கால்கள் நடுங் கின. அவள் கீழே இறங்கிச் சென்றாள். வெளியறைக் குள் நுழைந்ததும், சதீஷ் அடிமேல் அடிவைத்துத் திருடனைப் போல், இரண்டு பேடாப் பொட்டணங்களையும் மடியினின் றும் எடுத்து, அவள் முன்னால் வைத்து, "அரையணுவுக்குப் பன்னிரண்டு பேடா வாங்கி வந்திருக்கிறேன், அம்மா!" என்றான்.

விஜயா :—அப்புறம் கடைக்காரன் என்ன சொன் ஞன்?

அவளுடைய நாக்குழறியது.

அவளுடைய காதண்டை வந்து அதிரகசியமாக, "காலணுவுக்கு ஆறு பேடா வீதம் கொடுத்ததை ஒருவரிடத் திலும் சொல்லாதே என்று சொன்னான். இன்னும் என்ன சொல்லுகிறான், தெரியுமா........" என்று ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

விஜயா :—(குறுக்கிட்டு) அப்புறம் அந்த நரேன் பாபு விஷயம்?

சதீஷ் :—அவர்தான் அங்கில்லையே........எங்கேயோ போய்விட்டார்........கோவிந்தன் என்ன சொல்லுகிறான் தெரியுமா, அம்மா? பன்னிரண்டு பேடா........

"கொண்டு போ, அந்தப்புறம்........உன் பன்னிரண்டு பேடாவை. என் முன்னால் நில்லாதே" என்று மிகுந்த கோபத்துடன் விஜயா சொன்னாள்.

இவ்விதம் சொல்லி, அவ்விடத்தை விட்டு அகன்று, ஜன்னலின் பக்கம் சென்று, திறந்த சூன்ய வெளியை நோக்க ஆரம்பித்தாள். அவளுடைய கோபத்தைக் கண்டு சதீசனின் முகம் சிறுத்துவிட்டது. அவன் எவ்வளவு வேகமாய் ஓடிச் சென்றான்; எவ்வளவு வேகமாய் ஓடிவந்தான்! பதிஞெரு பேடாவுக்குப் பதிலாக எவ்வளவு கெட்டிக்காரத்தனமாகப் பன்னிரண்டு பேடா வாங்கிக்கொண்டு வந்தான்! அப்படியிருந்தும் ஜமீன்தாரிணி யம்மாளைத் திருப்தி செய்யமுடியவில்லை! இம்மாதிரி நினைத்துச் சதீஷ் அளவிலாத் துக்கமெய்தினான். அவன் அவ்விரண்டு பொட்டணங்களையும் எடுத்துக்கொண்டு அவள் முன்னால் போய், "இதைவிட அதிகமாய் அவன் கொடுக்கமாட்டான், அம்மா!" என்று வாடிய முகத்துடன் சொன்னான்.

அதற்கு விஜயா ஒரு பதிலும் சொல்லவில்லை. ஆனால் அச்சிறுவனுடைய நிலைமையை அவள் முற்றிலும் உணர்ந்தாள். ஆகையினால் சிறிது நேரத்திற்குப் பின் மிகுந்த அன்பு செறிந்த குரலில், "போ, சதீஷ்! இந்தப் பேடாவை நீயே சாப்பிடு" என்று சொன்னாள்.

"எல்லாமா?" என்று சதீஷ் மிகுந்த பயத்துடன் கேட்டான்.

"ஆம், எல்லாந்தான். எனக்கு அந்தப் பேடா வேண்டாம்."

கோபத்தினாலேயே அம்மாதிரி சொல்லுகிறாள் என்று சதீசனுக்குத் தெரிந்துவிட்டது. சிறிது நேரம் பேசாமல் நின்றுகொண்டிருந்தான். திடீரென்று வேஷ்டியின் ஞாபகம் வரவே, அவன் மெதுவாக, "பட்டாச்சாரியாரிடத்தில் கேட்டுவிட்டு வரட்டுமா, அம்மா?" என்று கேட்டான்.

விஜயா:—அந்தப் பட்டாச்சார்யார் யார்? என்ன கேட்க?

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும்போதே விஜயா திடுக்கிட்டு நின்றாள். விஜயாவின் வீட்டை நோக்கி நரேந்திரன் வந்துகொண்டிருந்தான்! உள்ளே நுழைந்ததும், நரேந்திரன் கைகூப்பி, விஜயாவை நமஸ்கரித்தான்.

சதீஷ், விஜயாவின் பழைய கேள்விக்கு இப்பொழுது பதிலளித்தான். "நரேந்திர பாபு எங்கே சென்றிருக்கிறார் என்று கேட்கத்தான்........"

நரேந்திரனின் நமஸ்காரத்திற்குப் பிரதி நமஸ்காரம் செய்வதற்குக்கூட விஜயாவுக்குச் சந்தர்ப்பங் கிடைக்கவில்லை. வெட்கத்தினால் அவளுடைய முகம் சிவந்தது. அவ்விஷயத்தை மறைப்பதற்காக வெகு அவசரமாய், "சரி, போ, போ; இப்பொழுது கேட்கவேண்டிய அவசியமில்லை" என்று சொன்னாள்.

இதுவும் கோபத்தினால்தான் சொல்லுகிறாள் என்று சதீஷ் நினைத்தான்.

"அம்மா, பட்டாச்சார்ய பாபு அவருடைய வீட்டிற்கு அடுத்த வீட்டில்தான் வசிக்கிறார், கோவிந்தன் தனக்கு ஒன்றும்........"

விஜயா அவன் சொல்வதைக் கவனியாமல், ஓர் அசட்டுச் சிரிப்புடன், "வாருங்கள், உட்காருங்கள்" என்றாள்.

பின்பு சதீசனை நோக்கி, "நீ போ சதீஷ். அப்படியொன்றும் பிரமாத விஷயமில்லை! இன்றில்லாவிட்டால், இன்னொரு நாளைக்குக் கேட்டுக்கொண்டு வரலாம். இப்பொழுது அவசரமில்லை போ" என்றாள்.

"நரேந்திரபாபு எங்கிருக்கிறார் என்றுதானே அறிய விரும்புகிறீர்கள்?" என்று சதீஷ் சென்ற பின்பு நரேந்திரன் கேட்டான்.

இல்லையென்று மறுத்திருக்கலாம்; ஆனால் பொய் சொல்லி அவளுக்குப் பழக்கமில்லை; "ஆம். பரவாயில்லை,

இன்னொரு நாளைக்குத் தெரிந்துகொள்கிறேன். இப்பொழுது அவசரம் ஒன்றுமில்லை" என்றாள்.

நரேந் :—எதற்காக அவருடைய விலாசத்தைக் கேட்கிறீர்கள்? என்ன அவசியம்?

விஜயா :—அவசியம் இல்லாவிட்டால், ஒருவருடைய விலாசத்தைக் கேட்கக்கூடாதோ?

நரேந்:—நரேந்திரனுக்கும் தங்களுக்கும் இருந்த சம்பந்தந்தான் இப்பொழுது அறுந்துவிட்டதே. பின் ஏன் நீங்கள் அவருடைய விலாசத்தை விசாரிக்கிறீர்கள்? அவருடைய கடன் முழுதும் இன்னும் தீரவில்லையா? இன்னும் ஏதாவது பாக்கியிருக்கிறதா?

விஜயாவின் முகத்தில் விசனக்குறிகள் தோன்றின; அவள் பதில் சொல்லவில்லை. நரேந்திரனும் தன் ஹிருதயத்தின் உத்வேகத்தை முழுதும் மறைக்க முடியவில்லை. "இன்னும் ஏதாவது கடன்பாக்கி யிருந்தால், அதைத் தீர்ப்பதற்கு, இப்பொழுது அவரிடத்தில் யாதொரு விதமான சொத்தும் இல்லை. இந்தச் சமயம் மீண்டும் அவரைத் தேடுவதில்........" என்றான்.

விஜயா :—கடனை வசூலிப்பதற்குத்தான் அவரைத் தேடிக்கொண்டிருக்கிறேன் என்று தங்களுக்கு யார் சொன்னது?

நரேந் :—வேறு காரணம் என்ன இருக்க முடியுமென்று எனக்குத் தெரியவில்லை. நீங்களும் அவரைப் பார்த்ததில்லை; அவரும் உங்களைப் பார்த்ததில்லையே.

விஜயா :—எனக்கும் அவரைத் தெரியும்; அவருக்கும் என்னைத் தெரியும்.

நரேந் :—(சிரித்துக்கொண்டு) அவருக்கு உங்களைத் தெரியும் என்பது உண்மை, ஆனால் தங்களுக்கு அவரைத்

தெரியாது. என் பெயர்தான் நரேந்திரன் என்று நான் சொன்னாலும் நீங்கள் நம்பவேண்டியதுதானே ?

விஜயா:—நீங்கள் சொல்வதை நான் பூர்ணமாக நம்புவதோடு, இவ்வுண்மையை முன்னமேயே ஏன் சொல்லியிருக்கக்கூடாது என்றுதான் கேட்கிறேன்.

விளக்கை அணைத்தவுடன், வீட்டில் எத்தகைய இருள் பரவுகிறதோ, அதேமாதிரி, விஜயாவின் இப்பதிலைக் கேட்டவுடன், நரேந்திரனுடைய முகம் வாட்டமடைந்தது.

"வேறு மனிதனைப்போல் பாவித்துக்கொண்டு, தன்னைப் பற்றிய விஷயங்களைக் கேட்பதையும், ஒளிமறைவாக இருந்து மற்றவர்கள் விஷயங்களை ஒற்றுக்கேட்பதையும், இவ்விரண்டையும், நான் ஒன்றாகவே மதிக்கிறேன். நாங்களெல்லாம் பிரம்மசமாஜிகள். ஆகையினால் நாங்கள் இப்படி நினைக்கிறோம். ஆனால் தாங்கள் அப்படி நினைப்பதில்லை போலும் !"

நரேந்திரனுடைய முகம் லஜ்ஜையினால் இரத்தமற்று வெளுத்தது. " தங்களோடு பேசிய அநேக விஷயங்களில், என்னைப்பற்றிய பேச்சும் சிறிது வர நேர்ந்தது. ஆனால் ஏதாவது கெட்ட எண்ணத்தோடு நான் அவ்வாறு செய்யவில்லை. கடைசி தினத்தன்று உண்மையில் நான் யார் என்பதைத் தங்களிடம் சொல்லிவிடுவதென்றே நிச்சயித்திருந்தேன் ; ஆனால் பின்பு சொல்ல முடியவில்லை. அதனால் தங்களுக்கு ஏதாவது தீங்கு நேரிட்டுவிட்டதா ?

இந்தக் கேள்வியை முதலிலேயே கேட்டிருந்தால் பதில் சொல்ல விஜயாவுக்கு மிகவும் கடினமாய்த் தோன்றியிருக்கும். ஆனால் இப்பொழுது இக்கேள்விக்கு வெகு சுலபமாய்ப் பதிலளித்தாள் :

" ஒருவனுடைய குற்றத்தினால், எத்தனை பேர்களுக்குத் தீங்கு நேரிடுகிறது ? எனக்கும் ஏதாவது தீங்கு

நேரிட்டிருந்தால், அதுதான் நேர்ந்துவிட்டதே; அதற்கு இனிமேல் தங்களால் என்னசெய்ய முடியும்? அது போனால் போகட்டும். உங்கள் விஷயமாக நான் ஏதாவது அறிய விரும்பினால்..........கேட்டால்...........நீங்கள்...........

நரேந் :—கோபித்துக் கொள்வேனா? இல்லை, ஒரு காலும் இல்லை.

இவ்விதம் சொல்லி அவன் கலகலவென்று நகைத்தான். நொடிப்பொழுதில் அவனுடைய பொலிவிழந்த முகமண்டலம் பிரகாசமடைந்தது. இத்தனை நாளும் விஜயா அவனோடு பேசிய அத்தனை பேச்சுக்களால்கூட உண்டாக்கமுடியாத ஓர் உறவை, இவ்வொரு சிரிப்பு உண்டாக்கியது. அவனுடைய உள்ளும் புறமும், எல்லாம் ஒரே மாதிரி ஸ்படிகம்போல் மாசற்றவை என்று விஜயாவுக்குத் தோன்றிற்று. தன் சகல சொத்துக்களையும் பறிமுதல் செய்தவர்கள்மீதுகூட அவனுக்குச் சிறிதேனும் பகையில்லை. அவன் "இல்லை" என்று சொல்லும் வார்த்தை அவனுடைய ஹிருதயத்தினின்றும் வருகிறது. ஆகையினால் நரேந்திரன்முன்பு தலைநிமிர்ந்து பேசுவதற்கும் விஜயாவுக்கு வெட்கமா யிருந்ததுபோலும்.

"நீங்கள் இப்பொழுது எங்கே தங்கியிருக்கிறீர்கள்?" என்று தலைகுனிந்த வண்ணமே அவள் கேட்டாள்.

நரேந் :—என்னுடைய தூரபந்து ஒருவர் வீட்டில் இருக்கிறேன்.

விஜயா :—தாங்கள் சீமைசென்ற விஷயமாகச் சமூகம் செய்த ஆர்ப்பாட்டம் கிராமவாசிகளுக்குத் தெரியாதோ?

நரேந் :—ஏன் தெரியாது?

விஜயா :—தாங்கள் அங்கே வசிப்பதற்கு அவர்கள் ஏதேனும் இடையூறு செய்வதில்லையா?

நரேந் :—(சிறிதுநேரம் யோசித்து) நான் வசிக்கும் இடத்தை வீட்டின் உட்பக்கம் என்று சொல்லமுடியாது.

மேலும் என்னுடைய நிலைமை என் பந்துக்களுக்குத் தெரியும். ஆகையினால் கொஞ்ச நாட்கள்தானே, இருந்துவிட்டுப் போகட்டும் என்றிருக்கிறார்கள். அதிகநாள் அங்கிருந்து அவர்களைத் தொந்தரவு செய்ய எனக்கும் இஷ்டமில்லை.

இவ்விதம் சொல்லி நரேந்திரன் சற்று நின்று மீண்டும் சொல்லலுற்றான் :

" சரி, உண்மையைச் சொல்லுங்கள். இவ்விஷயங்களெல்லாம் தாங்கள் என் அறிய விரும்பினீர்கள் ? ஏன் என்னைப்பற்றி விசாரித்துவிட்டு வரச் சொன்னீர்கள் ? தந்தை இன்னும் ஏதாவது கடன் கொடுக்க வேண்டியிருக்கிறது போலும் !....அப்படித்தானே ?

விஜயா நரேந்திரன் பக்கம் திரும்பினாள். ஆனால் திடீரென்று " ஆம் " என்றாவது, "இல்லை " என்றாவது அவளால் சொல்வதற்கு முடியவில்லை.

நரேந் :—நீங்களே சொல்லுங்கள். பிதாவினுடைய கடனைத் திர்ப்பதற்கு யாருக்குத்தான் விருப்பமிராது? ஆனால் தங்களிடத்தில் உண்மையைச் சொல்லுகிறேன். என்பேரிலாவது, அல்லது மற்றவர்கள் பேரிலாவது, என் சொத்து என்று சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. கேவலம் ஒரு பூதக் கண்ணாடி (Microscope)இருக்கிறது. அதை விற்றுப் பர்மா போகவேண்டுமென்று எண்ணியிருக்கிறேன். என் பந்துக்கள் எனக்கு உதவிசெய்யும் நிலைமையில் இல்லை. அன்றன்றைக்குச் சாப்பாட்டிற்கே அவர்களுக்கு....

விஜயாவின் கண்களில் கண்ணீர் ததும்பியது ; அவள் முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

நரேந் :—ஆனால் தாங்கள் கிருபைகூர்ந்து என்னிடத்தில் ஒரு பத்திரம் எழுதி வாங்கிக்கொள்ளுங்கள். அதை எப்படியாவது கட்டாயம் தீர்ப்பதற்கு நான் என் வாழ்க்கை முழுவதும் பிரயத்தனம் செய்வேன். ராஸ்

ஷிஹாரி பாபுவினிடத்தில் கொஞ்சம் சிபார்சு செய்து, இப் பொழுதே அக்கடனைத் தீர்க்கும்படி தொந்தரவு செய்யா திருக்குமாறு சொல்வீர்களானால், தங்களுக்கு நான் என்றும் நன்றியுடையவனா யிருப்பேன்.

"அம்மா, சாதம் பரிமாறி வெகு நேரமாய்விட்டதே" என்று சதீஷ் வாசலுக்கு வெளியிலேயே நின்றுகொண்டு சொன்னான்.

முன்னாலிருந்த பெரிய கடிகாரத்தைப் பார்த்ததும், நரேந்திரன் திடுக்கிட்டு எழுந்து நின்றான்; "ஐயோ! பன்னி ரண்டு மணி அடிக்கப்போகிறது! தங்களை நான் அதிகக் கஷ்டப்படுத்திவிட்டேன். மன்னியுங்கள்" என்று அவன் சொன்னான்.

"தாங்கள் என்ன விஷயமாய் வந்தீர்கள்? அதைச் சொல்லவில்லையே?" என்று கண்ணீரைத் துடைத்துக் கொண்டு விஜயா கேட்டாள்.

நரேந் :—அதைப்பற்றிப் பரவாயில்லை; இப்பொழுது ஒன்றும் அவசரமில்லை.

அவன் செல்வதற்குத் தயாராயிருப்பதைக் கண்டதும், விஜயா, "தாங்கள் இப்பொழுதிருக்கும் வீடு இங்கிருந்து எவ்வளவு தூரம்? இப்பொழுது நீங்கள் அங்கேதானே போகிறீர்கள்?" என்று கேட்டாள்.

நரேந் :—ஆம், கொஞ்சதூரந்தான். நான்கு மைல்கள் இருக்கும்.

விஜயா :—(ஆச்சரியமுற்று) கடுமையான இம்மத்தி யான வெயிலில், நாலுமைல் நடந்து போகவா? போய்ச் சேர்வதற்குள் மூன்று மணி யாகிவிடுமே.

நரேந் :—ஆனால் ஆகிறது; அதைப்பற்றிக் கவலை யில்லை. நமஸ்காரம்.

நரேந்திரன் போவதற்குக் கால் எடுத்து வைத்தான். ஆனால் அதற்குள் விஜயா வேகமாக வாசலுக்கு முன்னால் வந்து, வழியை மறித்து நின்றுகொண்டு, "ஒரு வேண்டுகோள்; தாங்கள் கேட்டுத்தான் தீரவேண்டும். இவ்வளவு நேரமாகிவிட்டது. இனிமேல் தாங்கள் சாப்பிடாமல் இங்கிருந்து செல்லமுடியாது" என்றாள்.

நரேந் :—(மிக்க ஆச்சரியத்துடன்) சாப்பிட்டுவிட்டா போகவேண்டும்! இங்கேயா!

விஜயா:—ஏன், இங்கே சாப்பிட்டால், தங்களை ஜாதிப் பிரஷ்டம் செய்துவிடுவார்களோ?

நரேந்திரன் நகைத்தான்.

"இல்லை; இப்பொழுது எனக்கு அந்தப் பயம் கிடையாது. இன்று பகவானுக்கு என்மீது கருணை பிறந்திருக்கிறது போலும்! வீட்டிற்குச் சென்றாலும் எனக்கு இப்பொழுது சாப்பாடு எங்கே கிடைக்கப்போகிறது?"

விஜயா :—சற்று உட்கார்ந்திருங்கள்; இதோ வருகிறேன்.

விஜயா அங்கிருந்து சென்றாள்.

## பதினோராம் அத்தியாயம்

### பூதக் கண்ணாடி

போஜனம் முடிந்ததும், நரேந்திரன் மீண்டும் அதே விஷயத்தைப்பற்றிய பேச்சை எடுத்தான்.

" இவ்வளவு நேரமும் உபவாசமிருந்து, என்னைத் தங்கள் முன்னால் உட்காரவைத்துக் கொண்டு, சாப்பாடு போடவேண்டிய அவசியம் என்ன ஏற்பட்டது? இம்மாதிரி வழக்கத்தை நான் எந்த தேசத்திலுமே பார்த்ததில்லை."

விஜயா சிரித்தாள்.

" புருஷர்களுக்கு முந்தியோ, அல்லது அவர்களோடு சேர்ந்தோ சாப்பிடுவது ஸ்திரீகளுக்கு அழகல்ல என்று அப்பா அடிக்கடி சொல்வது வழக்கம். என்னுடைய அபிப்பிராயமும் அதுதான்."

நரேந் :—ஏன் அப்படிச் சொல்கிறீர்கள் ? நம்முடைய தேசத்தில் நான் அநேக வீடுகளில் சாப்பிட்டிருக்கிறேன். அங்கெல்லாம் ஸ்திரீகள் புருஷர்களுடன் உட்கார்ந்தே சாப்பிடுகிறார்கள்.

விஜயா :—சீமைப் பழக்க வழக்கங்களைக் கற்றுக் கொண்ட குடும்பங்களில் அம்மாதிரி நடக்கலாம் ; ஆனால் எல்லா வீடுகளிலும் அப்படி நடப்பதில்லை. தாங்கள் வெகு நாள் சீமையிலேயே இருந்து பழகிவிட்டீர்கள் ; அதனால் தான் அப்படிச் சொல்கிறீர்கள். நாங்கள் புருஷர்களுக்கு முன்னால் சங்கோசமில்லாமல் வெளியேறுவோம் ; அவசியம் நேரிட்டால் அவர்களோடு பேசவும் செய்வோம்.

அதனுல் நாங்கள் ஆங்கிலேயர்களும் அல்ல ; அவர்களுடைய பழக்க வழக்கங்களைப் பின்பற்றுபவர்களும் அல்ல.

நரேந் :—பின்பற்றுபவர்களல்ல வென்பது உண்மை தான் ; ஆனுல் பின்பற்றுவது நலமல்லவா ? நல்ல வழக்கம் யாருடையதா யிருந்தாலும்; நாம் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

விஜயா :—எது நல்லது ? புருஷர்களோடு உட்கார்ந்து உண்பதா ! இவ்விதம் சொல்லிச் சிறிது நகைத்துப் பின்னும் சொல்லலுற்ருள் :

" இம்மாதிரி, புருஷர்களை முன்னுல் உட்காரவைத்துப் போஜனம் செய்விப்பதில் எத்தகைய ஆர்வம், எத்தகைய ஆனந்தம் ஸ்திரீகளுக்கு இருக்கிறதென்பது உங்களுக்கென்ன தெரியும் ? ஸ்திரீகளுக்குரிய உரிமைகள் பலவற்றை நான் விட்டுக்கொடுக்கத் தயார் ; ஆனுல் இவ்வுரிமையை மட்டும் ஒருகாலும் இழக்கச் சம்மதியேன். இதென்ன, பால் வைத்தபடியே இருக்கிறதே ! தாங்கள் குடிக்கவே இல்லைபோலும் ! முடியாது, முடியாது, தலையசைப்பதில் பிரயோஜனமில்லை. தங்கள் வயிறு நிறையவில்லை. எனக்குத் தெரியும் !"

நரேந்திரன் சிரித்துக்கொண்டே, "என் வயிறு நிறைந்ததும், நிறையாததும் தங்களுக்கு எப்படித் தெரியும் ? அதி அற்புதமாகத்தான் இருக்கிறது இது !" என்ருன்.

இவ்விதம் சொல்லி அவன் எழுந்து நின்ருன். அவனுடைய சொற்களைக் கேட்டதும், விஜயாவுக்கும் சிறிது சிரிப்பு வந்தது. ஆனுல் நரேந்திரன் அப்பாலைக் குடியாததற்காக, அவளுக்கு மிக்க வருத்தமாயிருந்த தென்பது அவளுடைய முகத்தினின்றும் தெளிவாய்த் தெரிந்தது.

வெகு நேரத்திற்கு அப்புறம் விஜயாவிடத்தில் விடை பெற்றுக்கொள்ளும் பொழுது நரேந்திரன், " எனக்கு

ஒரு சந்தேகம். நீங்கள் என்னை வெயிலில் போகவிடவில்லை, சாப்பிடாமல் போகவிடமாட்டேன் என்றீர்கள். பாலைக் குடிக்கவில்லையென்று கோபித்துக்கொண்டீர்கள் - இதெல்லாம் எவ்வளவு தூரம் உண்மை; நான் இப்படிப் பேசுகிறேனே என்று தாங்கள் வருந்தவேண்டாம். நான் மனக்கிலேசத்தினால் இம்மாதிரி சொல்கிறேன் என்று நினைக்கவேண்டாம். அப்பொழுதிருந்தே நான் இதைப் பற்றித்தான் யோசித்துக்கொண்டிருக்கிறேன். இதெல்லாம் எப்படி உண்மையாயிருக்கமுடியும்?" என்றான்.

விஜயா:—எல்லா வீடுகளிலும் விருந்தினரை இம்மாதிரியேதான் உபசரிப்பார்கள். அதிருக்கட்டும்; தாங்கள் என்று பர்மா செல்கிறீர்கள்?

நரேந்:—நாளை நின்று; நான் உங்களுக்கு முற்றிலும் அந்நியன். என்னுடைய சுகதுக்கங்களினால் தங்களுக்கு உண்மையில் எதுவும் ஆவதுமில்லை, போவதுமில்லை; எனினும் தங்களுடைய நடத்தையைக் கவனித்தால், வெளியிலிருப்பவர் எவரும் நான் தங்களுடைய உறவினனல்ல என்று சொல்லமுடியாது. எங்கே நான் கொஞ்சமாய்ச் சாப்பிட்டுவிடுகிறேனோ, அல்லது போஜனம் செய்விப்பதில் ஏதாவது குற்றம் நேர்ந்துவிடுமோ என்று பயந்து, நீங்கள் கூடச் சாப்பிடாமல், முன்னாலேயே உட்கார்ந்துகொண்டிருந்தீர்கள். எனக்குச் சகோதரியில்லை; தாயும் என் குழந்தைப் பருவத்திலேயே இறந்துபோனாள். ஆனால் அவர்கள் யாராவது இருந்தாலும், இவ்வளவு அன்புடன் போஜனம் செய்விப்பார்களா என்று என்னால் நிச்சயமாய்ச் சொல்லமுடியாது. தங்களுடைய உபசாரங்களைக் கண்டு நான் உண்மையிலேயே மிகவும் ஆச்சரியமடைகிறேன். இவ்வன்பும் ஆதரவும் உண்மையானவையே என்பதை நானும் அறிவேன்; நீங்களும் அறிவீர்கள். ஆனால்

இதை உண்மையென்று சொல்வது ஒரு வேளை உங்களுக்குத் துன்பம் தரலாம். அதே சமயம் இதைப் பொய் யென்று சொல்வதற்கும் மனம் வரவில்லை.

விஜயா ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டிருந் தாள்; "நல்லுபசாரத்தையும், மரியாதையையும் தாங்கள் வேறெங்கும் பார்த்ததில்லையா? பிரமாதப்படுத்துகிறீர்களே?" என்று வெளியில் பார்த்தவண்ணம் சொன்னாள்.

நரேந் :—மரியாதையா ? ஓ ! அப்படியிருக்கலாம்.

நரேந்திரன் ஒரு பெருமூச்சு விட்டான். "எப்படி யாவது, தந்தையின் கடன் முழுவதும் தீர்ந்துவிட்டது பற்றி எனக்கு மிக்க சந்தோஷம். தங்களுடைய மந்திரம் நாளுக்குநாள் விருத்தி யடையவேண்டும். இன்றைத் தினத்தை நான் என்றுமே மறக்கமாட்டேன். சரி, நான் வருகிறேன்" என்று சொல்லி நரேந்திரன் விஜயாவை அஞ்சலி செய்தான்.

பிறகு வேகமாய் நரேந்திரன் அறையைவிட்டு வெளியே வந்தபொழுது, "கொஞ்சம் பொறுங்கள்" என்று ஒரு மெல்லிய சப்தம் உள்ளிருந்து கேட்டது.

நரேந்திரன் திரும்பிவந்து அவள் முன்னால் நின்றதும், விஜயா மிருதுவான குரலில், "தங்கள் பூதக் கண்ணுடியின் விலை என்ன ?" என்று கேட்டாள்.

நரேந் :—நான் வாங்கியது ஐந்நூறு ரூபாய்க்குமேல்; ஆனால் இப்பொழுது இருநூறு, இருநூற்றைம்பது ரூபாய் கிடைத்தாலும் விற்றுவிடுவேன். அதை வாங்கிக்கொள் பவர்கள் யாராவது இருக்கிறார்களா? புத்தப் புதிது!

அதை விற்பதற்கு அவனுக்கிருந்த ஆத்திரத்தைக்கண்டு அவள் மிக்க மனோவேதனையுற்றாள். "இவ்வளவு குறைந்த விலைக்குக் கொடுத்துவிடுவீர்களா ? ஏன், இனிமேல் உங்களுக்கு அது தேவை இல்லையா ?" என்று கேட்டாள்.

நரேந் :—(பெருமூச்சு விட்டு) தேவை யில்லாமல் என்ன? ஆனல் என்ன செய்வது?

அப்பெருமூச்சை விஜயா கவனியாம லிருக்கவில்லை. சிறிது நேரம் மௌனமா யிருந்துவிட்டு, "எனக்கும் வெகுநாளாய் ஒரு பூதக்கண்ணுடி வாங்க வேண்டு மென்று விருப்பம். ஆனல் இன்றுவரை அது நிறைவேற வில்லை. நாளைக்கு அதை ஒரு முறை கொண்டுவந்து காட்டு வீர்களா?" என்முள்.

நரேந் :—உம், காட்டுகிறேன். அதை எப்படி உப யோகிப்பது என்பதையும் தங்களுக்குக் கற்றுக்கொடுக் கிறேன். (சிறிது நேரம் யோசித்து) அதை விலை மதிப்பிடு வதற்கோ, அல்லது பரீக்ஷை செய்து பார்ப்பதற்கோ இப் பொழுது அவகாசமில்லை. ஆனல் அவ்வளவு விலைகொடுத்து அதை வாங்கினல், தாங்கள் ஏமாந்தவர்கள் ஆகமாட்டீர்கள் என்று மட்டும் நிச்சயமாய்ச் சொல்வேன். (சிறிது நேரம் மௌனமாயிருந்து) சில பொருள்கள் இருக்கின்றன. அவை களை ரூபாயினல் விலை மதிப்பிடமுடியாது. இதுவும் அதே மாதிரி ஒரு வஸ்து என்று நான் நிச்சயமாய்ச் சொல்வேன். எனக்கு வேறு வழியில்லை: செலவுக்குப் பணம் வேண்டி யிருக்கிறது. இல்லையானல்....................சரி; நாளை மத்தி யானம் அதைக் கொண்டுவருகிறேன்.

நரேந்திரன் போன பின்பு, அவனுடைய உருவம் கண் ணுக்குத் தெரியும்வரை விஜயா அவனையே பார்த்துக்கொண் டிருந்தாள். பின்னர், அவள் ஒரு நாற்காலியில் வந்து உட் கார்ந்தாள். அப்பொழுது, கண்ணுக்கெட்டியமட்டும் ஒரே வெட்ட வெளியாக அவளுக்குத் தோன்றிற்று. அவளுக்கு முன்னுலிருந்த வஸ்துக்களெல்லாம், எவ்வித உபயோகமும் அற்றவைகளாய்த் தோன்றின. அதற்காக அவள் மனத்தில் துக்கமுமில்லை, சஞ்சலமுமில்லை. இம்மாதிரி சூன்ய திருஷ்டி

யுடன் வெளியிலுள்ள மரஞ்செடி கொடிகளைப் பார்த்துக் கொண்டு ஒரு விக்ரஹத்தைப்போல் உட்கார்ந்திருப்பதில் அவளுடைய நேரம் எப்படிக் கழிந்ததென்பது அவளுக்கே தெரியவில்லை. எப்பொழுது இருட்டியது, வேலைக்காரன் எப்பொழுது வந்து விளக்கேற்றினுன் என்பது ஒன்றும் அவளுக்குத் தெரியாது. அவளுடைய கண்களினின்றும் கண்ணீர் மாலை மாலையாக வடிந்துகொண்டிருந்தது. விரைவாகக் கண்ணீரைத் துடைத்தாள். கையினுல் தொட்டுப் பார்த்தபொழுது, தன்னுடைய மார்பின்மீதிருந்த ரவிக்கை முழுவதும் நனைந்திருக்கக் கண்டாள். அது எப்பொழுது நனைந்தது, எப்படி? கண்ணீரினுலா வேறுவகையிலா என்பது ஒன்றும் அவளுக்குத் தெரியாது. சீ! சீ! வேலைக்காரன், வேலைக்காரி எல்லோரும் வந்திருப்பார்கள், அவள் அழுது கொண்டிருந்ததையும் பார்த்திருப்பார்கள்; ஐயோ என்ன நினைத்திருப்பார்கள்! அவசியம் ஏற்பட்டபொழுதுகூட, வேலைக்காரர்களைக் கூப்பிட விஜயாவுக்கு அன்று லஜ்ஜையாயிருந்தது.

இரவில் படுக்கையில் படுத்துக் கொண்டு, ஜன்னலைத் திறந்து, அவள் முன்போலவே இருள் நிறைந்த வெளியை நோக்கிக்கொண்டிருந்தாள். அவளுடைய எதிர்கால வாழ்க்கை அச்சூன்ய இருளைப்போலவே அவள் கண்களுக்கு முன்னுல் தோன்றலாயிற்று. அதற்கப்புறம் எப்பொழுது தூங்கினுள் என்பது அவளுக்குத் தெரியாது; ஆனுல் அவள் கண்களைத் திறந்தபொழுது, காலை இளஞ் சூரியனின் அழகிய ஒளி அறை முழுவதும் பரவியிருந்தது. கண் விழித்ததும், அவளுடைய சிந்தனையெல்லாம் சில தினங்களுக்குமேல் பழக்க மில்லாத நரேந்திரனையே நாடியது. அவளால் இன்னதென்று அறியமுடியாத ஒரு வேதனை தூங்கும்பொழுதுகூட இருந்ததாக அவளுக்குத்

தோன்றியது. அவளுக்கும் அவனுக்கும் இவ்வளவு நெருங்கிய சம்பந்தம் எப்படி உண்டாகியதென்று தெரியவில்லை.

நேரம் கழிந்தது. எவ்வேலையைச் செய்யத் தொடங்கினாலும் அவளுடைய கவனமெல்லாம் வேறு எங்கேயோ செல்ல ஆரம்பித்தது. 'பூதக்கண்ணாடியைப் பார்ப்பதற்கு இருக்கும் ஆவல்தான் அது; அதை ஒருமுறை பார்த்துவிட்டால் வேதனையெல்லாம் நிவர்த்தியாகிவிடும்; இன்றில்லாவிட்டாலும் நாளை ஆகிவிடும்' என்று இவ்வாறெல்லாம் சொல்லிச் சமாதானப்படுத்திக் கொண்டாள்; ஆனால் எல்லாம் வீணாயிற்று. பொழுது ஏற ஏற அவளுடைய வேதனையும் சந்தேகமும் அதிகரிக்க ஆரம்பித்தன. சூரியன் சிறிது சிறிதாக மேற்குத் திசையை நோக்கிச் சாய்ந்தான். வெயிலின் உக்கிரக் குறைவு அஸ்தமனம் நெருங்கிவிட்டதென்று அறிக்கை விடுத்தது. விஜயா சொல்லொணாத் துயருற்றாள். பர்மாவுக்குச் செல்லும் அவசரத்தில், அவன் தன் வீட்டிற்கு வர மறந்துவிட்டானோ என்று நினைத்தாள். ஒருவேளை அப்பூதக் கண்ணாடியை வேறு யாருக்காவது அதிக விலைக்கு விற்றுவிட்டானோ என்றுகூடச் சந்தேகித்தாள்.

தன்னுடைய மனோபாவனைகளைக் குறிப்பாகவேனும் அவனுக்குச் சிறிது தெரிவித்திருக்கக் கூடாதா என்று பரிதவிக்கலானாள். தன்னைப் பாராமலே அவன் பர்மா சென்றுவிடுவானாகில், அது தன்னுடைய குற்றத்திற்கு ஏற்ற தண்டனையே யாகும்! இவ்வாறெல்லாம் நினைத்து விஜயா தன்னையே நொந்துகொண்டாள். 'சதீசனையாவது அல்லது வேறு யாரையாவது, ஏதாவது ஒரு சாக்கில் நரேந்திரனிடத்தில் அனுப்பலாமா? அனுப்பினால் அவனைத் தேடிப் பிடிக்க முடியுமா? அப்படியே தேடிப்பிடித்தாலும் அவன் வருவதற்குச் சம்மதிப்பானோ மாட்டானோ? என்று இவ்வா

றெல்லாம் அவள் தன் மனத்தில் தர்க்க விதர்க்கம் செய்து கொண்டு மீண்டும் மீண்டும் கடிகாரத்தைப் பார்ப்பதும், உள்ளே போவதும், வெளியே வருவதுமாய் நேரத்தைக் கழிக்கமுடியாமல் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கையில், சதீஷ் அறைக்குள் நுழைந்து, " அம்மா, கீழே வாருங்கள்; பாபு வந்திருக்கிறார் " என்று சொன்னான்.

விஜயாவுக்கு இன்னும் சந்தேகம், "எந்தப் பாபுவடா?" என்று கேட்டாள்.

சதீஷ் :—நேற்று மாலை வந்திருந்தாரே, அவர்தான். அவருடைய கையில் ஒரு பெரிய தோல் பெட்டி இருக்கிறதம்மா!

விஜயா :—(அதிக சந்தோஷத்துடன்) நீ போய், அவரை உட்காரச் சொல். நான் இதோ வருகிறேன்.

இரண்டு மூன்று நிமிஷங்களுக்குப் பிறகு விஜயா முற்றத்தினுள் நுழைந்து நமஸ்காரம் செய்தாள். இன்று அவள் கட்டியிருந்த புடைவையிலும், பின்னியிருந்த சடையிலும், சுருங்கக்கூறின் எல்லா விஷயங்களிலுமே, ஒரு விசேஷ அழகும், அலங்காரமும் இருந்தன. இவ்வித்தியாசத்தைக் கண்டதும், நரேந்திரன் திகிலடைந்தான். அவனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை. அவனுடைய ஆச்சரியத்தைக் கண்டதும், விஜயா வெட்கத்தினால் அப்படியே ஸ்தம்பித்துவிட்டாள். தோல் பெட்டி இதுவரை நரேந்திரனுடைய கையிலேயே இருந்தது. அதை மேஜையின்மீது வைத்துவிட்டு, மெள்ள மெள்ள, " நமஸ்காரம்; நான் சீமையிலே சித்திரக்கலை சிறிது படித்தேன். தங்களை நான் இதற்குமுன் எத்தனையோ முறை பார்த்திருக்கிறேன்; ஆனால், உண்மையைச் சொல்லுகிறேன்: இன்று உங்களைப் பார்த்ததும், என் கண்கள் பரவசமடைந்தன. இன்று தங்களைப் பார்க்கும் ஒரு சித்திரக்காரனுக்கு, ஓர் அழகிய

படம் வரையவேண்டுமென்ற அபரிமிதமான ஆசை தோன்றுமென நான் நிச்சயமாய்ச் சொல்லுவேன். ஹா! எத்தகைய சௌந்தர்யம்!" என்று சொன்னான்.

இவ்வார்த்தைகள், சௌந்தர்யத்தின் சரணங்களில் கபடமற்ற பக்தியுடனும், தன்னலமற்ற ஹிருதயத்துடனும் அவனிடும் புனிதமான புஷ்பாஞ்சலி என்று விஜயா அறிந்துகொண்டாள். சௌந்தர்ய உபாசகனுடைய இப் பவித்ர ஸ்துதி, அவனேயும் அறியாமல், சுபாவமாக அவன் ஹிருதயத்தில் தோன்றுவது என்று அவளுக்கு நிச்சயமாய்த் தெரிந்தது. இம்மாதிரி வார்த்தைகள் நரேந்திரனுடைய நாவினின்று மட்டுந்தான் வெளியேற முடியும் என்பதையும் அவள் அறிந்தாள். என்றாலும், தன்னுடைய சிவந்த முகத்தை எங்கே மறைப்பது, சர்வ அலங்கார பூஷிதமான தன்னுடைய சரீரத்தை எங்கே கொண்டு ஒளித்துவைப்பது என்று அவள் மிகுந்த சங்கோசப்பட்டாள்! ஆனால் க்ஷணநேரத்தில், தன் சங்கோசத்தைச் சமாளித்துக்கொண்டு, தலைநிமிர்ந்து, கம்பீரத்துடன், "என்னை இம்மாதிரி அவமானம் செய்வது தங்களுக்குத் தகுமா? உங்களிடத்தில் ஒரு சாமான் வாங்குவதற்காக உங்களைக் கூப்பிட்டேனே ஒழிய, சித்திரம் வரைவதற்காக அல்ல" என்றாள்.

பதிலைக் கேட்டதும் நரேந்திரனுடைய முகம் சிறுத்து விட்டது. அத்தியந்த வெட்கத்துடன், தெளிவான குரலில், வித்தியாசமாக எதுவும் நினைத்துக்கொண்டு அம்மாதிரி சொல்லவில்லை யென்றும், தான் செய்தது பெருந் தவறே யென்றும், இனிமேல் ஒருபோதும் அப்படிச் செய்ய மாட்டேனென்றும் இம்மாதிரி பலப்பல சொல்லி அவளிடத்தில் மன்னிப்புக் கேட்டான்.

நரேந்திரனுடைய பச்சாத்தாபத்தைக் கண்டு விஜயா சிரித்தாள். சிரித்துக்கொண்டே, "எங்கே, உங்கள் கண்ணுடியைப் பார்ப்போம்" என்ருள்.

நரேந்திரனுக்கு இப்பொழுதுதான் உயிர் வந்தது. "இதோ காட்டுகிறேன்" என்று சொல்லி விரைவாகத் தன் பெட்டியைத் திறக்க ஆரம்பித்தான். முற்றத்தில் வெளிச்சம் அதிகமில்லை. ஆகையினுல் பக்கத்திலிருந்த வேருேர் அறையைக் காட்டி, "அவ்வறையில் வெளிச்சம் இன்னும் யதேஷ்டமா யிருக்கிறது; வாருங்கள், அங்கே போகலாம்" என்ருள் விஜயா.

"செல்லலாம்" என்று சொல்லிப் பெட்டியைக் கையில் எடுத்துக்கொண்டு நரேந்திரன் அவ்வறைக்குள் போய் நின்ருன். ஒரு சிறு முக்காலியின்மீது அதை வைத்துவிட்டு இருவரும் இரண்டு நாற்காலிகளில் உட்கார்ந்தார்கள்.

"முதலாவது இதைப் பாருங்கள். பின்பு, இதை எப்படி உபயோகிப்பது என்பதை நான் தங்களுக்குக் கற்றுக் கொடுக்கிறேன். இவ்வதிசயக் கருவியைப் பார்த்திராத ஜனங்கள், இச்சிறு கருவியினுள் எவ்வளவு பெரிய அற்புதமான விஷயங்கள் அடங்கியிருக்கின்றன என்பதை நினைத்தும் பார்க்கமுடியாது. வெளியிலிருக்கும் பிரம்மாண்டமான அண்டகோளங்களை யெல்லாம் தன் கைமுஷ்டியில் மனிதன் அடக்கவல்லான் என்பதை இக்கருவியினுல்தான் நாம் அறிகிருேம்."

இத்தகைய பீடிகையுடன் நரேந்திரன் அதைத் திறந்து விஜயாவுக்குக் காண்பித்தான். சீமையில் டாக்டர் பரீக்ஷையில் தேறியபின்பு, ஜீவாணுதத்துவத்தில் நரேந்திரனுடைய கவனம் சென்றது. ஆகையினுல் அத்துறையில் அவனுடைய ஆராய்ச்சி ஒருபுறம் அதிகரிக்க அதிகரிக்க மற்ருெருபுறம் அந்த ஜீவாணுக்க (கிருமிக)ளைச் சேகரிப்பதிலும் அவன்

அதிக முயற்சிகளை மேற்கொண்டான். தன்னுயிரினும் அதிகப் பிரியமாய் வைத்திருந்த இக்கருவியுடன் தான் சேகரித்து வைத்திருந்த அத்தனை கிருமிகளையும் விஜயாவுக்குச் சேர்த்துக் கொடுப்பதற்காக அவைகளையும் கொண்டுவந்திருந்தான். அவைகளைக் கொடாவிட்டால் அக்கருவியை வாங்குகிறவர்களுக்கு அதனால் என்ன உபயோகமுண்டாகப் போகிறதென்று நினைத்தான்.

விஜயாவுக்கு முதலில் கருவியினுள் ஒன்றுமே தெரியவில்லை. தூசு மாதிரியும், பனிப்படலம் மாதிரியும், புகை மாதிரியும் என்னென்னவோ தெரிந்தன. உற்சாகத்துடனும் பிரயாசையுடனும், "இப்பொழுது தெரிகிறதா?" என்று நரேந்திரன் அவளைக் கேட்டபோதெல்லாம் அவளுக்குச் சிரிப்பு வந்தது. அதை யெல்லாம் பற்றி அறிய அவளுக்கு ஆர்வமும் இல்லை, கவலையும் இல்லை. நரேந்திரன் தன்னுயிரையும் கொடுத்து, அதில் எப்படிப் பார்க்கவேண்டுமென்று அவளுக்குக் கற்பிக்க முயன்றான்; அதை விதவிதமான கோணத்தில் திருப்பி வைத்துக்கொண்டு, அவள் பார்ப்பதற்கு எளிதாகுமாறு செய்ய யத்தனித்தான். அவனுடைய ஒவ்வொரு வார்த்தையும் விஜயாவின் ஹிருதயத்தில் சென்று எதிரொலித்தது. நரேந்திரனுடைய சுவாசம், அவிழ்த்திருந்த விஜயாவின் கேச கலாபத்தைப் பறக்கடித்தது; அவளுடைய சரீரத்தின் உரோமங்களெல்லாம் சிலிர்த்தன. பல தடவைகள் கையோடு கைபடுவதினால் விஜயாவின் சரீரம் முழுவதும் மயிர்க்கூச்செறிந்தது!

ஜீவாணுவின் சரீரத்திற்குள் என்ன இருக்கிறது, என்ன இல்லை என்பதைப் பார்ப்பதில் அவளுக்கென்ன பிரயோசனம்? எந்த ஜீவாணு மலேரியாவை உற்பத்தி செய்து கிராமத்தை நாசமாக்குகிறது, எந்த ஜீவாணு க்ஷயரோகத்

தைப் பரப்பி ஜனங்களைத் துன்புறுத்துகிறது, இவற்றையெல்லாம் தெரிந்துகொள்வதனல் விஜயாவுக்கு என்ன லாபம்? தெரிந்துகொண்டாலும் அவைகளைத் தடுப்பதற்கு அவளால் முடியாதே! அவள் டாக்டர் அல்லவே! அவன் தொண்டை கிழியக் கத்தியதுதான் மிச்சம். அவன் சொல்லியது ஒன்றேனும் அவளுக்குப் புரியவில்லை. இவ்விதம் பத்து நிமிஷம் வரை வீண் பிரயத்தனஞ் செய்தபின்பு, சலிப்புற்று, நரேந்திரன் நாற்காலியில் உட்கார்ந்தான். "இது உங்களுக்கு விளங்காது. இம்மாதிரி மண்டுகங்களை நான் என் ஜன்மத்திலும் பார்த்ததில்லை! என்றுன்.

விஜயா சிரிப்பை அடக்கிக்கொண்டு, "நான் மண்டூகமா, அல்லது உங்களால் எனக்கு விளங்குமாறு சொல்வதற்குத் தெரியவில்லையா?" என்றுள்.

தனது இங்நாகரிகமற்ற நடத்தைக்காக அவன் மனம் வெட்கினுன். "நீங்களே சொல்லுங்கள். இனி எவ்வகையில் நான் உங்களுக்கு விளக்கட்டும்? தங்கள் புத்தியைக் குறை கூறுவதற்கு முடியாது; ஆனல் தங்களுக்கு இதில் மனம் செல்லவில்லை யென்று நினைக்கிறேன். கத்திக் கத்தி நான் சாகிறேன்; நீங்கள் கீழே குனிந்து, சிரித்துக்கொண்டிருக்கிறீர்கள்" என்றுன்.

விஜயா:—நான் சிரித்துக்கொண்டிருக்கிறேன் என்று யார் சொல்வது?

நரேந்:—நான்தான் சொல்லுகிறேன்.

விஜயா:—நீங்கள் சொல்வது தவறு.

நரேந்:—சரி, இக்கருவியில் குற்றமில்லையல்லவா? பின் ஏன், உங்களுக்கு ஒன்றும் தெரிவதில்லை?

விஜயா:—உங்கள் கருவி மோசமானது; ஆகையினுல் தான்.

நரேந் :—கருவி மோசமானதா? இத்தகைய உயர்தரமான பூதக்கண்ணுடி இங்கே யாரிடத்திலாவது இருக்கிறதைத் தாங்கள் பார்த்திருக்கிறீர்களா? இதில் எவ்வளவு ஸ்பஷ்டமாகப் பொருள்கள் தெரிகின்றன!

இவ்விதம் சொல்லித் தன்னுடைய கண்ணினுல் கருவியைப் பரிசோதிப்பதற்காக அதிக ஆவலுடன் திடீரென்று நரேந்திரன் குனிந்தானே இல்லையோ, விஜயாவின் தலையோடு அவன் தலை மோதிற்று.

'ஊ' என்று கத்தி விஜயா தன் தலையைத் தூக்கிக் கையினுல் தடவ ஆரம்பித்தாள். நரேந்திரன் வெட்கமடைந்து ஏதோ சொல்ல யத்தனித்தான். அத்ற்குள் விஜயா சிரித்துக்கொண்டே, "தலையோடு தலை மோதுவதனுல் என்ன உண்டாகும், தங்களுக்குத் தெரியுமா? கொம்பு முளைக்கும்!" என்ருள்.

நரேந்திரன் சிரித்தான். "கொம்பு முளைப்பதானுல், அது உங்கள் தலையில்தான் முளைக்கவேண்டும்" என்ருன்.

விஜயா :—ஓஹோ! உங்களுடைய உடைந்துபோன, பழைய பூதக்கண்ணுடியை மோசமென்று சொன்னதனுல் என் தலையில் கொம்பு முளைக்கவேண்டுமோ! ஏன் ஸ்வாமிகளே?

நரேந்திரன் சிரித்தான்; ஆனுல் அவனுடைய முகத்தில் கவலைக்குறிகள் தோன்றின. "நான் உண்மையைச் சொல்லுகிறேன்; இக்கருவி உடைந்ததல்ல. நான் இப்பொழுது கஷ்டத்திற்குள்ளிருப்பதால் தங்களை ஏமாற்றி எப்படியாவது பணம் பறிக்க விரும்புகிறேன் என்று நீங்கள் எண்ணுகிறீர்கள். நீங்கள் நினைப்பது தவறு என்று உங்களுக்குப் பின்னுல் தெரியும்" என்ருன்.

விஜயா :—பின்னுல் தெரிந்து நான் என்ன செய்யப் போகிறேன் ? அப்பொழுது நான் உங்களை எங்கே கண்டு பிடிப்பேன் ?

நரேந் :—நீங்கள் இதை வாங்கிக்கொள்வதாகப் பின் ஏன் சொன்னீர்கள் ? வீணுகவா தாங்கள் எனக்கு இவ்வளவு கஷ்டம் கொடுத்தீர்கள் ?

விஜயா :—(கம்பீரத்துடன்) தங்களுடைய கருவி உபயோகமற்றது என்று அப்பொழுதே நீங்கள் ஏன் சொல்லவில்லை ?

நரேந் :—(மிகுந்த கோபத்துடன்) நான்தான் நூறு தடவை சொல்லிவிட்டேன், இப்பொழுதும் சொல்லுகிறேன் அது உடைந்ததல்லவென்று ! பின்னும், அது உடைந்தது, உடைந்ததென்று நீங்கள் சொல்லுகிறீர்கள் !

உடனே நரேந்திரன் தன் கோபத்தை அடக்கிக் கொண்டு எழுந்து நின்று, " சரி, அப்படியே இருக்கட்டும். நான் உங்களோடு வாதாட விரும்பவில்லை; இது உடைந்தது தான். உங்களால் நான் நாளை பர்மா போவது நின்றுவிட்டது. அவ்வளவுதான். எல்லோரும் தங்கள் மாதிரி குருடர்களல்லவே ; கல்கத்தாவில் இதை வெகு சுலபமாய் என்னுல் விற்கமுடியும். சரி, நான் போகிறேன் " என்றான்.

நரேந்திரன் கருவியைப் பெட்டியினுள் வைக்க ஆரம்பித்தான். திடீரென்று விஜயா கம்பீர பாவத்துடன், "இப்பொழுது எப்படிப் போய்விடுவீர்கள்? சாப்பிட்ட பிறகு தான் போகமுடியும் " என்றாள்.

நரேந் :—இல்லை. சாப்பாடு இப்பொழுது அவசியம் இல்லை.

விஜயா:—ஏன் அவசியமில்லை ?

நரேந் :—எல்லாம் உங்களுக்குச் சிரிப்பாயிருக்கிறது ? என்னைக் கேலியா பண்ணுகிறீர்கள் ?

விஜயா :—நேற்று நான் உங்களைச் சாப்பிடச் சொன்னபொழுது, கேலியா பண்ணினேன்? அது முடியாது. தாங்கள் கட்டாயம் சாப்பிடத்தான் வேண்டும். சற்று உட்காருங்கள்; நான் இதோ வருகிறேன்.

விஜயா இவ்விதம் சொல்லிப் பொங்கிவரும் சிரிப்பை அடக்கிக்கொண்டு, அறை முழுவதும் சௌந்தர்ய அலைகளை வீசி எறிந்துகொண்டு அங்கிருந்து சென்றாள். நாலைந்து நிமிஷங்களுக்கப்புறம், தாலத்தில் போஜனம் பரிமாறி, அதைத் தன்கையில் எடுத்துக்கொண்டு வந்தாள். அவளுக்குப் பின்னாலேயே ஒரு வேலைக்காரி, தேத்தண்ணீர் தயாரிப்பதற்கு வேண்டிய சாமான்களுடன் வந்து கொண்டிருந்தாள். முக்காலி காலியாயிருப்பதைக் கண்டதும், "அதற்குள் கண்ணாடியை எடுத்துப் பூட்டி வைத்துவிட்டீர்களா? இருந்தாலும், உங்களுக்கு இவ்வளவு கோபம் ஆகாது!" என்று விஜயா சொன்னாள்.

"நீங்கள் வாங்காவிட்டால் நான் ஏன் கோபித்துக் கொள்ளவேண்டும்? ஆனால் சற்று யோசித்துப் பாருங்கள். இவ்வளவு பெரிய, கனமான வஸ்துவை இத்தனை தூரம் தூக்கிக்கொண்டுவந்து, மீண்டும் கொண்டுபோவதென்றால் எவ்வளவு கஷ்டம்!" என்று நரேந்திரன் உதாசீனமாகச் சொன்னான்.

விஜயா :—(தாலத்தை மேஜையின்மீது வைத்துவிட்டு) ஆம், கஷ்டந்தான்; ஆனால் எனக்காகவா கஷ்டப்பட்டீர்கள்? எல்லாம் உங்களுக்காகத்தானே? சரி, சாப்பிடுங்கள். நான் அதற்குள் தேநீர் தயாரிக்கிறேன்.

நரேந்திரன் அப்படியே பேசாமல் உட்கார்ந்திருந்தான். அதைக் கண்டதும் விஜயா, "சரி, நான் அதை வாங்கிக்கொள்ளுகிறேன். நீங்கள் திரும்பவும் தூக்கிக்

கொண்டுபோகவேண்டிய கஷ்டம் நேரிடாது. தயைசெய்து சாப்பிடுங்கள் " என்ருள்.

அவனுடைய சுய மதிப்பு பங்கமடைந்தது; " தாங்கள் என்மீது கிருபைகூற வேண்டுமென்று நான் தங்களிடத்தில் பிரார்த்தித்துக்கொள்ளவில்லையே " என்ருன்.

விஜயா :—தங்களுடைய மாமாவின் சார்பாகப் பேச வந்தீர்களே; அன்று என்ன செய்தீர்கள்?

நரேந் :—அது மற்றவர்களுக்காக ; எனக்காகவல்ல ; ஒருகாலும் அவ்வழக்கம் எனக்கில்லை.

விஜயாவும் அதை அறியாதவ ளல்ல. ஆகையினல் அவளுக்குச் சிறிது வருத்தமாக இருந்தது. " அது எப்படி யானலுஞ்சரி; இக்கருவியைத் தாங்கள் திரும்பக் கொண்டு போகமுடியாது ; இங்கேயே வைத்துவிட்டுச் செல்லவேண் டியதுதான். சரி, போஜனம் செய்யுங்கள் " என்ருள்.

நரேந் :—(சந்தேகத்துடன்) இதன் அர்த்தம் ?

விஜயா :—அர்த்தம் இருக்கத்தான் செய்கிறது.

பதிலைக் கேட்டு நரேந்திரன் ஆச்சரியமுற்ருன். கருவிலைய ஏன் திருப்பிக் கொடுக்கமாட்டேன் என்கிருள் என் பதன் காரணத்தைப்பற்றியே அவன் தன் மனத்தில் சிந்தித் துக்கொண்டிருந்தான் போலும். சிறிது நேரத்திற்குப்பின் மிகுந்த கோபத்துடன், " அதைத்தான் தெளிவாய் அறிய விரும்புகிறேன். வாங்குகிறேன் என்பதாகப் பாசாங்கு செய்து, அதைத் தங்களிடத்திலேயே வைத்துக்கொள்ளவா விரும்புகிறீர்கள்? இதையுமா தந்தை தங்களிடத்தில் அடைமானமாக வைத்துவிட்டுச் சென்ருர் ? அப்படியானல், என்னையும் பயமுறுத்தித் தங்களிடத்தில் வைத்துக்கொள்ள லாமே - ' உன்னையும் உன் தந்தை என்னிடத்தில் அடை

மானமாகத்தான் வைத்துவிட்டுச் சென்றார்' என்று கூடச் சொல்வீர்கள்போ லிருக்கிறதே!" என்றான்.

விஜயாவின் முகம் லஜ்ஜையினாலும், துக்கத்தினாலும் சிவந்தது. அங்கே நின்றுகொண்டிருந்த வேலைக்காரனைப் பார்த்து, "ஏன் நின்றுகொண்டிருக்கிறாய்? சாமானை வைத்துவிட்டுப் போய், வெற்றிலை கொண்டு வா" என்றாள்.

வேலைக்காரன் கெட்டில் முதலியவைகளை மேஜையின் ஓர் ஓரத்தில் வைத்துவிட்டுச் சென்றான். விஜயா பேசாமல் தேநீர் தயாரித்துக்கொண்டிருந்தாள். சிறிது தூரத்தில், நரேந்திரன் முகத்தைச் சுளித்துக்கொண்டு நாற்காலியில் உட்கார்ந்திருந்தான்.

# பன்னிரண்டாம் அத்தியாயம்

## வேந்த புண்ணில் வேல்

சிருஷ்டி தத்துவத்தின் இரகசியங்களை விஜயா பெரிய பெரிய வித்துவான்கள் வாயினின்று அதிகமாகக் கேட்டிருக்கிறாள். ஆனால் சிருஷ்டி எப்பொழுது ஆரம்பித்தது, எதற்காக ஆரம்பித்தது, அதன் உருவம், இயல்பு எப்பேர்ப்பட்டவை, அதனுடைய சரித்திரம் என்ன என்ற விஷயங்களை வேறு எவரிடத்திலும் இவ்வளவு தெளிவாகவும், ஐயந்திரிபறவும் அவள் இதுவரை கேட்டதே இல்லை. விளையாட்டாக எந்தக் கருவி உடைந்ததென்றும், உபயோகமற்றதென்றும் சொல்லிக் கொண்டிருந்தாளோ, அதே கருவியின் உதவியினால், அதிஅபூர்வமும் அற்புதமுமான காட்சிகளை அவள் காணும் பாக்கியம் பெற்றாள். பார்ப்பதற்குப் பித்துப்பிடித்தவன் போலவும், ரோகிபோலவும் இருக்கும் இம்மனிதன் டாக்டர் பரீக்ஷை பாஸ்பண்ணி யிருப்பான் என்று எவருமே நம்பமாட்டார்கள். ஆனால் நரேந்திரன் கேவலம் டாக்டர் பரீக்ஷைமட்டும் பாஸ் பண்ணவில்லை; அதனுடன் கண்ணுக்குத்தெரியாத ஜீவஜந்துக்களைப் பற்றியும் மிகுதியாகக் கற்றிருக்கிறான் என்பதை அவள் கண்டாள். அவனுடைய அறிவின் ஆழத்தையும், தவத்தின் வலிமையையும், அபாரமான ஞாபகசக்தியையும் கண்டு விஜயா பிரமித்துப்போனாள். அத்தகைய மஹானாக இருந்தபோதிலும், அவன் ஒரு சாதாரண மனிதனைப்போல் கோபித்துக்கொள்வதும், அக்கோபத்தை வெளிக்காட்டுவதும் எவ்வளவு சகஜமாயிருக்கின்றன! கருவியைப் பற்றியும், அக்கருவியின்

உதவியால் தெரியக்கூடிய ஜீவாணுக்களைப்பற்றியும் நரேந்திரன் அவளுக்குச் சொல்லிக்கொண்டிருக்கையில், சில விஷயங்கள் மட்டுமே அவளுக்குப் புரிந்தன. ஆனால் இன்னும் சில விஷயங்கள் அவள் மூளையில் ஏறவே இல்லை. அவள் பேசாமல் உட்கார்ந்துகொண்டு நரேந்திரனுடைய முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

நரேந்திரன் வெகு உற்சாகத்துடன், அவள் கேட்கிறாளா இல்லையா என்பதைக் கூடக் கவனியாமல், தன் பாட்டில் பேசிக்கொண்டே போனான். அவனுடைய சிரத்தையைக் கண்டு, அவள் அவன்மீது அளவுகடந்த அன்பும் பக்தியும் கொண்டாள்.

தான் கத்துவது வீணென்று, நரேந்திரனுக்கும் தெரிந்துவிட்டது; "நீங்கள் கவனிப்பதே இல்லைபோலும்!" என்றான்.

விஜயா :—(திடுக்கிட்டு) நான் கவனித்துக்கொண்டு தானே இருக்கிறேன் ?

நரேந் :—நான் என்ன சொன்னேன் சொல்லுங்கள், பார்ப்போம்.

விஜயா :—பேஷ் ! ஒரே நாளையில் எல்லாம் வந்து விடுமோ ?

நரேந் :—(சலிப்படைந்து) உங்களால் ஒன்றும் கற்றுக் கொள்ள முடியாது. உங்களைப்போல் சலன புத்தியுடையவர்களை, நான் இந்த ஜன்மத்தில் பார்த்ததில்லை !

விஜயா :—ஒரே நாளில் ஒருவர் எல்லாம் கற்றுக் கொள்ள முடியுமா ? நீங்கள் ஒரே தினத்தில் இவைகளையெல்லாம் கற்றுக்கொண்டுவிட்டீர்களா ?

நரேந் :—ஒருநாளாய்ப் போவானேன், நூறு வருஷங்களானாலும், உங்களால் கற்றுக்கொள்ளமுடியாது. அதுவுந் தவிர, உங்களுக்குச் சொல்லிக்கொடுக்க யாரால் முடியும் ?

விஜயா :—(சிரிப்பை அடக்கிக்கொண்டு) நீங்கள் தான் சொல்லிக்கொடுக்கவேண்டும். இல்லையானால் இவ்வுடைந்த கருவியை யார் வாங்குவது ?

நரேந் :—(கம்பீரத்துடன்) நீங்கள் அதை வாங்கிக் கொள்ளவும் வேண்டாம். நான் உங்களுக்குக் கற்றுக் கொடுக்கவும் முடியாது.

விஜயா :—அப்படியானால், சித்திரம் எழுதவாவது கற்றுக்கொடுங்கள். அதாவது கற்றுக்கொள்ள முடியுமல்லவா ?

நரேந் :—அதுவும் முடியாது. எதில் சித்தம் லயித்து மனிதன் ஸ்நானபானாதிகளைக்கூட மறந்துவிடுகிறானோ, அதிலேயே உங்களுக்கு மனத்தை ஒருமுகப்படுத்த முடியவில்லையென்றால், சித்திரக்கலையை எப்படி உங்களால் கற்றுக்கொள்ள முடியும் ? அது ஒருகாலும் முடியாது.

விஜயா :—சித்திரம் எழுதவும் என்னால் கற்றுக் கொள்ள முடியாதா ?

நரேந் :—முடியாது.

விஜயா :—(பயந்தவள்போல் பாவனைசெய்துகொண்டு) ஒன்றுமே கற்றுக்கொள்ள முடியாவிட்டால் கொம்பல்லவா முளைத்துவிடும் !

அவளுடைய முக பாவனையையும், ஹாஸ்யத்தையும் கண்டவுடன் நரேந்திரன் மீண்டும் சிரித்தான்; "அதுதான் தங்களுக்கு ஏற்ற தண்டனை" என்றான்.

விஜயா தன் முகத்தை ஒருபுறம் திருப்பி, சிரிப்பை மறைத்துக்கொண்டு, "கற்றுக் கொடுக்கும் திறமை தங்களுக்கு இல்லையென்று ஏன் சொல்லக்கூடாது ? அடே, வேலைக்காரர்களெல்லாம் என்ன செய்துகொண்டிருக்கிறார்கள் ? விளக்கு ஏன் கொண்டுவரவில்லை. சற்று உட்கார்ந்

திருங்கள்; விளக்குக் கொண்டுவரும்படி சொல்லிவிட்டு வருகிறேன்" என்றாள்.

விஜயா வேகமாய் எழுந்து வாசல் திரையை நீக்கினதும், திடீரென்று பேய் பிசாசைப் பார்த்தவள்போல் திடுக்கிட்டாள். முன்னாலிருந்த முற்றத்தில், இரண்டு நாற்காலிகளில், ராஸ்விஹாரியும் விலாஸ்விஹாரியும் உட்கார்ந்திருந்தார்கள். "நீங்கள் எப்பொழுது வந்தீர்கள் சித்தப்பா? என்னை ஏன் கூப்பிடவில்லை?" என்று விஜயா கேட்டாள்.

ராஸ்:—நான் வந்து அரைமணிக்கு மேலாகிறது, பெண்ணே. நீ அவ்வறையில் பேசிக்கொண்டிருந்தாய். ஆகையினால் கூப்பிடவில்லை. அது யார், ஜகதீசனுடைய புத்திரனா? எதற்காக வந்திருக்கிறான்? என்ன கேட்கிறான்?

அடுத்த அறைக்குக் கேளாதவாறு மெல்லிய குரலில், "அவரிடத்தில் ஒரு பூதக்கண்ணாடி இருக்கிறது. அதை விற்றுப் பர்மா போவதற்கு விரும்புகிறார். அதைத்தான் என்னிடம் காட்டிக்கொண்டிருந்தார்" என்று விஜயா சொன்னாள்.

விலாஸ்:—(எப்போதும்போல் உரத்த குரலில்) பூதக்கண்ணாடியா! ஏமாற்றுவதற்கு அவனுக்கு வேறு இடம் கிடைக்கவில்லையா?

ராஸ்:—(சாந்தமான குரலில்) அப்படி ஏனப்பா சொல்லுகிறாய்? அவனுடைய நோக்கத்தை இன்னும் நாம் அறியவில்லையே; ஒரு வேளை நல்லுத்தேசமாகவும் இருக்கலாமல்லவா?

பின்னர், விஜயாவின் முகத்தைப் பார்த்துச் சிறிது சிரித்து, தலையசைத்துக்கொண்டு, "நாம் நன்றாய் அறியாதவர்கள் விஷயத்தில், ஓர் அபிப்பிராயமும் சொல்லாமலிருப்பதே நலமென்று நினைக்கிறேன். அவனுடைய உத்தேசம் கெட்டதாக இராது. ஆனால் ஒரு வேளை அப்படியும் இருக்

கலாமல்லவா, பெண்ணே ?" என்று சற்று நிறுத்தி மீண்டும் சொல்லலுற்றார். "நிச்சயமாய் ஒன்றும் சொல்லமுடியா தென்பதும் உண்மைதான். அது எப்படியும் இருக்கட்டும். அந்தக் கண்ணாடி நமக்கெதற்கு ? கண்ணுக்குத் தெரியாத வஸ்துக்களையெல்லாம் பார்ப்பதனால் நமக்கென்ன பிரயோசனம் ?........யார் அங்கே போகிறது ? இதோ நாராயணா! அவ்வறைக்கு விளக்கா கொண்டுபோகிறாய் ? போ, அங்கே உள்ள பாபுவினிடத்தில் நம்மால் அதை வாங்கமுடியாது என்பதையும் சொல்லிவிட்டுவா" என்றார்.

விஜயா :—(மிகுந்த பயத்துடன்) நான் அதை வாங்கிக் கொள்வதாக முன்னாலேயே வாக்களித்துவிட்டேன்.

ராஸ் :—(ஆச்சரியத்துடன்) வாக்களித்துவிட்டாயா? நமக்கெதற்கு அது ?

விஜயா மௌனமாயிருந்தாள்.

ராஸ் :—அதற்கு என்ன விலை கேட்கிறான் ?

விஜயா :—இருநூறு ரூபாய்.

ராஸ் :—(புருவங்களை நெரித்துக்கொண்டு) இருநூறு ரூபாய் ! இருநூறு ரூபாயா கேட்கிறான் ? அப்படியானால், விலாஸ் சொன்னதிலும் குற்றமில்லைபோலிருக்கிறதே! என்ன விலாஸ், காலேஜில்தான், நீ ரஸாயன சாஸ்திரம் நன்றாய்ப் படித்திருப்பாயல்லவா ? ஒரு பூதக் கண்ணாடியின் விலை இருநூறு ரூபாயா ? அடே நாராயணா, அவனை வீட்டை விட்டு வெளியே போகும்படி சொல்லு ; இந்த ஏமாற்ற மெல்லாம் இங்கே நடக்காது.

நரேந்திரன் இவை யாவற்றையுங் கேட்டுக்கொண்டு தான் இருந்தான். ராஸ் விஹாரியின் கட்டளையை நாராயணன் நிறைவேற்றப் போவதைக் கண்டதும், விஜயா சாந்தத்துடனும் உறுதியுடனும், "நீ பேசாமல் விளக்கை

வைத்துவிட்டு வா. சொல்ல வேண்டியதெல்லாம் நானே சொல்லிக்கொள்வேன் " என்றாள்.

விலாஸ் :—(கோபத்துடன்) அப்பா, நீங்கள் ஏன் வேலையற்றுப் போய் வீண் அவமானம் அடைகிறீர்கள் ? நீங்கள் சொல்வதைத்தான் அவள் ஒன்றுங் கேட்ப தில்லையே.

ராஸ்விஹாரி ஒன்றும் பேசவில்லை ; ஆனால் விஜயாவின் முகம் கோபத்தினால் சிவந்தது.

" நானும் அநேக விதமான பூதக்கண்ணாடிகள் பார்த் திருக்கிறேன்; ஆனால் ' ஹ ஹா ' என்று சொல்லிச் சிரிக்கக் கூடிய விஷயம், அவைகளில் எதிலுமே பார்த்ததில்லை " என்று விஜயாவைப் பார்த்து விலாஸ் சொன்னான்.

நேற்று நரேந்திரன் சாப்பிட்ட விஷயமும் அவன் கேள்விப்பட்டிருந்தான் ; இன்று அவர்களுடைய சிரிப்பு விளையாட்டையும் அவன் தன் கண்ணாலேயே பார்த்துக் கொண்டிருந்தான். விஜயா செய்திருக்கும் அலங்காரமும் அவன் கண்களில் படாமலிருக்கவில்லை. பொறாமையினால் தன் அறிவையே இழந்து, நாகரிகமாகவும், மரியாதையாகவும் நடந்துகொள்ளவேண்டும் என்பதையும் அவன் மறந்தான். விஜயா அவனைச் சிறிதேனும் பொருட்படுத்தாமல், ராஸ் விஹாரியின் பக்கந்திரும்பி, " சித்தப்பா தாங்கள் ஏதாவது என்னிடத்தில் அவசியம் பேச வேண்டியிருக்கிறதா ?" என்று கேட்டாள்.

விஜயாவுக்குத் தெரியாமல் ராஸ்விஹாரி புத்திரனை ஒரு முறை கோபத்துடன் பார்த்தார். பின்பு விஜயாவை நோக் கிச் சாந்தமான குரலில், "உம், அவசியம் பேசவேண்டிய விஷயம் ஒன்று இருக்கிறது ; அதற்காகத்தான் வந்தேன் " என்றார். சற்று நின்று, " நான் யோசித்துப் பார்த்ததில், ஜகதீசனுடைய மகனுக்கு நீ வாக்குக் கொடுத்துவிட்டதால்,

என்னவானாலும் சரி, அதை நிறைவேற்றுவதே உசிதமெனத் தோன்றுகிறது. இருநூறு ரூபாய் பெரிதா? வார்த்தை பெரிதா? வார்த்தையைக் காப்பாற்றுவதற்காக உலகத்தில் பலர் எத்தனையோ கஷ்டங்களை அனுபவிக்கிறார்கள். சரி, நாராயணா! நரேந்திரனிடத்தில் போய், நாளை எந்த நேரமேனும் வந்து ரூபாயை வாங்கிக்கொண்டு போகும்படி சொல்லிவிட்டு வா. நான் சொல்வதென்ன விஜயா?" என்றார்.

விஜயா:—சிற்றப்பா, நாளைக்கு உங்கள் பேச்சை வைத்துக்கொள்ளக்கூடாதா?

ராஸ் விஹாரிக்குச் சிறிது வெடுக்கென்று இருந்தது. "ஏன் அம்மா?" என்றார்.

பலஹீனத்தையும், சங்கோசத்தையும் உதறித் தள்ளி, "இருட்டிவிட்டது. அவர் வெகுதூரம் போகவேண்டும். அவரோடு நான் கொஞ்சம் பேசவேண்டியிருக்கிறது" என்று விஜயா சொன்னாள்.

விஜயாவின் தைரியத்தைக் கண்டு ராஸ் விஹாரி மிகுந்த ஆச்சரியமுற்றார்; ஆனால் அதை வெளிக்காட்டாமல், ஏறிட்டுப் பார்த்தபொழுது, விலாஸ் விஹாரியின் சிறிய கண்களில் தீப்பொறி பறந்துகொண்டிருந்தது. ஏதோ கடுஞ்சொற்கள் சொல்லுவதற்கு அவன் ஸித்தனாக இருப்பது போல் தோன்றியது. ராஸ் விஹாரி அவனுடைய நிலைமையை நொடிப்பொழுதில் அறிந்துகொண்டார். தம் கூரிய பார்வையினால் மகனை எச்சரித்துவிட்டு, ஹாஸ்யம் ததும்பும் முகத்துடன், "அது நிஜந்தான், மகளே, நான் நாளைக் காலையில் வருகிறேன்; இருட்டிக்கொண்டு வருகிறது; விலாஸ், வா, நாம் போகலாம்" என்றார்.

இவ்விதம் சொல்லி அவர் எழுந்து நின்று, தம் மகன் கையைப் பிடித்து இழுத்து, அவனுடைய கோபக்கனல்

கொழுந்துவிடுவதற்கு முன்னால் அவனைத் தம்மோடு கூட்டிக்கொண்டு வெளியேறினர். விலாஸ் சொன்ன கடு மொழிகளுக்கப்புறம், விஜயா அவன் முகத்தையே பார்க்க வில்லை. ஆனால் அவனுடைய முக பாவத்தையும், கோபப் பார்வையையும், அவள் தன் கண்களால் பாராத போதிலும், மனத்தினால் ஊகித்து அறிந்துகொண்டாள். அவர்களிருவரும் போன பின்புங்கூட, வெகுநேரம் வரை அவள் ஒரு கற்சிலைபோல் நின்றுகொண்டிருந்தாள். "அறையில் விளக்கு ஏற்றிவிட்டேன், அம்மா" என்று நாராயணன்வந்து சொன்னான்.

"சரி" என்று சொல்லி வாசல் திரையை நீக்கிக் கொண்டு, மெள்ள மெள்ள விஜயா அவ்வறைக்குள் சென்றாள். நரேந்திரன் தலை குனிந்து ஏதோ யோசித்துக்கொண்டிருந்தவன் திடீரென்று எழுந்து நின்றான். ஒரு நீண்ட பெருமூச்சை அடக்குவதற்கு வீண் பிரயத்தனஞ் செய்தான். ஆனால் விஜயா அதைக் கண்டுகொண்டாள். சிறிது நேரம் பேசாமலிருந்து நரேந்திரன், துக்கத்துடன், "இதை நான் என்னோடு திரும்பக் கொண்டுதான் போவேன்; இன்று உங்களுக்கு நல்ல நாள் இல்லை போலும். இன்று காலையில் தாங்கள் யார் முகத்தில் விழித்தீர்களோ, நானும் உங்களிடத்தில் சற்றுக் கடுமையாகவே பேசினேன்; அவர்களும் அப்படியே பேசினார்கள்" என்றான்.

விஜயாவின் மனம் புண்பட்டிருந்தது. அவளுடைய மனோவேதனை அவளுடைய இருகண்களிலும் பிரதிபலித்துக் கொண்டிருந்தது. "இன்று விழித்த முகத்திலேயே நான் தினந்தோறும் விழிக்கவேண்டுமென்று ஈசுவரன் கிருபை செய்யவேண்டும். அவர்கள் பேசியதையெல்லாம் தாங்கள் கேட்டிருப்பீர்கள். தங்களைப்பற்றி இம்மாதிரி மரியாதையற்ற வார்த்தைகள் பேசுவதற்கு அவர்களுக்கு

இங்கே அதிகாரமில்லை. அவர்களுக்கு நாளை இதை நான் அறிவுறுத்துகிறேன்" என்று திடமான குரலில் விஜயா சொன்னாள்.

அதிதிகளை அவமரியாதை செய்வதை விஜயா எவ்வளவு தூரம் வெறுக்கிறாள் என்பதை நரேந்திரன் அறிந்தான். ஆனால் அவன் சாந்தத்துடனும், சகஜபாவத்துடனும், "அவசியமில்லை. இத்தகைய பொருள்களின் விலை அவர்களுக்குத் தெரியாது. அதனால்தான் அவர்கள் அம்மாதிரி சந்தேகித்திருப்பார்கள். இல்லையானால், என்னை வேண்டுமென்றே அவமானம் செய்வதில் அவர்களுக்கென்ன லாபமிருக்கிறது? உங்களுடைய மனத்தில்கூட முதலில் பல விதமான சந்தேகங்கள் உண்டாயினவல்லவா? அவர்கள் தங்களுடைய நெருங்கிய பந்துக்கள்; எனக்காக அவர்களைக் கோபித்துக்கொள்ளாதீர்கள். நல்லது; நேரமாகிறது. நான் போகிறேன்" என்றான்.

விஜயா :—நாளையாவது, நாளை நின்றாவது ஒரு முறை இங்கே வருவீர்களா?

நரேந் :—நாளை அல்லது நாளை நின்று? இப்பொழுது அவகாசமில்லையே. நான் நாளைக் கல்கத்தா செல்கிறேன். அங்கே சில நாட்கள் தங்கிவிட்டுப் பின்பு பர்மா செல்வேன். இனிமேல் தங்களைச் சந்திப்பதற்கு....

விஜயாவின் இருகண்களிலும் கண்ணீர் ததும்பியது. அவள் தலைநிமிரவில்லை; எதுவும் பேசவுமில்லை. நரேந்திரன் சிறிது சிரித்துக்கொண்டு, "நீங்கள் மற்றவர்களையெல்லாம் சிரிக்க வைக்கிறீர்கள், ஆனால் இத்தகைய சாதாரண விஷயத்திற்கு நீங்களே இவ்வளவு கோபித்துக் கொள்ளலாமா? நான் தங்களை மண்டூகமென்றும், இன்னும் என்னென்னவோ, சொல்லத் தகாத வார்த்தைகளெல்லாம் சொன்னேன்; அதற்கெல்லாம் நீங்கள் கோபித்துக்கொள்ளவில்லை

பேசாமல் சிரித்துக்கொண்டிருந்தீர்கள். அதைக் கண்டதும் எனக்குக் கோபம் பொங்கியது. என்னவானாலும், தங்களை நான் இனி எக்காலும் மறக்கமுடியாது, அதில் சந்தேகம் இல்லை" என்றான்.

மழைவிட்ட பின்பு, காற்றடித்தால், மரத்தின் இலைகளினின்றும் எப்படித் துளிகள் உதிர்கின்றனவோ, அதே மாதிரி நரேந்திரனுடைய கடைசி வார்த்தைகளைக் கேட்டதும் கண்ணீர்த் துளிகள் மளமளவென்று தரையின்மீது விழுந்தன. கையினால் கண்ணீரைத் துடைத்தால் நரேந்திரன் பார்த்துவிடுவானோ என்று பயந்து, விஜயா பேசாமல் தலை குனிந்த வண்ணம் நின்றுகொண்டிருந்தாள்.

நரேந் :—இக்கருவியை வாங்க முடியவில்லையே என்று தங்களுக்கு வருத்தமாக இருக்கிறதுபோலும்.

இவ்விதஞ் சொல்லி அவன் தர்மா தர்மம், சத்தியா சத்தியம் இவைகளைப்பற்றிச் சிந்திக்கலானான். பின்பு திடீரென்று விஜயாவின் மோவாய்க்கட்டையைத் தூக்கிப் பிடித்துக்கொண்டு வெகு ஆச்சரியத்துடன், "இதென்ன நீங்கள் அழுதுகொண்டிருக்கிறீர்கள் ?" என்று கேட்டான்.

மின்னலைப்போல் வேகமாக இரண்டடி பின்சென்று, விஜயா கண்களைத் துடைத்தாள். நரேந்திரனுக்கு இவ் விஷயமெல்லாம் ஒன்றும் விளங்கவில்லை. ஜீவாணுக்களைப் பற்றி அவன் அறிவான் ; அவைகளின் ஊர், பெயர், குலம், கோத்திரம் எல்லாம் அவனுக்குத் தெரியும். அவைகளின் காரிய ரீதி, பழக்க வழக்கங்கள் முதலியவற்றில் ஒன்றையும் அவனால் மறக்கமுடிவதில்லை. ஆனால் இதென்ன ? ஸ்தூல புத்தி, புத்தியில்லாதவள் என்று திட்டினபோதெல்லாம் சிரித்துக் கொண்டிருந்தாள். ஆனால், அதிசிரத்தையுடன் அவளைப் புகழும்பொழுது அழுது அழுது கண்ணீர் ஆறாய்ப் பெருக்குகிறாள் ; இம்மாதிரி அதிசய ஜீவஜந்துவோடு அவ

னைப்போல் ஞானிக்கு எப்படிக் காரியம் நடக்கும்? நரேந்திரன் சில விநாடி வரையில் பேசாமல் நின்றுகொண்டிருந்தான். பின்பு மெள்ள மெள்ளப் பூதக் கண்ணாடியுள்ள பெட்டியைக் கையில் எடுத்தான். உடனே விஜயா திடுக்கிட்டு, "அது என்னுடையது; தயைசெய்து அதை வைத்து விடுங்கள்" என்றாள்.

இவ்விதஞ் சொல்லி, அழுகையை அடக்கமுடியாமல், வேகமாய் அவ்விடத்தை விட்டுச் சென்றாள். அப்பெட்டியை அங்கேயே வைத்துவிட்டு என்ன செய்வதென்று தெரியாமல், இரண்டு மூன்று நிமிஷங்கள் நின்றுகொண்டிருந்தான் நரேந்திரன். பின்பு வெளியில்வந்து யாராவது இருக்கிறார்களா என்று பார்த்தான். பின்னும் ஒரு நிமிஷம் பேசாமல் நின்றுகொண்டிருந்துவிட்டுக் கடைசியில், வெறுங்கையுடன் அவ்விருளில் தன் வீட்டை நோக்கி நடந்தான்.

விஜயா திரும்பிவந்து பார்த்தபொழுது பெட்டி இருந்தது; ஆனால் அதற்குரியவனைக் காணவில்லை. அவள் ரூபாய் எடுத்துக்கொண்டு வருவதற்காகத் தன்னறைக்குச் சென்றிருந்தாள். அங்கே தன் அழுகையை நிறுத்தி, மனத்தைத் தேற்றிக்கொள்வதற்குள் வெகு நேரமாய்விட்டது. விஜயா தன்னைக் கூப்பிடுவதையறிந்து நாராயணன் அவள் பக்கம் சென்றான். "பாபு எங்கே?" என்று விஜயா அவனைக் கேட்டபொழுது, "அவர் உள்ளேதான் இருந்தார்; அதற்குள் எங்கே போனாரோ, தெரியவில்லை" என்றான். கன்னையா சிங் வந்து, திண்ணையிலேயே தான் இருந்ததாகவும், பருப்பை அடுப்பினின்றும் இறக்கிவிட்டு ரொட்டி சுட்டுக்கொண்டிருந்ததாகவும், அதற்குள் பாபு எப்படி சத்தமில்லாமல் வெளியேறி விட்டாரென்று தனக்குத் தெரியாதென்றும் சொன்னான்.

## பதின்மூன்றும் அத்தியாயம்

### கிழவன் தந்திரம்

பிரம மந்திரம் ஸ்தாபிக்கவேண்டிய நாள் நெருங்கிவிட்டது. அதிதிகள் ஒவ்வொருவராய் வர ஆரம்பித்தார்கள். கல்கத்தாவிலிருந்து மட்டுமல்ல, சுற்றுப்புறங்களிலிருந்தும் அநேக கனவான்கள் வந்து சேர்ந்தார்கள். மந்திரம் பிரதிஷ்டை செய்யும் சுபதினம் நாளைக்குத்தான்.

அதிதிகள் அனைவரும் வந்து சேர்ந்ததன்பின், அவர்கள் மத்தியில் உட்கார்ந்து கண்களைப் பாதி திறந்தும், பாதி மூடிக்கொண்டும், ராஸ் விஹாரி வெண்மையான தம் தாடியைத் தடவிக்கொண்டு, தம் பால்ய நண்பர் வனமாலி பாபுவைப் புகழ்ந்து, கம்பீரமான தொனியில், "பகவான் அவரை வெகு சீக்கிரத்தில் தம் பக்கம் அழைத்துக்கொண்டார்; அவருடைய லீலா விநோதங்களைப்பற்றி நான் ஒன்றும் குறைகூறக்கூடாது. ஆனால் வனமாலி பாபு என்னைப் பெருஞ்சங்கடத்திலும், துக்கத்திலும் தனியே விட்டுப்போய் விட்டார். நண்பர்களாகிய நாங்கள் இருவரும், பரலோகத்தில் சந்திக்கவேண்டிய தினம், நாளுக்கு நாள் அதி சமீபத்தில் நெருங்கிவருகிறதென்பதை நான் ஒவ்வொரு நிமிடமும் அறிகிறேன். ஏகமும் இரண்டற்றதுமான அந்தப் பரப்பிரமத்தின் திவ்விய சரணங்களில் என் பிரார்த்தனை என்னவென்றால், கரையற்ற கருணை வெள்ளமாகிய அவர், அத்தினத்தை இன்னும் சமீபத்தில் கொண்டுவர வேண்டுமென்பதே" என்று சொன்னார்.

இவ்விதம் சொல்லி ராஸ்விஹாரி குடுத்துணியின் நுனியினல் தம் கண்களை ஒரு முறை துடைத்தார். அதன் பின் சிறிது நேரம்வரை ஈசுவரத்தியானத்தில் அமர்ந்திருப்பவர் போல் இருந்துவிட்டு, முன்போலவே ஆனந்தமாகத் தம் பழைய கதையை ஆரம்பித்தார். தாமும் தம் மித்திரரும் குழந்தைப்பருவத்தில் ஒடி, ஆடியதும், பின்பு பிள்ளைப்பருவத்தில் இருவரும் சேர்ந்து பள்ளியில் படித்ததும், அதன் பின்பு வாலிபப் பருவத்தில் இருவரும் சேர்ந்தே சத்திய தர்மத்தைக் கைக்கொண்டதுமான கதைகளையெல்லாம் வர்ணித்துவிட்டு, அவர் மேலும் சொல்லலுற்ருர் :

" வனமாலியினல் கிராமவாசிகளின் கொடுமையைச் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. அவர் கல்கத்தாவிற்குச் சென்றுவிட்டார். ஆனல் நான் கிராமத்திலேயே வசித்துக் கஷ்டங்கள் எல்லாவற்றையும் கட்டாயம் சகிப்பேன் என்று பிரதிக்ஞை செய்து கொண்டேன். ஹா ! எத்தகைய கொடுமை ! ஆயினும் சத்தியத்திற்கு எப்பொழுதும் வெற்றி உண்டு; அதன் மகிமையினல் நானும் ஒருநாள் வெற்றியடைவேன் என்று என் மனத்தைத் திடப்படுத்திக்கொண்டேன். அந்தச் சுபதினம் இன்று பிறந்திருக்கிறது. ஆகையினல்தான் தாங்களெல்லாம் இங்கே வந்திருக்கிறீர்கள். வனமாலி இன்று நம்முடைய மத்தியில் இல்லை ; சிறிது காலத்திற்கு முன்பே அவர் சென்றுவிட்டார் ; ஆனல் நான் கண்களை மூடியதும், அவர் மேல்உலகத்தில் ஆனந்தமாகப் புன்னகை செய்துகொண்டிருப்பதைக் காண்கிறேன்."

இவ்விதம் சொல்லிக் கண்களை மூடி, ராஸ்விஹாரி மீண்டும் தியானத்தில் ஆழ்ந்துவிட்டார்.

விஜயாவின் இரு கண்களிலும் கண்ணீர் ததும்பியது. ராஸ்விஹாரி கண்களைத் திறந்து, திடீரென்று வலது கையை நீட்டி, " இவள் அவருடைய ஒரே புதல்வி விஜயா. பிதாவி

னுடைய சிரேஷ்ட குணங்களெல்லாம் இவளிடத்தில் அமைந்திருக்கின்றன. கடமையை நிறைவேற்றுவதில் பிசகமாட்டாள்; சத்திய மார்க்கத்தினின்றும் எள்ளளவும் விலகமாட்டாள்; ஸ்திரபுத்தி யுடையவள். இவன் என் புத்திரன் விலாஸ்விஹாரி. இவனும் அதேமாதிரி ஸ்திர புத்தியும், திடசித்தமும் உடையவன். இவ்விருவரும் வெளித் தோற்றத்தில் பார்ப்பதற்கு, தனித்தனியே விலகியிருந்தா லும், உள்ளுக்குள் ஒரே மனதுடையவர்கள்...........ஆம், இன்னொரு சுபதினமும் வெகு சீக்கிரம் வரப்போகிறது; அன்று, மீண்டும், உங்கள் நல்வரவினால் இவ்வீடு புனித மாகும்; உங்கள் எல்லோருடைய சுப ஆசீர்வாதத்தினாலும் இவ்விருவரும் சேர்ந்து நடத்தப்போகும் புதுவாழ்க்கை தன்யமடையும்" என்றார்.

ஓர் இனிய சந்தோஷ ஆரவாரத்தினால், அச்சபை முழுவதும் கலகலத்தது. விஜயாவுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஸ்திரீகள் அவளுடைய கையைத் தங்கள் கையால் பிடித்து மெதுவாய் அழுத்தினார்கள். ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு ராஸ்விஹாரி மீண்டும் சொல்லலானார்: "இவளைத் தவிர அவருக்கு வேறு சந்தான பாக்கியம் கிடை யாது. இவளுடைய விவாகத்தைத் தம் கண்களால் பார்த்து விட்டுப் போகவேண்டுமென்று அவருக்கு வெகு ஆசை; ஆனால் எல்லாக் குற்றமும் என்னுடையதே! அது முடியா மற் போனதற்கு நான்தான் ஜவாப்தாரி என்பதை இன்று உங்கள் அனைவருக்கும் முன்னால் நான் ஒப்புக்கொள்கிறேன். மனிதனுடைய வாழ்க்கை, தாமரை இலைத் தண்ணீர்போல் சலனமானதென்று நாம் கேவலம் வாயினால் சொல்லுவ தோடு சரி; காரியத்தில் நமக்கு அந்த ஞாபகமே இருப்ப தில்லை! வனமாலி இவ்வளவு சீக்கிரம் இவ்வுலகத்தை விட்டுப்

போய்விடுவாரென்று நான் நினைக்கக்கூட இல்லை." இவ்விதம் சொல்லி அவர் க்ஷண நேரம் மௌனமாயிருந்தார்.

துக்கம் நிறைந்த அவருடைய ஹிருதயத்தின் சித்திரம் விளக்கு வெளிச்சத்தில், அவருடைய முகமண்டலத்தில் பிரதிபலித்துக்கொண்டிருந்தது. மீண்டும் ஒரு நீண்ட பெரு மூச்சுவிட்டு, சாந்தத்துடனும் கம்பீரத்துடனும், "ஆனால் இப்பொழுது எனக்குப் புத்தி வந்துவிட்டது. ஆகையினால் என்னுடைய சரீரத்தின் நிலைமையை உத்தேசிக்கும் பொழுது, வருகிற பங்குனி மாதத்துக்குமேல், அதிக நாள் தாமதம் செய்வதற்கு எனக்குத் தைரியமில்லை. என்ன கண்டோம்? அதிக காலதாமதம் செய்தால், இந்தச் சுப காரியத்தை நானும் பார்க்க முடியாமற் போனாலும் போய் விடும்" என்று சொன்னார்.

மீண்டும் ஒரு மெல்லிய சத்தம் எழுந்தது. ராஸ்விஹாரி இடதுபுறமும், வலது புறமும் ஒருமுறை பார்த்துவிட்டு, விஜயாவை நோக்கி மீண்டும் சொல்லலுற்றார்: "வனமாலி தம் சொத்து முழுவதையும் என்னிடம் ஒப்பித்ததோடு, இந்தப் பெண்ணையும் என்வசம் ஒப்பித்திருக்கிறார். நான் என் கடமையைச் செவ்வனே நிறைவேற்ற வேண்டும். இத் தம்பதிகளிருவரும் உங்களுடைய ஆசீர்வாதத்தால் தீர்க் காயுளுடன் இருக்கவேண்டும்; சத்தியத்தைக் கடைப் பிடித்து ஒழுகவேண்டும்; தங்கள் கடமைகளை அறிய வேண்டும்; சத்தியதர்மத்திற்காகப் பிரசாரம் செய்ய வேண்டும்; இவைகளே ஈச்வரனிடத்தில் என் பிரார்த் தனைகள்."

ராஸ்விஹாரியின் பேச்சு முடிந்ததும், ஆச்சாரியார் தயால் சந்த்ர தாடா விஜயாவையும் விலாஸையும் ஆசீர்வதித் தார்.

ராஸ்விஹாரி மீண்டும் விஜயாவை நோக்கிக் கூறினர்: "குழந்தாய்! உன் தந்தை இப்பொழுது இல்லை; தாய், மற்றுமுள்ள பந்துக்கள் யாவரும் வெகு காலத்திற்கு முன்னமேயே பரலோகப்ராப்தி அடைந்துவிட்டார்கள்; இல்லையானல் இவ்விஷயத்தை இன்று உன்னிடத்தில் கேட்க வேண்டிய அவசியம் ஏற்படாது. வெட்கப்படாமல் சொல்லு. இவ்வதிதிகளை, அடுத்த பங்குனி மாதம் மீண்டும் இங்கே வரும்படி அவர்களுக்கு இன்றே அழைப்புக் கொடுத்து விடட்டுமா?

வெட்கத்தினுலும், பயத்தினுலும் விஜயாவுக்கு ஒன்றும் சொல்ல நா எழவில்லை. அவள் தலைகுனிந்து பேசாமல் உட்கார்ந்திருந்தாள். க்ஷணநேரம் காத்திருந்துவிட்டு, ராஸ்விஹாரி சற்று நகைத்தார். "சௌபாக்கியவதியாய் இரு, மகளே! இனிமேல் நீ ஒன்றுமே சொல்லவேண்டிய அவசியமில்லை; நாங்கள் எல்லாம் அறிந்துகொண்டோம்" என்ருர்.

அதன் பின்பு எழுந்து நின்று இருகைகளையும் கூப்பிக் கொண்டு, "வருகிற பங்குனிமாதத்தில் தாங்கள் எல்லோரும் மீண்டும் ஒருமுறை வந்து எங்களை ஆசீர்வதிக்க வேண்டும்" என்று ராஸ்விஹாரி கேட்டுக்கொண்டார்.

எல்லோரும் தங்கள் சம்மதத்தைத் தெரிவித்தார்கள். இதற்கு மேல் விஜயாவினுல் பொறுத்துக்கொண்டிருக்க முடியவில்லை. "தந்தை இறந்து இன்னும் ஒரு வருஷங் கூடப் பூர்த்தியாகவில்லையே" என்ருள்.

அவளுடைய கண்களில் கண்ணீர் ததும்பியது.

"நீ சொல்வது சரிதான், மகளே; நீ சொல்வது சரிதான். எனக்கு அது நினைவே இல்லாமற் போய்விட்டது. நீ என் மகளல்லவா? நல்ல வேளை. அதை நினைப்பூட்டிவிட்

டாய்" என்று மிகவும் வருந்துபவர்போல் பாவனை செய்து கொண்டு ராஸ்விஹாரி சொன்னார்.

விஜயா ஒன்றும் சொல்லாமல் முன்தானையினால் கண்களைத் துடைத்தாள். ராஸ்விஹாரி அவளையே பார்த்துக் கொண்டிருந்தார். நீண்ட பெருமூச்சுவிட்டுத் தடுமாறிய குரலில், "அது பூர்த்தியாவதற்கும், இன்னும் அதிக நாள் இல்லையே" என்றார்.

அதன்பின் எல்லோரையும் பார்த்து அவர் சொல்லலானார்: "வருகிற வைகாசியில் இச்சுப காரியத்தை வைத்துக்கொள்வோம்....விலாஸ், இரவு வெகு நேரமாய்விட்டது. நாளைக் காலை நடக்கவேண்டிய வேலைகளுக்கு எவ்விதத் தடையும் ஏற்படக்கூடாது. அதிதிகளின் சாப்பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகளை - கூடாது, கூடாது, வேலைக்காரர்களிடத்தில் ஒப்படைப்பது சரியல்ல - நீயே போகவேண்டும்; வா, நானுங்கூட வருகிறேன்.—தாங்கள் என்னைச் சற்று மன்னித்துக்கொள்ளுங்கள், நான் கொஞ்சம்...."

இவ்விதம் சொல்லிக்கொண்டே அவர் தம் புத்திரன் பின்னால் போய்விட்டார்.

இரவு பன்னிரண்டு மணியாகிவிட்டது. ஒரு தூணிற்குப் பக்கத்தில் திரண்ட இருளில், விஜயா தனியே நின்று, பல்லக்கை எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். ராஸ்விஹாரி அவளை அகஸ்மாத்தாகப் பார்ப்பதுபோல் பார்த்துத் திடுக்கிட்டார். "இங்கே தனியாக ஏனம்மா நின்றுகொண்டிருக்கிறாய்? வா, வா, உள்ளே வந்து உட்கார்" என்றார்.

விஜயா:—இல்லை, சிற்றப்பா. நான் இங்கே வெகு சௌகரியமாயிருக்கிறேன்.

ராஸ்:—அதிகக் குளிராயிருக்கிறது, மகளே; உடம்புக்கு ஆகாது.

விஜயா:—இல்லை; உடம்புக்கு ஒன்றும் வராது.

உடனே ராஸ் விஹாரி பக்கத்தில் நின்றுகொண்டு, 'கிருஹ லக்ஷ்மி', 'இருளடைந்த வீட்டின் ஒளி' முதலிய அநேக அடைமொழிகளால் அவளைப் புகழ்ந்து; மீண்டும் ஒருமுறை அவளை ஆசிர்வதிக்க ஆரம்பித்தார். கற்சிலைபோல் மௌனமாய் நின்றுகொண்டு, இப்பாசாங்குகளையெல்லாம் பேசாமல் சகித்துக்கொண்டிருந்தாள் விஜயா.

திடீரென்று ராஸ் விஹாரிக்கு ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. "உன்னிடத்தில் அவ்விஷயத்தைச் சொல்ல அடியோடு மறந்துவிட்டேனே. அப்பூதக் கண்ணுடியின் விலையை நான் நரேந்திரனுக்குக் கொடுத்துவிட்டேன்" என்ருர்.

பத்துப் பன்னிரண்டு நாட்கள் கழிந்தன. பூதக் கண்ணுடியை வைத்துவிட்டுப்போன தினத்திலிருந்து, இதுவரை விஜயாவின் வீட்டிற்கே நரேந்திரன் வரவில்லை. அந்நாட்களை விஜயா எத்தகைய கஷ்டத்துடன் கழித்தாள் என்பது அவளுக்குத்தான் தெரியும். நரேந்திரனுடைய பந்துவின் வீடு எவ்வளவு தூரம் இருக்கிறது என்றுமட்டும் அவள் அறிந்திருந்தாள்; ஆனால் அது எங்கே இருக்கிறது, எந்தக் கிராமத்திலிருக்கிறது என்பதை அவள் விசாரிக்கவில்லை. அத்தவறு அவளுடைய ஹிருதயத்தை எப்பொழுதும் உறுத்திக்கொண்டேயிருந்தது. அவனைத் தேடுவதற்கு அவளுக்கு ஓர் உபாயமும் தெரியவில்லை. இப்பொழுது ராஸ் விஹாரியின் இவ்வார்த்தைகளைக் கேட்டதும், திடுக்கிட்டு எழுந்து, "எப்பொழுது கொடுத்தீர்கள் ?" என்று கேட்டாள்.

ராஸ் :—(சிறிது யோசித்து) நன்ருய் ஞாபகமில்லை: அதற்கு மறுநாளே கொடுத்துவிட்டேன் என்று நினைக்கிறேன். அதை வாங்கிக்கொள்வதாக நீ சொல்லிவிட்டாயல்லவா ? நீ வாக்குக் கொடுத்துவிட்டதனால் விலை அதிகமாயிருந்தாலும் பரவாயில்லையென்று ரூபாயைக் கொடுத்துவிட்டேன். பிறந்ததிலிருந்து இன்றுவரை நான் வாக்குத்

தவறியதே இல்லை. மேலும் அவனுக்குப் பணம் அத்தியா வசியமா யிருந்த தென்பதை நான் அறிந்தேன். ரூபாய் கையில் கிடைத்தவுடன், எங்காவது போய் தன் வயிறு வளர்ப்பதற்குண்டான வழியைத் தேடுவான் என்று நினைத்தேன். ஆயிரம் இருந்தாலும், அவனும் நமக்கு அன்னியன் அல்லவே; என்னுடைய நண்பனின் புத்திரனல்லவா? இங்கிருந்து போவதற்குப் பணமில்லாமல்தான் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறான், ரூபாய் கிடைத்ததும் சென்றுவிடுவான் என்று எனக்குத் தெரிந்தது; என்னால் சகிக்கமுடியவில்லை; உடனே பணத்தைக் கொடுத்துவிட்டேன். நீ கொடுத்தாலென்ன? நான் கொடுத்தால் என்ன? எல்லாம் ஒன்று தானே. பத்து, இருபதுரூபாய் அதிகமானாலும், எடுத்துக் கொண்டு போகட்டும், என்னுடைய நண்பன் புத்திரன் தானே!

விஜயாவுக்கு ஒன்றும் பேச நா எழவில்லை. சிறிது நேரத்திற்குப் பின்பு அதிகப் பிரயாசையுடன், "எவ்விடத்தில் அவருக்கு ரூபாய் கொடுத்தீர்கள்?" என்று கேட்டாள்.

இக்கேள்விக்கு ராஸ்விஹாரி ஏன் வேறு விதமாக அர்த்தங்கொண்டாரென்று தெரியவில்லை. அவர் திடுக்கிட்டு எழுந்து, "என்ன சொல்லுகிறாய்? ரூபாய் இரண்டு தடவையா வாங்கிக்கொண்டு போய்விட்டான்? ஆனால் அவனுடைய முகத்தைப் பார்த்தால் அப்பேர்ப்பட்டவனாகத் தெரியவில்லையே. அவனைக் குற்றம் சொல்லி என்ன பிரயோஜனம்? இம்மாதிரிப் பயல்களால் ஏமாற்றப்பட்டுப் பட்டுத்தான், என்னுடைய தாடியும் நரைத்துவிட்டது, மகளே. போனது போகட்டும், இன்னோர் இருநூறு ரூபாய் போய்விட்டது, அவ்வளவுதானே? பரவாயில்லை. அந்த ரூபாயை நானே கொடுத்துவிடுகிறேன். இம்மாதிரி தெண்டங்கொடுத்துக் கொடுத்து, என் ஹிருதயம் காய்த்துவிட்டது; இப்

பொழுது இதனால் எல்லாம் வேதனை உண்டாவதே இல்லை. போனால் போகிறது அந்த ரூபாயை நான்........ "என்றார்.

இம்மாதிரி ஏமாற்றல்களை விஜயா எவ்வளவு நேரந் தான் பொறுத்துக் கொண்டிருப்பாள்? "நீங்கள் ஏன் இப்படிப் பயப்படுகிறீர்கள் சிற்றப்பா? ஏமாற்றி இரண்டு தடவை ரூபாய் வாங்குகிற மனிதர் அவரல்ல. பட்டினி கிடந்து சாகும்பொழுதுகூட அவர் அப்படிச் செய்யமாட்டார்! ஆனால் அவரை நீங்கள் எங்கே பார்த்தீர்கள்? எப்பொழுது நீங்கள் அவருக்கு ரூபாய் கொடுத்தீர்கள்?" என்று படபடத்த குரலில் கேட்டாள்.

ராஸ்விஹாரி சாவதானமாக ஒரு பெருமூச்சு விட்டு, "என் உயிர் தப்பியது. ரூபாயும் கொஞ்சமல்லவே, இரு நூறு ரூபாயல்லவா! போய்விட்டதே என்று அதிகப் பீதியுற்றிருந்தேன். (திடீரென்று) யார் அங்கே நிற்கிறது? விலாஸா? பல்லக்குக்கு என்ன ஏற்பாடு செய்தாய்? எத்தகைய குளிர்! நான் கவனியாவிட்டால் ஒரு காரியமும் நடவாது போலும்!" என்று அதிகக் கோபங்கொண்டவர் போல் பாசாங்கு செய்து ராஸ்விஹாரி வேண்டுமென்றே ஒரு தூணை விலாஸ் விஹாரியாகக் கற்பனை செய்துகொண்டு, வேகமாய் அதை நோக்கி ஓடினார்.

# பதினன்காவது அத்தியாயம்

## வேருெரு தந்திரம்

விஜயா தன்னை முழுதும் விலாஸுக்கே அர்ப்பணம் செய்திருந்த நாளும் ஒன்றிருந்தது. ஆனுல் இன்ருே, விலாஸை விட்டுத்தள்ளுங்கள், இவ்வளவு பெரிய உலகத்தில், இத்தனை கோடி ஜனங்களில், கேவலம் ஒருவனைத் தவிர, வேறு எவனையும் தொடுவதாக நினைத்தால்கூட, வெறுப்பினுலும், வெட்கத்தினுலும் அவளுடைய அங்கம் முழுவதும் குலுங்கும் ; ஏதோ ஒரு கொடிய பாவத்தைச் செய்துவிட்டவள்போல் அவளுடைய உடல் நடுங்கும். அவள் ராஸ் விஹாரியின் வீட்டினின்று திரும்புகையில், பல்லக்கில் உட்கார்ந்துகொண்டு, இதைப்பற்றியே சிந்தித்துக்கொண்டு சென்ருள்.

அது சம்பந்தமாக அவளுடைய பிதாவின் மனோபாவனை எப்படியிருந்ததென்று தெளிவாய் அறிவதற்கு ஓர் அத்தாக்ஷியும் கிடைக்கவில்லை. ஆனுல் அவர் இறந்தபின்பு, விஜயாவுக்குத் தன் வாழ்க்கையின் தாரை விலாஸ் விஹாரியோடு கலந்துதான் ஓடவேண்டியிருக்கு மென்பது தெளிவாய்ப் புலனுயிற்று. எந்த விதத்திலேனும் அதற்கு மாருக நடக்கும் என்கிற எண்ணங்கூட அவள் மனத்தில் உதித்ததில்லை.

திடீரென்று, ஆகாயத்தின் ஏதோ ஒரு கண்ணுக் கெட்டாத பாகத்தினின்றும், தூமகேது மாதிரி தோன்றிய அவ்வுதாசீன புருஷன், நொடிப் பொழுதில் எல்லாவற்றையும் தகர்த்து எறிந்துவிட்டு, பிரம்ம சமாஜமார்க்கத்

தில் கூட அவளுக்கு நம்பிக்கை இழக்கும்படி செய்து விட்டு, தான் எங்கேபோய் ஒளிந்துகொண்டானே, தெரியவில்லை - தான் வந்துபோன அடையாளங்கள்கூட இல்லாமல் போய்விட்டான் - இது உண்மையா, அல்லது வெறுஞ் சொப்பனமா என்பதைத்தான் இன்று விஜயா யோசித்துக் கொண்டிருந்தாள். உண்மையில் இது சொப்பனமாயிருந்தால், அவளுடைய மோகம், எவ்விதம், எத்தனை நாட்களில் தீரும்? ஆனால் அது உண்மையாகவிருந்தால், இவ்வாழ்க்கையில் அதை எவ்விதம் அனுபவிக்கமுடியும்?

வீட்டிற்குள் சென்றதும், விஜயா படுக்கையில் படுத்தாள்; ஆனால் தூக்கம் வரவில்லை. இன்று அவளுடைய மனத்தில் திரும்பத் திரும்பத் தோன்றிய சந்தேகம் என்னவென்றால், சிலதினங்களாக இரவும் பகலும் அவளுடைய உள்ளத்தை அலைக்கும் ஓர் உணர்ச்சியில் ஏதாவது உண்மையுண்டா, அல்லது அது வெறும் ஆகாயத் தாமரைதானா என்பதே. அவளுடைய இச்சந்தேகத்திற்கு யார் பதிலளிக்கமுடியும்?

அவளுக்குத் தாயார் இல்லை; தகப்பனும் பரலோகத்தில் இருக்கிறார். சகோதர சகோதரிகளோ, அவளுக்கு எக்காலத்தும் இருந்ததில்லை. தன்னுடைய பந்து என்று சொல்வதற்கு ராஸ்விஹாரி ஒருவரே இருக்கிறார்; வேறு ஒருவருமில்லை. அவரே பந்து; அவரே இஷ்ட மித்திரர்; அவரே அவளுக்குச் சர்வமும். சமாஜ மந்திரம் ஸ்தாபிக்கப்போகும் சாக்கில், கல்கத்தாவிலிருக்கும் தம் மித்திரர்களை ராஸ்விஹாரி எதற்காக வரவழைத்திருக்கிறார் என்பது விஜயாவுக்கு இன்று தெளிவாய் விளங்கியது. நரேந்திரன் எங்காவது அந்நிய நாட்டிற்குச் செல்லட்டும் என்று அவளுக்குத் தெரியாமல், அவனுக்குப் பொருளுதவி செய்தது, தம்முடைய (ராஸ் விஹாரி) வீட்டிற்கு அதிதிகளைப் போஜ

ணத்திற்காக அழைத்தது, அவ்வதிதிகளுக்கு முன்னால் விவாகத்தைப்பற்றிப் பேசியது, வெட்கத்தினால் அவள் பேசாமல் இருந்ததைச் சம்மதமாக நினைத்துக்கொண்டது, இவ்விதம் எல்லா வழிகளாலும் கிழ ராஸ்விஹாரி விஜயாவைத் தம் வசப்படுத்த முயல்வது இன்று அவளுக்கு நன்கு விளங்கிவிட்டது.

ஆனால் ஆச்சரியம் என்னவென்றால், ராஸ்விஹாரியின் எந்தக் காரியத்திலும் அநியாயமோ, அல்லது கொடுமையோ இருப்பதாகக் கொஞ்சமேனும் வெளிக்குத் தெரியவில்லை. என்றாலும் கிழவருடைய அவ்வன்புக்கும், கருணைக்கும் உள்ளே எத்தகைய தன்னலமும், பிறரைக் கெடுக்கும் சித்தமும் இருக்கின்றனவென்பது, நாளுக்குநாள் அவளுக்குத் தெளிவாய் விளங்கிக்கொண்டே வந்தது. அவனுடைய வலையினின்றும், அவள் தப்பமுடியாமல் சகாயமற்றுக் கிடப்பதை அறிந்ததும், அவளுடைய உடல் நடுங்க ஆரம்பித்தது. இரவு முழுவதிலும், நிமிஷநேரங்கூட அவளால் தூங்கமுடியவில்லை. அவள் அழுது அழுது, பரலோகத்திலிருக்கும் தன் தந்தையை நினைத்துப் புலம்பலானாள்: "அப்பா! இவர்களைப்பற்றித்தான் உங்களுக்கு நன்றாய்த் தெரியுமே; பின் ஏன் என்னை இவர்களுடைய கையில் ஒப்பித்துவிட்டுச் சென்றீர்கள்!"

ஒரு சமயம் அவள் தானே விலாஸை விரும்பி, அவனோடு சேர்ந்து, பிதாவின் விருப்பத்திற்கு விரோதமாக, நரேந்திரனைச் சர்வநாசம் செய்யவேண்டுமென்று கெட்ட எண்ணங் கொண்டாள் அல்லவா? அதே கெட்ட எண்ணம், இன்று அவளுடைய நல்விருப்பங்களை யெல்லாம் தோல்வியுறச் செய்து,வெற்றிகொண்டாடுகிறதென்று எண்ணுகையில் அவளுடைய ஹிருதயம் வெடித்துவிடும்போலிருந்தது. 'நட்பினால் மதியிழந்து, தந்தை என்னை ஏன் இவர்கள் கையில் ஒப்பித்து

விட்டுச்சென்ருர்? என்னுடைய சுவாதீனத்தை ஏன் எல்லா வகைகளிலும் கட்டுப்படுத்தி யிருக்கிருர்? என்னுடைய ரவிக்கை முழுவதும் நனையுமாறு கண்ணீர் வடித்துக் கொண்டு, இப்பொழுது நான் புலம்புகிற புலம்பலெல்லாம், என் தந்தையின் காதுகளுக்கு எட்டுமா' என்று நினைக்கலாஞள். 'இதனின்றும் தப்புவதற்கு இனி ஓர் உபாயமும் இல்லையா?' என்று இவ்வாறெல்லாம் அவள் அநேக தடவைகள் யோசிக்க ஆரம்பித்தாள்.

மறுநாள் சதீசனுடைய தாய் வெகுநேரம் கூப்பிட்டதன்மேல் விஜயா கண்விழித்துப் பார்த்தாள். பொழுது விடிந்து வெகுநேரம் ஆகியிருந்தது. அவளுடைய வீட்டு வெளி வராந்தாவில் அதிதிகள் வந்து நிறைந்திருந்தார்கள். அன்றைய தினம் நடக்கப்போகும் உற்சவத்தின் ஞாபகம் வந்ததும், அவளுடைய ஹிருதயத்தில் ஒரு பெரிய சுமையைத் தூக்கி வைத்ததுபோலிருந்தது. காலை இளம் வெயில் தோப்பிலுள்ள மாமரங்களின் கிளைகளை ஒளிபெறச் செய்து கொண்டிருந்தது. அவ்விருக்ஷங்களின் இலைகளின் வழியாகப் பார்த்தபொழுது, இடைப்பையன்கள் மைதானத்தில் பசுக்களை மேய்ப்பதற்குக் குதூகலத்துடன் ஆடிக்கொண்டே போவதைக் கண்டாள். அவள் கிராமத்திற்கு வந்ததிலிருந்து, ஒருநாளாவது, இக்காட்சியைக் காணுவதில் அவளுக்குச் சலிப்பு ஏற்பட்டதில்லை. மிகவும் அவசியமான காரியங்கள் பலவிருந்தாலும், அவைகளையெல்லாம் விட்டுவிட்டு அவள் இதைப் பார்த்துக்கொண்டேயிருப்பாள். இத்தனை நாளும் இதில் அவளுக்கு என்ன இன்பம் இருந்ததென்று அவளால் இன்று நினைத்துக்கூடப் பார்க்கமுடியவில்லை.

அவள் திடீரென்று ஜன்னலினின்றும் தன் பார்வையைத் திருப்பியபொழுது, வேலைக்கார நாராயணன் தடவைக்கு மும்மூன்று படிகள் வீதம் தாண்டிக்கொண்டு உயரே ஏறி

வருவதைக் கண்டாள். அவன் அவசர அவசரமாகத் தன் கைகளையும் கால்களையும் ஆட்டிக்கொண்டு, "அம்மா, ஜல்தி, ஜல்தி! சின்ன பாபு ரொம்பக் கோபமாயிருக்கிறார்! இன்று இவ்வளவு தாமதஞ் செய்யலாமா?" என்று சொன்னான்.

வேலைக்காரனுடைய வார்த்தைகளைக் கேட்டதும், அவளுடைய ஹிருதயத்தில் ஒரு வெடிகுண்டு விழுந்தது போலிருந்தது. நொடிப்பொழுதில் அவளுடைய உள்ளங் காலிலிருந்து உச்சந்தலை வரைக்கும் ஒரே நெருப்புப் பிடித் துக்கொண்டதுபோல் தோன்றியது. அவளால் ஒரு பதிலும் சொல்லமுடியவில்லை. மத்தியான்ன சூரியனைப்போல், அவளுடைய இரண்டு கண்களும் கோபாக்கினியின் ஜ்வாலையை வீசியது. நாராயணன் அக்கண்களைக் கண்டதும், பயத்தினால் நடுங்கிக்கொண்டு ஏதோ சொல்ல வாயெடுத்தானோ இல்லையோ, விஜயா கீழே விரலைச் சுட்டிக் காட்டி, "நீ கீழே போ, நாராயணா" என்றாள்.

வேலைக்காரர்கள் விலாஸ் விஹாரியைச் 'சின்ன பாபு' வென்றும், ராஸ்விஹாரியைப் 'பெரிய பாபு' வென்றும் கூப்பிடுகிறார்களென்பது விஜயாவுக்கு முன்னமேயே தெரியும். ஆனால் வீட்டு எஜமானிகூட அவர்களுடைய கோபத்திற்கு அஞ்சும்படியாக, பிதாவும், புத்திரனும், வேலைக்காரர்கள் திருஷ்டியில் அவ்வளவு பெரியவர்களாய் விட்டார்கள் என்பது அவளுக்கு இன்றுதான் முதன்முதல் தெரிந்தது. தன்னுடைய சொந்த வீட்டிலேயே, விலாஸ் எஜமானன் ஆகிவிட்டதையும், தான் அவனுடைய ஆணையை நிறைவேற்றும் ஒரு வேலைக்காரியின் ஸ்தானத்தில் இருப்பதையும் இன்று விஜயா தெளிவாகக் கண்டாள். இது அவள் மனத்தில் எரியும் நெருப்பில் எண்ணெயை வார்த்தது போல் இருந்தது.

அரைமணி நேரத்திற்கப்புறம் கை, கால், முகங்கழுவிப் புடைவை மாற்றிக்கொண்டு, விஜயா கீழே இறங்கிச் சென்ற பொழுது, எல்லோரும் தேநீர் அருந்திக்கொண் டிருந்தார்கள். அங்கிருந்தவர்கள் அனைவரும் அவரவர்கள் ஸ்தானத்தினின்றும் எழுந்து விஜயாவை வணங்கினார்கள். அவளுடைய முகம் வாடியும், கண்கள் ஒளியற்றும் இருப்பதைக் கண்டதும், அநேகர் ஏதோ கேட்க வாயெடுத்தார்கள். ஆனால் விலாஸ் விஹாரியின் கடுங்குரல் அவர்களை அடக்கி விட்டது. அவன் தன் கையிலிருந்த தேநீர்க் கோப்பையைத் 'தடால்' என்று மேஜையின்மீது வைத்துவிட்டு, "இன்னுங் கொஞ்சநேரம் தூங்கியிருக்கக் கூடாதா? இப்பொழுது வர வர, உன் நடத்தையைக் கண்டு என்னால் சகிக்க முடியவில்லை. இதை உன்னிடத்தில் சொல்லாமல் இருக்கவும் என் மனங்கேட்கவில்லை" என்றான்.

அவளைக் கோபித்துக்கொள்வதற்கு அவனுக்கு உரிமை உண்டு என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ளத்தான் வேண்டும். ஆனால் இத்தனை அந்நிய கனவான்களுக்கு முன்னால், இம்மாதிரி அவன் கத்தியது மிகுந்த மரியாதைக் குறைவாகவே எல்லோருக்கும் தோன்றியது. விஜயா அவன் பக்கம் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. எல்லோருக்கும் பிரதி நமஸ்காரம் செய்துவிட்டு, ஆச்சார்ய தயால்பாபு இருந்த இடத்தை நோக்கிச் சென்றாள். அக்கிழவனார் மிகுத்த சங்கோசத்துடன் எழுந்து நின்றார். "தாங்கள் தேநீர் அருந்துவதற்குத் தாமதமாய்விட்டதா? இன்று காலையில் எழுந்திராதது என் குற்றமே" என்று விஜயா சொன்னாள்.

தயால்பாபு மிக்க அன்புடன், அவளை "மகளே" என்று அழைத்துச் சொல்லலுற்றார்: "இல்லை, இல்லை; எங்களுக்கு ஓர் அசௌகரியமும் ஏற்படவில்லை. விலாஸ்

பாபுவும், ராஸ்விஹாரி பாபுவும் ஒரு குறைவும் ஏற்படாத வாறு கவனித்துக்கொண்டார்கள். ஆனால் உனக்கு உடம்புக்கு சௌகரியமில்லைபோல் தோன்றுகிறதே, மகளே!"

அவர் எப்பொழுதும் கல்கத்தாவிலேயே வசிக்கிறவர். ஆகையினால் விஜயா அவரை இதற்கு முன் பார்த்ததில்லை. நேற்றுக்கூட அவள் அவரை நன்றாய்ப் பார்க்கவில்லை. இன்று, அச்சபையில் நுழைந்ததும், அவ்வயோதிகருடைய சாந்த சொரூபம் விஜயாவை அவர் பக்கம் இழுத்தது. அவளுக்கு அவர் நெருங்கிய உறவினர்போல் தோன்றினார். தயால்பாபுவின் மிருதுவான சொற்கள் அவளுடைய உள்ளக் கொதிப்பைப் பெரிதும் ஆற்றியது. அக்கிழவருடைய குரலில் விஜயா தன் தந்தையார் குரலின் ஜாடை இருப்பதாக நினைத்தாள்.

தயால் மெத்தையிட்ட ஒரு நாற்காலியில் உட்கார்ந்திருந்தார்; அதற்குப் பக்கத்தில் சிறிது இடம் இருந்தது. "ஏன் நின்றுகொண்டிருக்கிறாய், மகளே? இங்கே உட்கார். உனக்குக் காய்ச்சல், கீச்சல் ஒன்றுமில்லையே, அம்மா" என்றார்.

விஜயா அவர் பக்கத்தில் உட்கார்ந்தாள். ஆனால் ஒன்றும் பதில் சொல்லவில்லை; முகத்தைத் திருப்பிக்கொண்டு வேறுபுறம் பார்க்க ஆரம்பித்தாள். கண்ணீரை அடக்குவது அவளுக்குக் கஷ்டமாக இருந்தது. அப்பெரியவர் மீண்டும் அதே கேள்வியைக் கேட்டார். அதற்குப் பதிலாகத் தலையை அசைத்துக்கொண்டு விஜயா, 'இல்லை' என்று மட்டும் சொன்னாள்.

வயோதிக ஆச்சாரியாருக்கு எல்லாம் விளங்கிவிட்டது. சிறிது நேரம் மௌனமாயிருந்து, மனத்திற்குள்ளேயே சிறிது சிரித்தார்.

பின்பு தயால் பாபு தம்முடைய தத்துவார்த்தப் பிரசங்கத்தை ஆரம்பித்தார். இவ்வளவு சிறு வயதில், சத்திய மார்க்கத்தில் அவர்களுக்குள்ள (விஜயாவுக்கும் விலாஸுக்கும்) அசைக்க முடியாத நம்பிக்கையைப் பெரிதும் பாராட்டிக் கடைசியில் அவர் சொல்லலுற்றார்: "பகவானுடைய ஆசீர்வாதத்தால் நீங்களிருவரும் அஷ்ட ஐசுவரியங்களுடனும், தீர்க்காயுளுடனும் இருக்கவேண்டும். ஆனால் மகளே, கிராமத்தில் நீ ஸ்தாபித்திருக்கும் பிரம்மமந்திரத்தைச் செவ்வையாக நடத்துவதற்கு அதிகத் தியாகமும் முயற்சியும் அவசியம். நானும் கிராமவாசிதான். பிரம்ம தர்மம் கிராமத்தில் வேரூன்றி ஜீவித்திருப்பது மிகக் கஷ்டம் என்பதை நான் அனுபவத்தில் பார்த்திருக்கிறேன். ஆகையால், கிராமத்தில் நீ இப்பயிரை வைத்து நன்கு வளர்ப்பாயானால், அது ஒரு பெருஞ் சேவையென்றே நான் சொல்வேன். மிகக் கடினமான ஒரு பிரச்னையை நீ தீர்த்துவைத்துவிட்டாய். போற்றுதற்குரிய இவ்வரிய செயலுக்காக உன்னை எவ்வாறு புகழ்ந்து ஆசீர்வதிப்பதென்று எனக்குத் தெரியவில்லை."

"இப்பொழுது மந்திரம் ஸ்தாபிப்பதைப்பற்றி எனக்குச் சிறிதேனும் உற்சாகமில்லை; அதனால் எள்ளளவு பிரயோஜனம் இருப்பதாகவும் எனக்குத் தெரியவில்லை" என்றுதான் விஜயா சொல்ல நினைத்தாள். ஆனால் அவ்வெண்ணங்களை மனத்திலேயே அடக்கிக்கொண்டு, "நான் ஒரு கடினமான பிரச்னையைத் தீர்த்துவிட்டதாகச் சொன்னீர்களே; அது எங்ஙனம்?" என்று மட்டும் கேட்டாள்.

தயால்:—மகளே! பிரம்மசமாஜம் ஒன்றுதான், வங்க தேசத்துக் கிராமவாசிகளை நூற்றுக் கணக்கான மூடப் பழக்க வழக்கங்களினின்றும் மீட்கவல்லது என்பது என் திடமான நம்பிக்கை. நம் வங்காளிகளின் குண தோஷங்

களை நீ நன்கு அறிவாய். அவைகளைப்பற்றிச் சிறிது ஆழ்ந்து சிந்தித்துப் பார்.

விஜயா வேறொன்றும் கேளாமல், மௌனமாய் யோசிக்க ஆரம்பித்தாள். தேசோத்தாரண வேலை அவளுடைய மனத்துக்கு மிகவும் பிடித்தது. முதிய ஆச்சாரியாரின் கடைசி வார்த்தைகளைக் கேட்டதும், அவளுடைய மனத்தில் ஒரு பெருங்குழப்பம் உண்டாகியது. புகழும் கீர்த்தியும் சம்பாதிப்பதற்காகவே விலாஸ், மந்திரம் ஸ்தாபிக்கிறான் என்கிற எண்ணமே அவளுடைய மனத்தைப் புண்படுத்தியது. அவள் வேதனையினால் துடித்துக்கொண்டிருந்தாள். ஆகையினால் மந்திரம் ஸ்தாபிப்பதை அவள் மிகவும் வெறுத்தாள். ஆனால் தயால் பாபு சொன்ன வார்த்தைகளைக் கேட்டதும் வாஸ்தவத்திலேயே விலாஸ் பாபுவினுடைய நோக்கம் சிறந்ததாக இருக்கலாமென்றும், அவன் தான் நினைத்ததுபோலக் குரூரமும் கடுஞ்சித்தமும் வாய்ந்தவனல்ல என்றும் நினைக்கலானாள். நற்காரியங்கள் செய்யவேண்டுமென்ற ஓர் ஆவேசமே, அவனுடைய கடுஞ் சித்தத்திற்குக் காரணமாயிருக்கலாமோ என்று எண்ணினாள்.

உலகத்தில் இம்மாதிரி மனிதர்களின் எண்ணிக்கை கொஞ்சமல்லவே! நல்ல காரியங்களெல்லாம் யாராவது சிலருக்கு வருத்தம் உண்டு பண்ணக்கூடியதாய்த்தான் இருக்கும் என்று அவள் எங்கோ படித்த ஞாபகம் வந்தது. இத்தகைய மகத்தான காரியங்கள் செய்யும் மஹான்களெல்லாம் பெரும்பான்மையான ஜனங்களின் நன்மைக்காக யாரேனும் ஓரிருவர் பகைக்கு ஆளாகத்தான் வேண்டியிருக்கும்; அவர்கள் அதைப் பொருட்படுத்துவதே இல்லை. அதற்காக அவர்களைச் சிலர் இரக்கமில்லாதவர்களென்றும், கொடியவர்களென்றும் சொல்லுகிறார்கள். சிறு வயதிலிருந்தே விஜயா பிரம்மசமாஜக் கொள்கைகளில்

வளர்க்கப்பட்டு வந்தவளாகையால், அதில் அவளுக்கு அபார நம்பிக்கை இருந்தது. அக்கொள்கைகள் பரவுவதில் தான் தேசத்தின் க்ஷேமம் இருக்கிறது என்று கேட்டவுடனே, விலாஸை அவளால் மன்னியாமலிருக்க முடியவில்லை. உலகத்தில் மகத்தான காரியங்களைச் செய்வதற்குத் தோன்றும் பெரியார்களின் செய்கைகள் சாதாரண மனிதர்களின் செய்கைகளினின்றும் மாறுபட்டிருந்தால் அதற்காக அவர்களைக் குறை கூறுவது தகாது என்றுகூட அவள் நினைக்க ஆரம்பித்துவிட்டாள்.

நேரமாய்விட்டதைக் கண்டு, ஒவ்வொருவராய் எல்லோரும் எழுந்திருந்து போகவாரம்பித்தார்கள்; விஜயாவும் எழுந்து நின்றாள். இதன் மத்தியில் ராஸ் விஹாரி, மகனைத் தனியாக ஒருபுறம் அழைத்து என்ன சொன்னாரோ தெரியவில்லை; அப்பொழுதிருந்து விலாஸ் ஒரு நல்ல சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண் டிருந்தான். விஜயா எழுந்து நின்றவுடன், விலாஸ் அவள் பக்கத்தில் சென்று, "விஜயா, இன்று உனக்கு உடம்பு செளகரியமில்லையா?" என்றான்.

அரைமணிக்கு முன்பாக இருந்தால், ஒருவேளை விஜயா இக்கேள்வியைக் கொஞ்சமேனும் பொருட்படுத்தாமல், அப்படி இப்படி ஏதாவது சொல்லிவிட்டுப் போயிருப்பாள்; இப்பொழுதோ, அவள் சந்தோஷமா யிருந்தாள்; ஆகையினால் சகஜபாவத்துடன், "அப்படி யொன்றுமில்லை; உடம்பு செளகரியமாய்த்தான் இருக்கிறது. நேற்றிரவு நல்ல தூக்கமில்லாததால், கொஞ்சம் அசெளகரியம் போல் தோன்றுகிறது" என்றாள்.

விலாஸினுடைய முகம் ஆனந்தத்தினால் பிரகாசித்தது. ஒருவர் செய்த தீங்குக்குப் பதில் செய்யாமல், சில மனிதர்களால் இருக்கமுடியாது. அதனால் தங்களுக்கே தீங்கு

நேரிட்டாலுங்கூட, அவர்கள் அதைப் பொருட்படுத்துவதில்லை. விலாஸம் அத்தகைய மனிதன். விஜயா அவனிடத்தில் எத்தகைய வெறுப்புடன் நடந்துகொண்டாளோ, அதைப்போல - ஏன், அதைவிட அதிகமாகவே - அவன் அவளிடத்தில் கொடூரமாகவும், நிஷ்டூரமாகவும் நடந்துகொண்டான். இவ்விதமாகப் பரஸ்பரம் ஒருவர்மீது ஒருவர் கொண்ட வெறுப்பினுல் உற்பவித்த கோபாக்கினி, நிமிஷந்தோறும் அதிகரித்துப் பயங்கர ரூபத்துடன் வெளிக்கிளம்ப யத்தனிக்கையில், அறிவும், அனுபவ ஞானமும் வாய்ந்த பிதா, புத்திரனுக்கு ஏகாந்தத்தில் திரும்பத் திரும்பச் செய்த உபதேசமெல்லாம் வீணாயின. ஆனுல், விஜயாவின் நாவினின்றும் வெளியேறிய இனிமையான இவ்வொரு வாக்கியம் அவனுடைய சுபாவத்தையே முற்றிலும் மாற்றிவிட்டது. அவன் தன்னுடைய இயற்கையான கடுங்குரலை மாற்றி மிக இனிமையுடன், "அப்படியானுல் நீ இப்பொழுது வெயிலில் வெளியேற வேண்டாம். ஸ்நான பானுதிகளைச் சீக்கிரம் முடித்துக்கொண்டு, சிறிது படுத்துத் தூங்கு. சீதோஷ்ண ஸ்திதி இப்பொழுது கொஞ்சம் மாறியிருக்கிறது. ஆகையினுல் சிறிது கவனமாயிருக்கவேண்டும். இல்லையானுல் உடம்புக்கு ஏதாவது நேர்ந்துவிடும்" என்று சொன்னுன்.

இவ்விதம் சொல்லி முகத்தில் மிகுந்த கவலைக் குறிகளுடன், அவளிடத்தில் தான் முன்னுல் கொடூரமாக நடந்துகொண்டதற்காக மன்னிப்புக் கேட்பதற்குங்கூடத் தயாரானுன். மன்னிப்புக் கேட்பது என்பதுதான் அவனுடைய சுபாவத்திலேயே கிடையாதல்லவா? ஆகையினுல் வேறு ஒன்றும் சொல்லாமல், வேகமாய் விருந்தாளிகளைப் பின்தொடர்ந்தான்.

விலாஸினுடைய உருவம் மறையும்வரையில் விஜயா அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அதன்பின் ஒரு பெருமூச்சுவிட்டு, மெள்ள மெள்ள அவள் மாடியிலுள்ள தன் அறைக்குச் சென்றாள். சில காலமாக, இன்னதென்று தெரியாத ஒருநோய், அவளுடைய மனத்தை இரவு பகலாக வருத்திக்கொண்டே இருந்தது. திடீரென்று இன்று அந் நோய் அவளை விட்டு அகன்றுவிட்டதுபோல் தோன்றியது.

சந்திவேளைக்கப்புறம், உரிய சடங்குகளுடன் பிரம்ம மந்திரம் ஸ்தாபிக்கப்பட்டது. உள்ளே ஒரு நல்ல இடத்தில் இரண்டு அழகான நாற்காலிகள் அடுத்தடுத்து வைக்கப்பட்டிருந்தன. அவைகளில் ஒன்றில் மிகுந்த ஆரவாரத்துடன், விஜயாவை உட்காரவைத்தார்கள். அடுத்த நாற்காலியில் யாரை உட்காரவைப்பார்க ளென்பது எல்லோருக்கும் தெரிந்ததே. க்ஷணநேரம் விஜயாவின் ஹிருதயத்தில் ஒரு பெருங்கலவரம் தோன்றியதுபோல் இருந்தது; ஆனால் விலாஸ், தனக்காக நியமிக்கப்பட்டிருந்த ஆசனத்தில் வந்து உட்கார்ந்ததும், அது அடங்கிவிட்டது.



## பதினைந்தாவது அத்தியாயம்

## எதிர்பாராத சந்திப்பு

ஆடம்பரங்களெல்லாம் முடிந்தவுடன், ஜனங்களின் கவனம் பிரம்மமந்திரத்தினின்றும் விலகிவிடுமென்று பயந்து, விலாஸ்விஹாரி அவ்வுற்சவத்தை முடிக்கவே விரும்பவில்லை போலும். எல்லா வேலைகளும் முடிந்த பின்புங் கூட, உற்சவம் முன்போலவே முழுவேகத்தில் நடந்துகொண்டிருந்தது. காலக்ஷேபங்களும், பிரசங்கங்களும் முன்போலவே நடந்து கொண்டிருந்தன. உற்சவத்திற்காக வந்த விருந்தாளிகளுக்கும், சொந்த வீடுவாசல், வேலைகளெல்லாம் இருக்குமல்லவா? அயலார் வீட்டில் சாப்பிட்டுக்கொண்டு ஆனந்தமாகக் காலத்தைக் கழித்தால், அவர்களுடைய சொந்த வேலைகளை யார் கவனிப்பது? ஆகையினால் உற்சவத்தை ஒரு நாள் முடிக்க வேண்டியே யிருந்தது. அன்று ராஸ்விஹாரி ஒரு சிறிய பிரசங்கஞ் செய்து சொல்லலுற்றார்: "நம்மை அஞ்ஞானமாகிய கோர அந்தகாரத்தினின்றும் விடுவித்து ஞானத்தை அளித்த, அப்பரப்பிரம்மத்தின் கமலபாதங்களில் இம்மந்திரத்தை அர்ப்பணம் செய்யும் இவ்விருவருக்கும் ஸர்வமங்களமும் உண்டாகுமாக! நிர்மலமான நவீன வாழ்க்கை நடத்துவதற்கு, என்று இவ்விருவரும் ஒன்று கூடுகிறார்களோ, அச்சுபதினத்தைக் கண்களால் பார்ப்பதற்கு நமக்கு நீண்ட ஆயுள் கொடுக்குமாறு நான் கடவுளைப் பிரார்த்திக்கிறேன். விஜயா! விலாஸ்! நீங்களிருவரும் இக்கனவான்கள் அனைவரையும் நமஸ்கரியுங்கள்.

கனவான்களே! நீங்களும் என் அன்பார்ந்த இக்குழந்தைகளை ஆசீர்வதியுங்கள்" என்றார்.

விஜயாவும், விலாஸும் அடுத்தடுத்துத் தரையின்மீது தலைகளை வைத்துக்கொண்டு, அதிதிகளை நமஸ்கரித்தார்கள். அவர்களும் மிருதுவான குரலில் அவ்விருவரையும் ஆசீர்வதித்தார்கள். அதன்பின் சபை கலைந்தது.

விஜயா வீடு வந்துசேர்ந்தபொழுது அவளுடைய மனத்தில் துக்கமோ சஞ்சலமோ இல்லை. ஒரு நற்காரியத்தில் இறங்கியிருக்கிறோம் என்ற ஆனந்தமும் உற்சாகமும் அவளுடைய ஹிருதயத்தில் பரிபூர்ணமாகநிரம்பியிருந்தன."தன்னுடைய சுகம் ஒன்றுமட்டுந்தான் உலகத்தில் சுகம் என்று நினைக்கலாகாது; பிறருக்காகவும், சத்தியத்திற்காகவும் அச்சுகத்தைத் தியாகம் செய்வதே, என்றும் அழியாத இன்பமாகும்" என்று அவள் தனக்குள்ளேயே சொல்லிக் கொண்டாள்.

விலாஸினுடைய நடத்தை தனக்குப் பிடியாமல் இருக்கலாம்; அவனுடைய அபிப்பிராயங்கள் சில தனக்கு விரோதமாயிருக்கலாம்; ஆனால் மதசம்பந்தமான விஷயங்களில் தங்களுக்குள் எவ்வித வித்தியாசமும் உண்டாகாதல்லவா என்று விஜயா தன்னைத் தேற்றிக்கொண்டாள். படுக்கையில் படுத்துக்கொண்டு, விலாஸைப்போன்ற ஒரு திடசித்த புருஷனுடைய வாழ்க்கையோடு தன் வாழ்க்கை ஒன்றுசேர்வது நலமே என்று அவள் அடிக்கடி தனக்குள் சொல்லிக்கொள்வாள். அவன் மூலமாக அநேக நற்காரியங்களைச் செய்வதற்கே, பகவான் இம்மாதிரி அவளுடைய மனப்போக்கை மாற்றியிருக்கிறாரென்று அவள் நினைக்கலானாள்.

மறுநாள் விலாஸ் எல்லோரையும் கைகூப்பி நமஸ்கரித்து, "குறைந்தபக்ஷம் தாங்கள் மாதத்திற்கு ஒருமுறை

யாவது வந்து மந்திரத்தைக் கௌரவப்படுத்தினல், நாங்கள் (அதாவது விலாஸும், விஜயாவும்) எங்கள் வாழ்க்கை முழுவதும் தங்களுக்கு நன்றியுள்ளவர்களா யிருப்போம்" என்று வேண்டிக் கொண்டான். பெரும்பான்மையோர் அவனுடைய வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு தங்கள் இருப்பிடம் சென்றார்கள்.

"விஜயா! நீ மந்திரத்தை எப்பொழுதும் நன்றாக நடத்த வேண்டுமென்று நினைத்தால், தயால் பாபுவை இங்கேயே வைத்துக்கொள்வதற்கு ஏற்பாடு செய்" என்று ராஸ் விஹாரி வந்து சொன்னர்.

" சிற்றப்பா, அது எப்படி முடியும் ?" என்று விஜயா ஆச்சரியத்துடன் கேட்டாள்.

ராஸ் :—முடியாத காரியத்தை நான் உன்னிடத்தில் சொல்வேனு, மகளே ? நான் அவரைக் குழந்தைப் பருவத்திலிருந்தே அறிவேன். ஏழையாக இருந்தபோதிலும், தயால் பாபு மிகவும் நல்ல மனிதர். உன்னுடைய ஜமீனில் அவருக்கு ஏதாவது வேலை கொடுத்து, யாதொரு கஷ்டமும் இல்லாமல் நீ அவரை வைத்துக்கொள்ளமுடியும். மந்திரத்தின் கட்டிடத்திலேயே அவர் வசிப்பதற்கும் இடங்கொடுத்து விடலாம். அவர் குடும்ப சகிதம் அதில் ஆனந்தமாய்க் குடியிருப்பார்.

தயால் பாபுவின்மீது விஜயாவுக்கு உண்மையிலேயே வெகு பிரியம். அவர் மிக எளியவர் என்று கேள்விப்பட்டதும், அவர்மீது அவளுக்கு மிகுந்த கருணை பிறந்தது. உடனே ராஸ் விஹாரியின் யோசனையை விஜயா வெகு ஆனந்தத்துடன் ஆமோதித்து, "அவரை இங்கேயே இருக்கச் சொல்லுங்கள். உண்மையில் அது எனக்கு மிகுந்த சந்தோஷமளிக்கும்" என்றாள்.

தயால் பாபு தம்முடைய குடும்பத்துடன் வந்து புதிய பிரம்ம மந்திரத்தில் வசிக்க ஆரம்பித்தார்.

நாட்கள் சென்றன. தை மாதம் கழிந்து, மாசியிலும் 10, 15 நாட்களாய்விட்டன. ஜமீன், மந்திரம் முதலியவைகளின் காரியங்கள் செவ்வையாக நடந்துகொண்டு வந்தன. அதிருப்தியோ, அமைதியின்மையோ சிறிதேனும் எவர் மனத்திலும் தோன்றவில்லை.

நரேந்திரனைப்பற்றி ஒரு விஷயமும் தெரியவில்லை. அவன் கேவலம் இரண்டு நாட்கள் சொந்த ஊருக்கு வந்திருந்தான். பின் போய்விட்டான். ஆனால் விஜயாவின் பார்வை அப்பூதக் கண்ணாடியின்மீது விழும்போதெல்லாம், யாரோ அவளுடைய ஹிருதயத்தை வேலினால் குத்துவதுபோல் இருந்தது. வேறு ஒன்றுமில்லை; நரேந்திரனுக்கு அவனுடைய கஷ்ட காலத்தில், இன்னும் கொஞ்சம் அதிக விலை கொடுத்திருந்தால், அவனுக்கு வெகு சந்தோஷமா யிருந்திருக்குமே என்கிற எண்ணந்தான் அவளை அடிக்கடி துன்புறுத்தியது. இன்னொரு விஷயம் அவளுக்கு ஞாபகம் வரும்போதெல்லாம், அவள் மிகுந்த ஆச்சரியமும் சங்கோசமும் அடைவாள். இரண்டு நாள் பழக்கத்தில், அம்மனிதனிடத்தில் அவளுக்கு இவ்வளவு அன்பு எவ்விதம் ஏற்பட்டதென்று தெரியவில்லை! இவ்வெண்ணமே முன்பு அவளுக்கு ஏன் தோன்றவில்லை யென்பது மிக்க ஆச்சரியமாக விருந்தது. இப்போலி மோகம் என்றாவது ஒரு நாள் அவளுடைய உள்ளத்தைவிட்டு நீங்கித்தான் போகும்; ஆனால் அதனால் ஏற்படும் மானக்கேட்டை அவளுடைய வாழ்க்கை முழுவதும் மறக்க முடியாது. ஆகையினால், அவ்விரண்டு நாளைய மோக மமதையைப்பற்றிய ஞாபகம் அவளுக்கு வரும்போதெல்லாம், அதற்குப் பாத்திரமாயிருந்த நரேந்திரனை அவள் தன் மனத்தினின்றும் அறவே அகற்ற முயன்றாள்.

இவ்விதம் மாசிமாதமும் முடிந்தது. பங்குனி பிறந்ததும், உஷ்ணம் வெகு கடுமையாயிருந்தது. அதனால் எங்கும் ஜுரம் பரவியது. இரண்டு நாட்களாகத் தயால்பாபுவும் ஜுரத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தார். இன்றுகாலை அவரைப் பார்க்கப் போகலாமென்று தீர்மானித்துப் புடவையை மாற்றிக்கொண்டு, தயாராகி, மாடியினின்று கீழே இறங்கிவந்தாள். வாசல் காப்போனாகிய கன்னையா சிங், தன்னுடைய தடியை எடுப்பதற்கு அவனுடைய அறைக்குச் சென்றான். அதற்குள், விஜயா முற்றத்தில் உட்கார்ந்து, தேநீர் பருக ஆரம்பித்தாள். ஏகாக்கிர சிந்தையுடன் விஜயா தேநீர் குடித்துக் கொண்டிருக்கும் பொழுது, “ நமஸ்காரம் ” என்று ஒரு சத்தங் கேட்டது.

விஜயா திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள்; நரேந்திரன் முன்னால் நின்றுகொண்டிருந்தான்! கையிலிருந்த தேத்தண்ணீர்க் கோப்பை அப்படியே கையில் தங்கிவிட்டது! விஜயா ஆச்சரியத்துடன் அவன் பக்கம் பார்த்துக் கொண்டு அப்படியே ஸ்தம்பித்துவிட்டாள்! அவளால் பிரதி நமஸ்காரமும் செய்ய முடியவில்லை; ‘வாருங்கள், உட்காருங்கள்’ என்று சொல்லவும் கூடவில்லை.

தானே ஒரு நாற்காலியை இழுத்து நரேந்திரன் உட்கார்ந்தான். “ இந்தப் பழக்கத்தை நானும் நிறுத்த முடியவில்லை; இன்னொரு கிண்ணம் தேநீர் கொண்டுவரும்படி உத்தரவாகட்டும் ” என்றான்.

“ கொண்டு வருகிறேன் ” என்று சொல்லிக் கையிலுள்ள கோப்பையை மேஜையின்மீது வைத்துவிட்டு, விஜயா எழுந்தாள். வேலைக்காரனைத் தேநீர் கொண்டு வரும்படி ஆக்ஞாபித்துவிட்டு, உடனே அவளால் திரும்பிவந்து உட்காரமுடியவில்லை. மாடிக்குச் செல்லும் படிக்கட்டின் கம்பத்தைப் பிடித்துக்கொண்டு, பேசாமல் நின்று கொண்டிருந்

தாள். பயங்கரமான புயலடிக்கும்பொழுது, சமுத்திரத்தில் எத்தகைய கொந்தளிப்பு உண்டாகிறதோ, அதே மாதிரி கொந்தளிப்பு அச்சமயம் அவளுடைய ஹிருதயத்திலும் உண்டாகியது. எந்தக் காரணத்தை முன்னிட்டும் மனித ஹிருதயத்தில் இம்மாதிரிக் கொந்தளிப்பு உண்டாகுமென்று இன்று வரையும் அவளுக்குத் தெரியாது. அத்துடன், அப் புயல் அடங்கினல் ஒழிய எவருடனும் சகஜபாவத்துடன் சம்பாஷணை செய்வது முடியாத காரியம் என்பதும் அவளுக்குத் தெளிவாய் விளங்கியது. ஐந்தாறு நிமிஷங்கள் வரை அதே இடத்தில் பேசாமல் நின்றுகொண்டிருந்தாள். நாராயணன் தேநீர் எடுத்துக்கொண்டு போவதைக் கண்டதும், அவளும் அவன் பின்னலேயே சென்று, முற்றத்திற்குள் பிரவேசித்தாள்.

நாராயணன் சென்ற பின்பு, நரேந்திரன் விஜயாவின் முகத்தைப் பார்த்துக்கொண்டு, "தங்களுக்கு என்மீது மிகக் கோபமாயிருக்கும். இப்பொழுது தாங்கள் எங்கேயோ செல்வதற்குப் புறப்பட்டீர்கள்போலும்; நான் வந்து உங்களைத் தடுத்துவிட்டேன். ஆனல், நாலைந்து நிமிஷங்களுக்கு மேல் நான் உங்களை நிறுத்திவைக்க மாட்டேன்" என்றான்.

விஜயா :—முதலில், நீங்கள் தேநீர் பருகுங்கள்.

மேற்குத் திசையில் உள்ள ஜன்னலின்மீது திடீரென்று அவளுடைய பார்வை விழுந்ததும், ஆச்சர்யத்துடன், "இந்த ஜன்னலை யார் வந்து திறந்தது?" என்று விஜயா கேட்டாள்.

நரேந் :—வேறொருவருமில்லை, நான்தான் திறந்தேன்.

விஜயா :—எப்படித் திறந்தீர்கள்?

நரேந் :—எல்லோரும் எப்படித் திறக்கிறார்களோ அப்படித்தான்: அதை இழுத்துத் திறந்தேன். ஏன்? அதில் ஏதாவது குற்றமுண்டா?

விஜயா தலையை அசைத்துக்கொண்டு, "இல்லை" என்றாள்; பின்பு ஏழெட்டு விநாடிகள் வரை நரேந்திரனுடைய நீண்ட மெல்லிய விரல்களைப் பார்த்துக்கொண்டே, "தங்களுடைய விரல்களென்ன இரும்பா? இச்சன்னலின் கதவை வெளியிலிருந்து பலமாகத் தட்டினாலொழியத் திறக்கமுடியாது. இதை இழுத்துத் திறக்கவல்லவர்களை நான் இதுவரை பார்த்ததில்லை" என்று கூறினாள்.

இதைக் கேட்டதும் நரேந்திரன் சிரித்தான். அச்சிரிப்பின் ஒலியினால் அறை முழுவதும் கலகலத்தது. விஜயாவைப் புளகாங்கிதமாக்கிய அதே பழைய சிரிப்பு! அந்த ஞாபகம் வந்ததும் விஜயாவின் மெய்சிலிர்த்தது. சிரிப்பு அடங்கியதும் நரேந்திரன் சகஜமாக, "உண்மையிலேயே, என்னுடைய விரல்கள் கசரத் செய்வதனால் மிக வலிமை பொருந்தியிருக்கின்றன. பலமாக எனது கையினால் வேறெவருடைய கரத்தையாவது அழுத்திப் பிடிப்பேனாகில் யாராக இருந்தாலும் திமிற முடியாது" என்றான்.

விஜயா தன் சிரிப்பை அடக்கிக்கொண்டு கம்பீரமாய், "தங்களுடைய நெற்றி அதைவிடக் கடினமாயிருக்கிறது. யார் அடித்தாலும்................"

அவள் சொல்லி முடிப்பதற்குள், நடுவிலேயே நரேந்திரன் முன்போல் உரக்கச் சிரித்தான். அவனுடைய சிரிப்பு, காலை இளஞ்சூரியனின் கிரணங்களை ஒத்தது. அதன் இனிமையையும், அழகையும் அனுபவிக்கவேண்டுமென்ற ஆசையை எவராலும் அடக்கமுடியாது.

நரேந்திரன் தன் ஜேபியிலிருந்து இருநூறு ரூபாய் நோட்டுகளை யெடுத்து மேஜையின்மீது வைத்து, "அப்பூதக் கண்ணாடிக்காக நான் இங்கே வந்திருக்கிறேன். கேவலம், இந்த ரூபாய்க்காகத் தாங்கள் என்னைத் திருடனென்றும், மோசக்காரனென்றும் இன்னும் என்னென்னவோ சொல்லி

யனுப்பினீர்கள்? இதோ, உங்களுடைய பணத்தை வாங்கிக் கொண்டு என் சாமானை என்னிடம் கொடுத்துவிடுங்கள்" என்றான்.

க்ஷணப்பொழுதில் விஜயாவின் முகம் வெட்கத்தினால் சிவந்தது. என்றாலும், எப்படியோ சமாளித்துக்கொண்டு, "இன்னும் என்ன என்ன சொல்லியனுப்பினேன், சொல்லுங்களேன், பார்ப்போம்" என்றாள்.

நரேந் :—அவையெல்லாம் இப்போது எனக்கு ஞாபகமில்லை. அக்கருவியைக் கொண்டுவரும்படி வேலைக்காரனிடம் சொல்லுங்கள். நான் ஒன்பதரை மணி வண்டிக்குக் கல்கத்தா போகவேண்டும். எனக்குக் கல்கத்தாவிலேயே ஒரு நல்ல வேலைகிடைத்தது மிக்க நலமாயிற்று; அதிகதூரம் போகவேண்டி நேரிடவில்லை.

விஜயாவின் முகம் பிரகாசமுற்றது; "தங்களுக்கு நல்ல அதிர்ஷ்டமிருக்கிறது. தாங்கள் பாக்யசாலி!" என்றாள்.

நரேந் :—உண்மைதான்; ஆனால் இப்பொழுது தாமதிப்பதற்கு நேரமில்லை; மணி ஒன்பது அடிக்கப்போகிறது.

க்ஷணப்பொழுதில் அணையப்போகும் விளக்கைப்போல் அவளுடைய முகம் ஒளியிழந்தது. நரேந்திரன் அதைச் சற்றேனும் கவனிக்கவில்லை; "நான் போகவேண்டும். அதைக் கொண்டுவரச் சொல்லுங்கள்" என்றான்.

விஜயா நரேந்திரனுடைய முகத்தைப் பார்த்து, "இந்த நிபந்தனையின் பேரிலா நான் வாங்கினேன்? தாங்கள் ரூபாயைக் கொண்டு வந்திருக்கிறீர்கள்; நான் உடனே அதைத் திரும்பக்கொடுத்துவிடவேண்டும்! வெகு அழகு!" என்றாள்.

நரேந் :—(வெட்கத்துடன்) இல்லை அம்மா திரி கட்டாயம் ஒன்றுமில்லை. ஆனால் தங்களுக்கு அது அவசியமில்லையே?

விஜயா :—ஒப்புக்கொள்ளுகிறேன். இப்பொழுது அவசியமில்லைதான். ஆனால் என்றுமே அவசியமிராது என்று தங்களிடம் யார் சொன்னது ?

நரேந்திரன் தலையசைத்துக் கொண்டு, திடமான குரலில், "நான்தான் சொல்கிறேன். அக்கருவியினால் தங்களுக்கு என்றும், எவ்வித உபயோகமும் இராது. ஆனால் எனக்கு............" என்றான்.

விஜயா மிகுந்த கம்பீரத்துடன், "ஆனால் விற்கும் சமயத்தில், அதனால் எனக்கு அதிக உபயோகமுண்டு என்று சொன்னீர்களே ! தாங்கள் என்னை ஏமாற்றிவிட்டீர்களென்று நான் சொன்னதற்கு உங்களுக்குப் பிரமாதக் கோபம் மட்டும் வந்துவிட்டதே ! இது ஏமாற்றமல்லவா ?" என்று கேட்டாள்.

நரேந்திரன் லஜ்ஜையினால் சிறிது நேரம் பேசாமலிருந்து பின்பு, "அக்கருவியை உபயோகப்படுத்துவீர்கள், இம்மாதிரி சும்மா வைத்திருக்கமாட்டீர்களென்று நான் அச்சமயம் நினைத்தேன். நான் தங்கள் பணத்திற்கு வட்டி வேண்டுமானாலும் கொடுத்துவிடுகிறேன். தயைசெய்து அதைத் திருப்பிக் கொடுத்துவிடுங்கள்" என்று கூறினான்.

விஜயா :—எவ்வளவு வட்டி கொடுப்பீர்கள் ?

நரேந் :—தங்களுக்கு எவ்வளவு இஷ்டமோ அவ்வளவு கொடுக்கத் தயாராயிருக்கிறேன்.

விஜயா :—ஆனால் சாமானைக் கொடுக்க நான் தயாராயில்லை. நான் அதைக் கல்கத்தாவில் மிகச்சுலபமாய் நானூறு ரூபாய்க்கு விற்கமுடியும்.

நரேந்திரன் திடீரென்றெழுந்து படபடப்புடன் சொல்லலுற்றான் : "நல்லது ; அப்படியே செய்யுங்கள். அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. இருநூறு ரூபாய்க்கு

நானூறு ரூபாய் பெற விரும்புவர்களிடத்தில் நான் என்ன பேசுவது !"

விஜயா வெகு கஷ்டத்துடன் சிரிப்பை அடக்க முயன்ருள்; ஆனுல் பயனில்லை. நரேந்திரன் இதைக் கவனிக்கவில்லை; "நீங்கள் ஒரு ஷைலக்காக இருப்பீர்களென்று நான் நினைத்திருந்தால், இங்கே வந்திருக்கவே மாட்டேன்" என்ருன்.

விஜயா :—கடனை வசூலிப்பதற்காக நான் தங்கள் சொத்து முழுவதையும் பறிமுதல் செய்தேனே; அப்பொழுதுகூடத் தெரியவில்லையா ?

நரேந் :—இல்லை. காரணமென்ன வென்ருல், அது உங்கள் தந்தையும் என் தந்தையும் சம்பந்தப்பட்ட விஷயம்; ஆகையினுல் அதில் தாங்கள் ஒன்றும் செய்திருக்கமுடியாது. ஆதலால் அது தங்களுடைய குற்றமல்ல. நல்லது நான் போய்வருகிறேன்.

விஜயா :—சாப்பிட்டுவிட்டுப் போகமாட்டீர்களா ?

நரேந் :—(கோபத்துடன்) மாட்டேன். நான் சாப்பிடுவதற்காக வரவில்லை.

விஜயா :—நல்லது. தாங்கள் டாக்டர் அல்லவா ? நாடி பார்க்கத் தெரியுமா ?

இப்பொழுது அவளுடைய இதழ்களில் குறும்பு நகையின் ரேகை யொன்று தோன்றியது. நரேந்திரன் சினத்துடன், "நீங்கள் என்னைக் கேலியா செய்கிறீர்கள்? தங்களிடத்தில் செல்வம் அதிகமிருக்கலாம்; ஆனுல் அக்கர்வத்தினுல் எவரையும் ஏளனம் செய்வதற்குத் தங்களுக்கு அதிகாரமில்லை என்பதை ஞாபகம் வைத்துக்கொள்ளுங்கள்; எதையும் தீர யோசித்துப் பேசுங்கள்" என்று கூறினுன்.

இவ்விதம் சொல்லி நரேந்திரன் செல்வதற்குத் தயாராளுன்.

விஜயா :—இல்லையானல், தங்கள் சரீரத்தில் பலமிருக்கிறது ; கையில் தடியிருக்கிறது............இல்லையா ?

நரேந்திரன் கையிலிருந்த தடியை வீசியெறிந்துவிட்டு நாற்காலியில் உட்கார்ந்தான். "சீச்சீ ! நீங்கள் வாயில் வந்தபடி யெல்லாம் பேசிவிடுகிறீர்கள். உங்களோடு வாதாட என்னுல் முடியாது" என்று அவன் கூறவே, "தயை செய்து இதை ஒருபோதும் மறவாதீர்கள் !" என்று சொல்லிக்கொண்டு அடக்க முடியாத சிரிப்புடன் விஜயா வேகமாய் முற்றத்தினின்றும் சென்றுள்.

நரேந்திரன் முற்றத்தில் சிறிது நேரம் பேசாமல் உட்கார்ந்திருந்தான். கடைசியில் தன் தடியைக் கையிலெடுத்து, அவன் புறப்பட்டுக்கொண் டிருக்கும்போது, விஜயா அங்கே வந்துசேர்ந்தாள் ; "உங்களால் எனக்குத் தாமதமாகிவிட்டது. ஆகையால் நீங்கள் இன்று போக முடியாது. உங்களுக்கு நாடிபார்க்கத் தெரியுமா ? என்னோடு வாருங்கள்" என்றுள்.

நரேந் :—யாருக்கு நாடி பார்க்கவேண்டும் ?

விஜயா:—சமாஜ மந்திரத்தில், ஆச்சாரியராய் வந்திருக்கும் கனவான் எனக்கு மிகவும் வேண்டியவர். இரண்டு நாட்களாக அவருக்குக் கடுஞ்சுரம். இங்கே நல்ல டாக்டர்களொருவரும் இல்லை. கொஞ்சம் தயைசெய்து வாருங்கள் ; அவரைப் பார்த்துவிட்டு வரலாம்.

நரேந் :—நல்லது போகலாம்.

விஜயா :—சற்றுப் பொறுங்கள். சதீஷ் என்ற பையனை உங்களுக்குத் தெரியுமல்லவா ! இரண்டு நாட்களாக அவனுக்கும் காய்ச்சல். அவனை இங்கே கொண்டுவரும்படி அவனுடைய தாயாரிடத்தில் சொல்லியிருக்கிறேன்.

சொல்லி முடிப்பதற்குள், சதீசனுடைய தாய் அவனைக் கூட்டிக்கொண்டு வாசலண்டை வந்து நின்றுள்.

நரேந்திரன் அச்சிறுவனை ஒருமுறை பார்த்ததும், "சரி, உன் மகனைக் கொண்டுபோகலாம்; நான் பார்த்துவிட்டேன்" என்றான்.

சிறுவனுடைய தாயும், விஜயாவும் ஆச்சர்ய முற்றார்கள். "பாபுஜி! இவனுக்கு உடம்பெல்லாம் வலியெடுக்கிறது. நாடியைப் பார்த்து ஏதாவது மருந்து சொன்னால்..........." என்று பையனுடைய தாய் கெஞ்சினாள்.

நரேந் :—வலியெடுப்ப தெல்லாம் எனக்குத் தெரியும் அம்மா? பையனை வீட்டிற்குள் கொண்டுபோங்கள். குளிர் காற்றுப் படக்கூடாது. நான் மருந்து அனுப்புகிறேன்.

பின்பு நரேந்திரன், விஜயாவை நோக்கி, "இது அம்மைக் காய்ச்சல். அவனைச் சிறிது கவனமாய்ப் பார்த்துக் கொள்ளும்படி சொல்லுங்கள்" என்றான்.

விஜயா :—அம்மையா? அது எங்கிருந்து வந்தது?

நரேந் :—அதெப்படிச் சொல்லமுடியும்? ஆனால் இது வைசூரிதான். முத்துக்கள் இன்று தெரியா; நாளை ஸ்பஷ்டமாகத் தெரிந்துவிடும். இப்பொழுது ஆச்சார்யரைப் பார்க்கப்போகவேண்டிய அவசியமில்லையென்று நினைக்கிறேன். அவருக்கும், இதே சுரமாய்த்தான் இருக்கும்.

விஜயா பயத்தினால் நடுங்கி நாற்காலியில் சாய்ந்தாள்; "நிச்சயமாய் எனக்கும் வைசூரி வரும் போலும்! நேற்றிரவு காய்ச்சலாயிருந்தது. கைகாலெல்லாம் வலியெடுக்கிறது" என்றாள்.

நரேந் :—(சிரித்துக்கொண்டு) வியாதி பயங்கரமானதல்ல; ஆனால் வியாதி வந்துவிடுமென்கிற எண்ணமே பயங்கரமானது! நேற்றுத் தங்களுக்குக் கொஞ்சம் சுரம் வந்திருந்தால், அதில் பயப்படுவதற்கு என்ன இருக்கிறது? இரண்டொருவருக்கு வைசூரி வார்த்தால், கிராமம் முழுதும் வைசூரி வரவேண்டுமென்கிற நியதியில்லை.

விஜயாவின் கண்களில் கண்ணீர் ததும்பியது; "வைசூரி வந்தாலும், என்னை யார் கவனிப்பார்கள்? எனக்கு யாரிருக்கிறார்கள்" என்று கூறினாள்.

நரேந் :—(சிரித்துக்கொண்டு) தங்களைப் பார்ப்பதற்கும், தங்களுக்குச் சேவை சிசுருஷை செய்வதற்கும் அநேகம் பேர் காத்திருக்கிறார்கள். அதற்காகக் கவலைப்பட வேண்டாம். ஆனால் தங்களுக்கு அவ்வியாதி வராது என்று நிச்சயமாய்ச் சொல்லுவேன்.

விஜயா :—வராவிட்டால் நலந்தான். ஆனால் நேற்றிரவு உண்மையிலேயே எனக்குக் கடுமையான சுரம் அடித்தது. அப்படியிருந்த போதிலும் அதிகாலையில் எழுந்திருந்து தயால் பாபுவைப் பார்க்கச் சென்றிருந்தேன். இப்பொழுதுகூடக் கொஞ்சம் சுரம் அடிக்கிறது. இதோ பாருங்கள்.

இவ்விதம் சொல்லி விஜயா தனது வலது கையை நீட்டினாள். நரேந்திரன் பக்கத்தில் சென்று அவளுடைய மெல்லிய கரத்தைத் தன் கையில் பிடித்துச் சிறிது நேரம் பரிசைக்ஷ செய்தான். பின்பு அதை மெள்ள விட்டுவிட்டு, " இன்று இனிமேல் ஒன்றும் சாப்பிடவேண்டாம். போய்ப் பேசாமல் படுத்துக்கொள்ளுங்கள். பயப்படவேண்டிய அவசியமில்லை. நாளையாவது, நாளை நின்றாவது நான் மறுபடியும் வருகிறேன் " என்றான்.

" தங்கள் கிருபை!" என்று சொல்லி விஜயா கண்களை மூடிக்கொண்டு மௌனமாயிருந்தாள். விஜயாவினுடைய இப்பரிதாபகரமான வார்த்தைகள் அம்புபோல் நரேந்திரனது ஹிருதயத்தில் தைத்தன. அவன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் பேசாமல் தடியை எடுத்துக்கொண்டு விஜயாவின் வீட்டைவிட்டு வெளியேறியபோது அவ்வபலைப் பெண்ணின் முகத்தில் தோன்றிய பரிதாபகரமான பார்வை,

திடம் பொருந்திய அவனுடைய புருஷ இதயத்தையும் இளக்கிவிட்டது.

மறுநாள் அவனுக்கு அதிக வேலையிருந்ததால் கல்கத்தாவை விட்டு வெளியேற முடியவில்லை. மூன்றும் நாள் காலையில் புறப்பட்டு, ஒன்பது மணிக்குள்ளாகவே கிராமத்திற்கு வந்துசேர்ந்தான். வீட்டிற்குள் நுழைந்ததும் வேலைக்கார நாராயணன் ஓடிவந்து, "பாபுஜி! ஜமீன்தாரிணி அம்மாவிற்குக் கடுஞ்சுர மடிக்கிறது. தாங்கள் மாடியில் அவர்களுடைய அறைக்குச் செல்லுங்கள்" என்றான்.

நரேந்திரன் விஜயாவின் அறைக்குள் நுழைந்தபொழுது சுரத்தின் கொடுமை தாங்கமாட்டாமல் அவள் படுக்கையில் அங்கும் இங்கும் புரண்டுகொண்டிருந்தாள். நடுத்தர வயதுள்ள முக்காடிட்ட ஒரு ஸ்திரீ அவள் தலைமாட்டில் உட்கார்ந்து விசிறிக்கொண்டிருந்தாள். கொஞ்ச தூரத்தில் ராஸ்விஹாரியும், விலாஸ் விஹாரியும் நாற்காலிகளில் உட்கார்ந்திருந்தனர்.

"முந்தா நாள் தாங்கள் வந்து வைசூரி வந்துவிடுமென்று பயமுறுத்திவிட்டா சென்றீர்கள்?" என்று விலாஸ் கேட்டான்.

இது முழுப் பொய். நரேந்திரனால் இதற்கு ஒரு பதிலும் சொல்ல முடியவில்லை. விலாஸின் சத்தம் காதில் விழுந்ததும், விஜயா சினம்பொங்கும் தன் கண்களைத் திறந்து பார்த்தாள். யார் வந்திருக்கிறதென்று அவளுக்கு முதலில் நன்றாய்த் தெரியவில்லை. இப்பொழுது அவனைத் திடீரென்று அடையாளம் தெரிந்துகொண்டு, தன்னிரு கைகளையும் நீட்டி, "வாருங்கள்" என்று சொன்னாள்.

உட்காருவதற்குப் பக்கத்தில் வேறு ஆசனம் இல்லை; ஆகையினால் நரேந்திரன் விஜயாவின் படுக்கையிலேயே ஓர் ஓரத்தில் உட்கார்ந்தான். திடீரென்று நரேந்திரனுடைய

கையை விஜயா இறுகப் பிடித்துக்கொண்டு, "நேற்று வந்திருந்தால், இன்று நான் இவ்வளவு கஷ்டப்பட்டிருக்க மாட்டேன். நாள் முழுவதும் உங்களை எதிர்பார்த்த வண்ணமே நானிருந்தேன்" என்றாள்.

இவ்வார்த்தைகளைக் கேட்டதும் பிதா புத்திரனிருவரும் வயிறெரிந்தனர். கோபத்தினால் அவர்கள் தேகம் முழுவதும் தீப்பற்றிக்கொண்டது போலிருந்தது. நரேந்திரன் சாந்தமான குரலில், "பயப்படவேண்டாம். இரண்டு மூன்று நாட்களில் சௌகரியமாகிவிடும்" என்றான்.

விஜயா, தன் ஸ்மரணையற்ற நிலையில், நரேந்திரனுடைய கையை யிழுத்துத் தனது மார்பின்மீது வைத்துக்கொண்டு மிகப் பரிதாபகரமான குரலில், "நல்லது; இனிமேல் நான் சௌகரியமடையும் வரைக்கும், தாங்கள் எங்கும் போக மாட்டீர்களல்லவா? நீங்கள் போய்விட்டால் நான் பிழைக்க மாட்டேன்" என்றாள்.

பதில் சொல்லுவதற்கு அவன் தலைநிமிர்ந்தபொழுது, தீக்கொள்ளிகள் போன்ற நான்கு பயங்கரமான கண்கள் அவனையே உறுத்து நோக்குவதைக் கண்டான். ஆதரவற்றிருக்கும் ஒரு பிராணியின்மீது பாயவிருக்கும், பசி மிகுந்த கொடுஞ் சிங்கம்போல் விலாஸ் விஹாரி தோன்றினான்.

# பதினாறும் அத்தியாயம்

## எரியும் தீயில் எண்ணெய்

நரேந்திரன் இதைக் கண்டு அப்படியே பிரமித்து நின்று விட்டான். விஜயாவின் கேள்விக்குப் பதில் சொல்ல முடியவில்லை. மனிதர்களுடைய சினம்பொருந்திய பார்வையைக் கேவலம் மிருகங்கள்கூட அறிந்துகொள்ளுகின்றன. கபடமற்ற சிந்தையும், உலகானுபவமும் இல்லாதவனாக இருந்தபோதும் அவர்களுடைய கனன்ற பார்வையின் அர்த்தம் என்னவென்பது நரேந்திரனுக்கு விளங்காமற் போகவில்லை. பிதா புத்திரனாகிய அவ்விருவரும் தன்னை மிகவும் வெறுக்கிறார்கள் என்பது இப்பொழுதுதான் முதன் முதலில் அவனுக்குத் தெரிந்தது. விஜயாவிற்கு அவன் பூதக்கண்ணாடியைக் காட்டவந்தபொழுது, அவர்கள் பேசியவற்றையெல்லாம் அவன் தன் காதாலேயே கேட்டிருக்கிறான். பின்பு பூதக்கண்ணாடிக்குப் பணம் கொடுப்பதற்காக ராஸ்விஹாரி அவன் வீட்டிற்குச் சென்றிருந்தபொழுதும், அவனுக்குப் புத்திமதி சொல்வதுபோல் பல கடுஞ்சொற்கள் கூறினார். ஆனால், இன்று அவர்களுடைய கோபத்தின் காரணம் என்னவென்பது அவனுக்கு நன்கு விளங்கவில்லை. அவன் உண்மையில் தங்களை ஏமாற்றிவிட்டுச் செல்லவில்லையென்றும், அந்தக் கருவியை வெகு சுலபமாய் நானூறு ரூபாய்க்கு விற்கமுடியும் என்றும் அவர்களறிந்த பின்பும், அவனையேன் அவர்கள் வெறுக்க வேண்டும்? விஜயாவிற்கு வைசூரி வந்துவிடுமென்று அவன் பயமுறுத்திச் சென்றதாக நினைத்து ஒருவேளை அவனை வெறுக்கிறார்களோ? ஆனால், உண்மையில்

அவன் அப்படியொன்றும் சொல்லவில்லையே! அவன் அவ்விதம் சொன்னதாக யார் கட்டிவிட்டது! ஒரு வேளை, விஜயாவே அவ்வாறு சொல்லியிருப்பாளோ?

இப்படியெல்லாம் அவன் நினைத்துக் கொண்டிருக்கும் பொழுது, விலாஸ் மீண்டும் கத்த ஆரம்பித்துவிட்டான். வேலைக்கார நாராயணன் திரையை நீக்கிக்கொண்டு, உள்ளே சற்று எட்டிப் பார்த்தான். அகஸ்மாத்தாக விலாஸின் பார்வை அவன் மீது விழுந்தது. வேறென்ன வினை வேண்டும்! விலாஸ் அதிகோபத்துடன், "மடப் பயலே! ஒரு 'சேர்' (Chair) கொண்டுவா" என்று உரத்துக் கூவினான்.

அங்கிருந்தவர்கள் அனைவரும் திடுக்கிட்டு நடுங்கினார்கள். பாவம்! நாராயணனுக்குக் 'கழுதைக்குப் பிறந்த பயலே' என்பதற்கும், 'கொண்டுவா' என்பதற்கும் அர்த்தம் விளங்கிவிட்டது. ஆனால் 'சேர்' (Chair) என்பது என்னவென்று அவன் அறிவிற்கு எட்டவில்லை. அறைக்குள் நுழைந்து அவன் இங்குமங்கும் பரக்கப் பரக்க விழித்தான். அதைக் கண்டவுடன் ராஸ் விஹாரி, "டாக்டர் பாபு உட்காருவதற்கு ஒரு குரிச்சி கொண்டுவந்து வையடா" என்றார். நாராயணன் உயிரைக் கையில் பிடித்துக்கொண்டு ஓடினான். பின்பு ராஸ் விஹாரி மகனைச் சிறிது சாந்தப்படுத்திவிட்டு, "வியாதியஸ்தர் அறையில் இம்மாதிரி கத்துவது உசிதமல்ல; மேலும், இவ்வாறு கத்துவது எப்பொழுதுமே பெருந்தன்மைக்கு அழகல்ல" என்றார்.

"இம்மாதிரி சந்தர்ப்பங்களில் மனிதனுக்குக் கோபம் வராமல் எப்படியிருக்கும்? பெரிய வீட்டு ஸ்திரீகளிடத்தில் எவ்வாறு நடந்துகொள்வது என்றுகூடத் தெரியாத காட்டு மிராண்டிகளை, கேளாது, கொள்ளாது, வீட்டிற்குள் விடும்

அறிவுகெட்ட வேலைக்காரர்கள்மீது யாருக்குத்தான் கோபம் வராது ?" என்று விலாஸ் கர்ஜனை செய்தான்.

இதைக் கேட்டதும் நரேந்திரனுடைய கையை விஜயா விட்டு விட்டுப் பேசாமல் சுவரை நோக்கிப் பார்க்க ஆரம்பித்தாள்.

நாராயணன் நாற்காலி கொண்டுவந்ததும் நரேந்திரன் படுக்கையினின்று எழுந்து, அதன்மேல் உட்கார்ந்தான். ராஸ்விஹாரி சிறிது சிரித்துக்கொண்டு, மீண்டும் விலாஸை நோக்கி, "இத்தகைய சந்தர்ப்பங்களில் உனக்குக் கோபம் வருவது இயற்கைதான் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் ஜனங்கள் வேண்டுமென்றே குற்றம் செய்வதில்லையென்பதை நீ அறியவேண்டும். நற் பழக்க வழக்கங்களையும், ஆசார நியதிகளையும், யாவருமே அறிந்துகொள்வார்களாகில் வேறென்ன வேண்டியிருக்கிறது ? ஆகையால் அதற்காக, நாம் அவர்கள்மீது கோபித்துக் கொள்ளாமல், அப்பிழைகளை மன்னித்துவிட வேண்டும்" என்று சமாதானம் கூறினார்.

"இம்மாதிரி அயோக்கியத்தனத்தை இனிமேல் சகிக்க முடியாது. மேலும் இவ்வீட்டிலுள்ள வேலைக்காரர்களெல்லாம் வரவரப் பெரும் போக்கிரிகளாய் விட்டார்கள். நான் நாளையே இவர்கள் அனைவரையும் வேலையிலிருந்து நீக்குகிறேன், பாருங்கள் !" என்று விலாஸ் உறுமினான்.

ராஸ்விஹாரி மீண்டும் சிறிது நகைத்து, அன்பு கனிந்த குரலில், சுவரை நோக்கிப் பேசுபவர்போல், "மிகுந்த மனோ வேதனையினால் புத்தி சுவாதீனமிழந்து வாயில் வந்ததை எல்லாம் பாவம் அப்படியே சொல்லிவிடுகிறான் ! இத்தனை வயதாகிய நானுங்கூட, விஜயாவிற்கு வைசூரி கண்டுவிட்டது என்று கேட்டவுடனேயே திகிலடைந்து விட்டேன். அங்ஙனமிருக்க அவனை எப்படிக்

குறைசொல்வது! நரேந்திரன் எங்களை அம்மாதிரி பயமுறுத்திவிட்டான்!" என்று சொன்னார்.

இதுவரை நரேந்திரன் ஒன்றுமே பேசவில்லை; ஆனால் இப்பொழுது அவன் எப்படிப் பதில் சொல்லாமலிருப்பான்?

"இல்லை. நான் அவ்வாறு சிறிதும் பயமுறுத்தினதில்லை."

விலாஸ் காலினால் தரையின்மீது ஓங்கி உதைத்துக் கொண்டு, "நிச்சயமாய்ப் பயமுறுத்தவே செய்தாய். நாராயணன் சாட்சி!" என்றான்.

நரேந் :—நான் சொன்னதை நாராயணன் சரியாய்க் கேட்டிருக்கமாட்டான்.

விலாஸ் இன்னும் ஏதோ உளறுவதற்குத் தயாராயிருந்தான். ஆனால் ராஸ்விஹாரி அவனைத் தடுத்து, "அடே விலாஸ்! நீ என்ன செய்கிறாய்? அவரே 'இல்லை' யென்று மறுக்கும்பொழுது, ஒரு வேலைக்காரன் வார்த்தையை நம்புவது சரியா? அவர் சொல்வதுதான் உண்மையாக இருக்கும்" என்றார்.

விலாஸ் இதற்கு ஏதோ பதில் சொல்ல ஆரம்பித்தான். ராஸ்விஹாரி, கண்ஜாடையால் அவனைக் கண்டித்து, மீண்டும், "இச்சாதாரணக் காய்ச்சலுக்காக நீ உன் தைரியத்தை இழவாதே. சர்வமங்கள சொரூபனாகிய ஜகதீசுவரன், நம்மைச் சோதிப்பதற்காகவே இத்தகைய இடுக்கண்களை உண்டாக்குகிறானென்பதை நீ மறந்துவிட வேண்டாம்" என்றார்.

சிறிது நேரம் மௌனமாயிருந்து மீண்டும், "வைரூரி வந்துவிடுமென்று இவர் உண்மையிலேயே பயமுறுத்தினார் என்று வைத்துக்கொண்டாலும், அதனால் என்ன பெரிய மோசம் ஏற்பட்டுவிட்டது? பெரிய பெரிய டாக்டர்கள்கூடத் தவறிவிடுகிறார்கள்! இவர் இப்பொழுது

தானே வைத்தியப் பரீட்சை தேறிவிட்டு வந்திருக்கிறார்! ஆகையால் இவர் தவறு செய்ததில் ஆச்சர்யம் ஒன்று மில்லையே" என்றார்.

இவ்விதம் சொல்லி நரேந்திரனை நோக்கி ராஸ்விஹாரி, "ஜுரம் சாதாரணமானதுதானே? அதற்காகக் கவலைப் படவேண்டாமல்லவா?" என்று கேட்டார்.

இதுவரை எல்லா அவமானங்களையும் நரேந்திரன் பொறுத்துக் கொண்டிருந்தான். ஆனால் இப்பொழுது ஏதாவது சுறுக்கென்று சொல்லாமல் அவனுலிருக்க முடியவில்லை.

"என் அபிப்பிராயத்திற்கு என்ன மதிப்பிருக்கிறது? என்னுடைய வார்த்தைகளைத்தான் நீங்கள் நம்புவதில்லையே! யாராவது பெரிய டாக்டரைக் கூட்டிவந்து நீங்கள் கேட்பது நலம்" என்றான்.

இதைவிட இன்னும் கடுமையான சொற்களைக் கூறுவதற்குக்கூட நரேந்திரனுக்கு உரிமையுண்டு. ஆனால் விலாஸ் இவைகளைக் கேட்டதும் மல்லுக்குத் தயாராகிவிட்டான். "நீ யாரோடு பேசுகிறாய் என்பதை ஞாபகம் வைத்துக்கொண்டு, வாயை அடக்கிப்பேசு. நான் இப்பொழுதே உனக்கு எச்சரிக்கை செய்கிறேன்: இந்தவீட்டில் இல்லாமல், வேறெங்காவது இவ்வார்த்தைகளைப் பேசியிருந்தால்............"என்று அவன் கர்ஜிக்க ஆரம்பித்தான்.

விலாஸ் ஒரு காரணமுமின்றி எடுத்ததற்கெல்லாம் கோபித்துக்கொள்வதையும், ஆரம்பத்திலிருந்து தன்னோடு சண்டையிழுப்பதற்குத் தயாராயிருப்பதையும் கண்டு நரேந்திரன் ஆச்சர்யமடைந்தான். "அவன் ஏன் நம்மோடு வம்பிற்கு வரவேண்டும்; நாம் அவனுக்கு என்ன தீங்கிழைத்துவிட்டோம்" என்பது நரேந்திரனுக்கு விளங்கவில்லை. விஜயாவிற்கும், விலாஸுக்கும் எதிர்காலத்தில் ஏற்படவிருந்த சம்பந்தத்தைப்பற்றி நரேந்திரனுக்கு ஒன்றுமே இதுவரை

தெரியாது. ஆகையினால் விலாஸின் உள்ளப் புகைச்சலுக்குக் காரணம் என்னவென்பது அவனுக்குப் புலனாகவில்லை. கல்கத்தாவிலிருந்து விஜயா வந்தவுடனேயே அக்கிராமவாசிகள், விஜயா - விலாஸ் சம்பந்தத்தைப் பற்றிப் பேசுவதிலேயே தங்கள் காலத்தைக் கழித்தார்கள். அந்தச் சமயம் அடுத்த கிராமத்திலிருந்த நவீன விஞ்ஞானியாகிய நரேந்திரன், ஏகாக்கிர சிந்தையுடன் கிருமிகளின் ஆராய்ச்சியிலேயே தன் நேரத்தைக் கழிக்கலானான். ஆகையால் அவ்வூர் வம்புகளெல்லாம் அவன் காதிற்கு எட்டவில்லை. அதன்பின்பு சமாஜ மந்திரம் பிரதிஷ்டை செய்யும் சமயம், மேற்கூறிய சம்பந்தத்தைப்பற்றிய பேச்சு ஊர்ஜிதமாயிற்று. அப்பொழுது நரேந்திரன் கல்கத்தாவில் இருந்தான். இன்று தந்தையும் மகனும் பேசிக்கொண்டிருந்த மாதிரியிலிருந்து, அவனுக்கு இடையிடையே சிறிது சந்தேகம் தோன்றியது; ஆனால் அதைப் பற்றித் தீரயோசித்து உண்மையைத் தெரிந்துகொள்வதற்கு அவனுக்கு அவகாசமில்லை.

திடீரென்று விஜயா அவர்கள் பக்கம் திரும்பினாள். வேதனை நிறைந்த கண்களால் நரேந்திரனுடைய முகத்தை க்ஷணநேரம் பார்த்து, "நான் உயிரோடு இருக்கும்வரை தங்களுடைய நன்றியை மறக்கமாட்டேன். இவர்கள் கூறும் கடுஞ்சொற்களைத் தாங்கள் பொருட்படுத்த வேண்டாம். திரும்பிச் செல்லுகையில் தயால்பாபுவை ஒருமுறை பார்த்துவிட்டுச் செல்லுமாறு நான் உங்களை வேண்டிக்கொள்கிறேன்" என்று சொல்லிவிட்டு விஜயா தன் முகத்தைத் திருப்பிக்கொண்டாள். உண்மையில் விஷயம் என்னவென்பது ராஸ் விஹாரிக்கு முன்னமேயே விளங்கிவிட்டது. "நன்றாய்ச் சொன்னாய்! நீ கூப்பிட்டுவிட்ட ஒருவரை, அவமதிப்பதற்கு எவருக்கு அதிகாரம் உண்டு?" என்றார்.

பின்பு தம் மகனை அநேக விதத்தில் கண்டித்தார். விஜயாவிற்கு வந்த வியாதியினால் விலாஸ் தன் புத்தி ஸ்வாதீனத்தை இழந்துவிட்டானென்றும், எது நன்மை எது தீமையென்று பகுத்தறியும் சக்தியே அவனுக்கு இப்போது இல்லையென்றும், அவன் பேசுவதும் செய்வதும் இன்னவென்று அறியமுடியாத நிலையிலிருக்கிறான் என்றும் ராஸ் விஹாரி சொன்னார்; அத்துடன் சர்வ வியாபகரான பரமாத்மாவின் சம்பந்தமாக அநேக தத்துவ மர்மங்களையும், உண்மைகளையும் விவரிக்க ஆரம்பித்தார். நரேந்திரன் ஒன்றும் பேசாமல் உட்கார்ந்திருந்தான். கடைசியில் அவன் எழுந்துநின்று தன் தடியையும், கைப்பெட்டியையும் எடுத்துக் கொண்டு, அங்கிருந்து சென்றுவிட்டான்.

"நரேந்திர பாபு! உங்களோடு நான் சில விஷயங்கள் பேசவேண்டியிருக்கிறது" என்று சொல்லிக்கொண்டு ராஸ் விஹாரி அவசர அவசரமாய் நரேந்திரன் பின்னால் கீழே இறங்கிச் சென்றார். கீழே ஓர் அறையில் அவனை உட்கார வைத்துப் பின்வருமாறு பேச ஆரம்பித்தார்: "இதோ பார் தம்பி! நாலுபேருக்கு மத்தியில் உன்னை மரியாதையாக நான் 'பாபு' என்று அழைத்தாலும், நீ எனது நண்பன் ஜகதீசனுடைய புத்திரன் என்பதை நான் மறக்கவில்லை. வனமாலியும், ஜகதீசனும் பரகதி யடைந்துவிட்டார்கள். நான் மட்டுந்தான் இவ்வுலகத்தில் கிடந்து உழல்கிறேன். எங்கள் மூவரிடையும் எத்தகைய உண்மையான நட்பிருந்தது என்பதை நான் அன்றே உனக்கு ஜாடையாகச் சொல்லியிருக்கிறேன். அப்பழைய கதையை யெல்லாம், நான் இப்பொழுது நினைத்துப்பார்க்கும் பொழுது, என் ஹிருதயம் வெடித்துவிடும்போலிருக்கிறது. ஹா! உயிரினும் மேலாக நாங்கள் ஒருவரையொருவர் நேசித்தோம்......."

பூதக்கண்ணுடிக்குப் பணம் கொடுக்கும் பொழுது உண்மையிலேயே ராஸ் விஹாரி ஹிதோபதேச ரூபத்தில் நரேந்திரனிடம் அநேக வார்த்தைகள் சொன்னுர். இச்சமயம் அதை ஞாபகமூட்டியுங்கூட நரேந்திரன் மௌனமாய் உட்கார்ந்திருந்தான்.

"உனக்கு மிக அவசியமான ஒரு கருவியை நீ விற்று விட்டதற்காக அன்று எனக்கு உன்மேல் மிகக்கோபமாகவே இருந்தது" என்று ராஸ் விஹாரி சிறிது சிரித்து மீண்டும் சொல்லலுற்ருர்: "கோபமா யிருந்தது என்று கேட்கும் போது, உனக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும்; மனிதனுடைய சுபாவமே அப்படித்தான்!"

இவ்விதம் சொல்லி ராஸ்விஹாரி ஒரு நீண்ட பெருமூச்சுவிட்டுப் பின்னும் சொல்லலுற்ருர்: "என்னுல் முடியாத காரியத்திற்காக நான் வருந்துவதில் என்ன பிரயோஜனம்? எத்தனையோ ஜனங்களின் விரோதத்திற்குப் பாத்திரமாகத்தான் வேண்டியிருக்கும்; பலபேர் நிந்தனையைக் கேட்கத்தான் வேண்டியிருக்கும். 'தம்பி, ராஸ்விஹாரி, பொய்தான் உன்னுல் சொல்லமுடியாது. நல்லது! உன்னை நாங்கள் பொய் சொல்லுமாறு கூறவில்லை. உண்மையையே சற்று இனிமையான முறையில் கூறேன்; உனக்கு வசவுகளாவது குறையுமே என்பதுதான் நாங்கள் சொல்வது' என்று என் நண்பர்கள் சொல்லுகிருர்கள். தம்பி, நரேந்திரா! உலகத்தில் ஜனங்கள் வாய் கூசாமல் எப்படித்தான் பொய் பேசுகிருர்களோ? நண்பர்களெல்லாம் என்னுடைய நன்மைக்காகத்தான் சொல்லுகிருர்கள் என்பதை நான் நன்கறிவேன். ஆனுல் நான் என்ன செய்யட்டும்? பகவான் என்னை இவ்வாறு சிருஷ்டித்துவிட்டார். என்னுல் முடியாத காரியத்தை நான் எவ்வாறு செய்வேன்? அதிருக்கட்டும். என்னைப்பற்றி நானே பேசிக்கொள்வதை நான் முற்றிலும்

வெறுக்கிறேன். என்னுடைய கடுஞ்சொற்களைக் கேட்டு நீ எவ்விதத்திலும் கோபித்துக் கொள்ளலாகாது என்பதற்காகவே, நான் இத்தனையும் சொல்லவேண்டி யிருந்தது.''

இவ்விதம் சொல்லி ராஸ்விஹாரி சிறிது நேரம் உத்தரத்தை நோக்கிய வண்ணமிருந்தார். பின்பு மீண்டும் கூறத் தொடங்கினார்: "தம்பி, நரேந்திரா, மற்றொரு விஷயம்: நான் இவ்வுலகத்தில் இத்தனை காலம் வாழ்ந்துவிட்டேன். உலகப்போக்கைப் பார்த்துப் பார்த்து என் உரோமமும் நரைத்துவிட்டது என்பது உண்மைதான். ஆனால் என்ன பேசினால் - எவ்வாறு நடந்துகொண்டால் - இவ்வுலகத்தில் நல்ல பேரெடுக்கலாம் என்பதை நான் இன்னும் அறிந்து கொள்ளவில்லை. இல்லையானால், அன்று உன்னிடத்தில் கோபமாய்ப் பேசி உன்னைப் பகைத்துக்கொள்வேனா?''

"தாங்கள் உண்மையைத்தான் சொன்னீர்கள். அதற்காக உங்களை ஏன் பகைத்துக்கொள்ளவேண்டும்?'' என்று நரேந்திரன் விநயத்துடன் கூறினான்.

"இல்லை, இல்லை; கடுஞ்சொற்களைக் கேட்கும்போது சற்றுக் கஷ்டமாய்த்தானிருக்கும். கேட்பவனுக்கு மாத்திரம் தான் கஷ்டம் என்று நினையாதே; சொல்லுகிறவனுக்கு அதைவிடப் பன்மடங்கு கஷ்டம் தம்பி! ஹே! ஜெகதீசுவரா!!

நரேந்திரன் தலைகுனிந்து பேசாமல் உட்கார்ந்திருந்தான். ராஸ்விஹாரி மீண்டும் சொல்லுற்றார்: "உன்மீது எத்தனை கோபம் இருந்தாலும், எனக்கு உன்னோடு பேசாமல் மட்டும் இருக்கமுடிவதில்லை. 'ஐயோ நாம் என்ன செய்துவிட்டோம்! தனக்கு மிக அவசியமான ஒரு கருவியை விற்பதற்கு அவனுக்கு எத்தகைய கஷ்டம் நேர்ந்ததோ? அதன் விலை எவ்வளவாயிருந்தாலுஞ் சரி, வாங்கிக்கொள்வதாக வாக்குக் கொடுத்தபின்பு, அதைப்பற்றிச் சிந்திக்கவும்

கூடாது, பணம் கொடுப்பதில் தாமதமும் செய்யலாகாது. விஜயாவிற்கு எப்பொழுது இஷ்டமோ அப்பொழுது ரூபாய் கொடுக்கட்டும். ஆனால் நான் இப்போழுதே சென்று, ரூபாயைக் கொடுத்துவிட்டு வருகிறேன் பாவம்! அவன் இந்தப் பணத்தைக்கொண்டுதான், பர்மாவிற்குப் போக வேண்டியிருக்கும் போலும்! ஆகையினால், இதில் ஒரு நாளேனும் தாமதிக்கலாகாது. அவன் என்னுடைய மித்திரன், ஜகதீசனுடைய புத்திரனல்லவா! அவனுக்கு உதவி செய்வது என் கடமையேயாகும்" என்று இவ்வாறெல்லாம் நான் நினைத்தேன்."

"பணம் கொடுப்பதற்கு அவர்களுக்கு இஷ்டமில்லையா, என்ன?" என்று நரேந்திரன் வேதனையுடன் கேட்டான்.

கிழவர் கம்பீரத்துடன், "அப்படி ஒன்றும் எனக்குத் தெரியவில்லை. நரேந்திரா! ஆனால் விஷயம் என்னவென்பது உனக்குத் தெரியுமா?" என்றார்.

இவ்விதஞ் சொல்லி அவன் சிறிது நேரம் மௌனமாய் இருந்தான். நானூறு ரூபாய்க்குப் பூதக்கண்ணாடியை விற்கப்போவதாகத் தான் கேள்விப்பட்டதை ராஸ் விஹாரியினிடத்தில் சொல்லலாமா என்று நரேந்தின் நினைத்தான்; ஆனால் பின்பு வேறு ஏதோ நினைத்து, வாளாவிருந்து விட்டான்.

இப்பொழுதுதான், ராஸ் விஹாரி தாம் சொல்ல வேண்டி வந்த விஷயத்தை ஆரம்பித்தார். அவர் மனிதர்களை நன்கறிவார். விலாஸிற்கும் விஜயாவிற்குமுள்ள சம்பந்தத்தைப்பற்றி நரேந்திரன் இன்னும் அறிந்துகொள்ளவில்லையென்று, அவனுடைய பேச்சிலிருந்தும், நடத்தையிலிருந்தும் ராஸ் விஹாரி தெரிந்துகொண்டார். பிறர் காரியங்களில் சிரத்தையில்லாத, நரேந்திரனைப் போன்ற மனிதர்

கள், தாங்களே விஷயங்களை அறிந்துகொள்ள மாட்டார்கள் என்பதையும் ராஸ் விஹாரி அறிவார்.

ராஸ் விஹாரி :—விலாஸின் நடத்தைக்காக நான் மிகவும் வருந்துகிறேன். ஆனால் விஜயா அப்பூதக் கண்ணாடியை வாங்குவதற்கு முன்னால், விலாஸை ஒரு வார்த்தை கேட்டிருந்தால், இவ்வளவு சங்கடம் நேர்ந்திராது. நீயே சொல் : அவனைக் கேட்டிருக்க வேண்டியது அவளுடைய கடமையல்லவா ?

விலாஸைக் கேட்கவேண்டியது விஜயாவின் கடமை எப்படி யாகும் என்பது நரேந்திரனுக்கு விளங்கவில்லை. கிழவருடைய முகத்தை அவன் ஆச்சர்யத்துடன் நோக்கலானான்.

ராஸ் விஹாரி :—விஜயா வியாதியுற்றதை அறிந்ததும் விலாஸ் எத்தகைய திகிலடைந்தா னென்பதை நான் நேரில் அறிவேன். அம்மாதிரித் திகிலடைவது இயற்கையேயாகும். எல்லாவிதப் பொறுப்பும் இப்போது அவன் தலையின்மீது இருக்கிறது. என்ன சிகிச்சை செய்யவேண்டும், யார் செய்ய வேண்டும் என்பதை நிச்சயிப்பதெல்லாம் அவனுடைய வேலை. அவனைக் கலந்து யோசியாமல் - அவனுடைய சம்மதத்தைப் பெறாமல் - ஒரு காரியமுமே செய்ய முடியாது. விஜயாவிற்கும் இவ்வுண்மை இன்றுதான் விளங்கியிருக்கிறது. இரண்டு தினங்களுக்கு முன்பே, அவள் இவ்வுண்மையை யறிந்திருந்தால், இவ்விரும்பத்தகாத சம்பவங்கள் நேர்ந்திருக்கமாட்டா. அவள் இன்னும் குழந்தை யல்லவே ! இதெல்லாம் அவள் முதலிலேயே யோசித்துச் செய்திருக்கவேண்டும்.

கிழவருடைய பேச்சின் நோக்கம் இன்னும் நரேந்திரனுக்கு விளங்கவில்லை. அவனுடைய மனத்தில் ஒரு சந்தேகம் தோன்றியது. ஆனால் அச்சந்தேகத்தை நிவர்த்தி

செய்துகொள்வதற்குக் கிழவருடைய வாயிலிருந்து ஒரு வாக்கியமும் பிறக்கவில்லை. அவன் பேசாமல் ராஸ் விஹாரி யின் முகத்தையே நோக்கலானுன்.

ராஸ் விஹாரி :—ஆனால் தம்பி, விலாஸினுடைய நடத் தையைக் கண்டு நீ அவன்மீது கோபித்துக் கொள்ளக் கூடாது என்று நான் உன்னை வேண்டிக்கொள்கிறேன். இது தவிர, உன்னிடத்தில் இன்னொரு வேண்டுகோள். அவ் விருவருக்கும் இவ்வைகாசி மாதத்தில் விவாகம் நடக்கப் போகிறது. அதுவரை நீ கல்கத்தாவிலேயே யிருந்தால், அச்சுபகாரியத்திற்கு நீ கட்டாயம் வரவேண்டும்.

நரேந்திரனால் ஒன்றும் பேசமுடியவில்லை; "நல்லது" என்று சொல்வதுபோல் தலையைமட்டும் அசைத்தான்.

அதன் பிறகு ராஸ்விஹாரி சந்தோஷத்துடனும், உற்சாகத்தோடும், அநேக விஷயங்கள் பேச ஆரம்பித் தார். அக்கலியாணம் வெகு காலத்திற்கு முன்பே நிச்சய மாகிவிட்டதாகவும், அது சம்பந்தமாய் வனமாலிக்கும் தமக் கும் என்னென்ன சம்பாஷணை நடந்தது என்பதையும், அது போன்ற அநேக பழங் கதைகளையும் ராஸ்விஹாரி சொல்லிக் கொண்டு வந்தார். பின்பு திடீரென்று, "நீ கல்கத்தாவி லேயேதான் இருக்கப்போகிறாயா? ஏதாவது வேலை கிடைக்குமா?" என்று கேட்டார்.

நரேந் :—உம், ஆங்கில மருந்துக்கடை ஒன்றில் ஒரு வேலை கிடைத்திருக்கிறது.

ராஸ்விஹாரி :—மிக்க சந்தோஷம். மருந்துக் கடையில் நல்ல வரும்படி வரும்; நன்றாய்ச் சம்பாதிக்கலாம். அதிருக்கட்டும், இப்பொழுது சம்பளமென்ன?

நரேந் :—மாதம் நானூறு ரூபாய் கொடுக்கிறார்கள்.

நானூறு ரூபாய்! ராஸ்விஹாரி பிரமித்து விழித்தார்.

வெகு நேரமாகி விட்டது. நரேந்திரன் எழுந்து நின்ருன். தயால்பாபுவிற்கு நாலைந்து முத்துக்கள் போட்டிருந்தன. அவரையும் பார்க்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டு, "சதீசனுக்கு இப்பொழுது எப்படியிருக்கிறது? தங்களுக்குத் தெரியுமா?". என்று கேட்டான். அவனை அவனுடைய கிராமத்திற்கு அனுப்பிவிட்டதாகவும், இப்பொழுது எப்படியிருக்கிருன் என்று தெரியாதென்றும், ராஸ் விஹாரி சொன்ஞர்.

இருவரும் அறையை விட்டு வெளியே வந்தார்கள். நரேந்திரன் மீண்டும் ஒருமுறை விஜயாவின் அறைக்கு வர வேண்டுமென்று, ராஸ்விஹாரி வேண்டிக்கொண்டார். விலாஸ் அவனை எதிர்பார்த்துக்கொண் டிருப்பதாகவும், சிகிச்சை சம்பந்தமாய் அவன் என்ன ஏற்பாடு செய்திருக்கிருன் என்பதை அறிந்துகொள்ள வேண்டுமென்றும் சொன்ஞர்.

வாசல்படிவரை வந்த நரேந்திரன் சிறிது நேரம் நின்று யோசித்தான். பின்பு ராஸ்விஹாரியின் சொற்களைக் கொஞ்சமேனும் பொருட்படுத்தாது வாசலை விட்டு இறங்கி நடக்கலாஞன். இன்னும் அவன் குளிக்கவும் இல்லை, சாப்பிடவுமில்லை. வெயில் கடுமையாக அடித்துக்கொண்டிருந்தது.மைதானத்தைக் கடந்து நரேந்திரன் திகடா கிராமத்திற்குச் சென்றுகொண்டிருந்தான். அத்தகைய வெயிலில் தான் அங்கே செல்லவேண்டிய ஆத்திரம் என்னவிருக்கிறது என்று தன்னைத் தானே அவன் அடிக்கடி கேட்டுக்கொண்டான். யாரோ ஒரு ஸ்திரீ அவனை வேண்டிக்கொண்டாள். ஆம், அதற்காகத்தான் அக் கடும் வெயிலில், முன்பின் தெரியாத ஒருமனிதரைப் பார்ப்பதற்காக அவன் சென்றுகொண்டிருக்கிருன்! அம்மாதிரி தன்னை வேண்டிக்கொள்வதற்கு விஜயாவிற்கு என்ன உரிமையிருக்கிறது? அவ்வேண்டு

கோளை நிறைவேற்ற, அவன் கடமைப்பட்டது எங்ஙனம்? இவ்வாறெல்லாம் அவன் நினைத்தபோதிலும், திரும்பிச் செல்ல அவனுக்கு மனம் வரவில்லை. அவனுடைய கால்கள் முன்னோக்கியே சென்றன. இறுதியில் ஒரு பெண்ணின் வேண்டுகோளை நிறைவேற்றுவதற்காகத் தன் பூர்வீக வீட்டையே சென்றடைந்தான்.

# பதினேழாம் அத்தியாயம்

## தயால் பாபுவும் நரேந்திரனும்

நரேந்திரன் ஒரு துண்டுக்காகிதத்தில் தன் பெயர் பட்டம் முதலியவற்றை எழுதி உள்ளே அனுப்பினன். அதைப் பார்த்ததும் தயால் பாபு ஆச்சர்யமுற்ருர். அவ்வளவு பெரிய டாக்டர் கால்நடையாகத் தம்மைப் பார்க்கவந்திருக்கிருர் என்பதை அவரால் நம்பமுடியவில்லை. மேலும், அந்த டாக்டருக்குத் தாம் ஒரு பெரும் அபராதம் இழைத்துவிட்டதாகவும் அவர் எண்ணினர். அதே டாக்டர் வீட்டில் அவரை வஞ்சித்து இப்போது அவர் வசித்துக்கொண்டிருக்கிருர்! அவருக்கு முன்னல், அவர் எப்படி தலைநிமிர்ந்து பேசுவது? க்ஷணநேரத்திற்குப் பின்பு, நல்ல உயரமும் முகதேஜஸும் வாய்ந்த ஒரு யுவன் உள்ளே வந்தபொழுது, தயால் பாபு பிரமித்து எழுந்து நின்ருர். அவருடைய வியாதி எத்தகைய கொடியதா யிருந்தபோதிலும், இனிமேல் பயமில்லையென்று தம்மைத் தாமே அவர் திடப்படுத்திக்கொண்டார். உண்மையில் வியாதி சர்வ சாதாரணமானதே; சிறிதும் கவலைக்கிடமில்லை. வியாதியினல் பீடிக்கப்பட்டு, விஜயா படுத்த படுக்கையாய்க் கிடந்தபோதும், தம்மை மறக்கவில்லை யென்றும், அவள்தான் டாக்டரை அனுப்பியிருக்கிருள் என்றும் கேட்டவுடன், நன்றியினலும், ஆனந்தத்தினலும் அவ்வயோதிகருடைய கண்களில் கண்ணீர் ததும்பியது.

நவநாகரிக டாக்டருக்கும், கர்நாடக ஆச்சாரியருக்கும் சிறிது நேரத்திலே பலத்த சம்பாஷணை ஆரம்பித்துவிட்டது. ஆச்சாரியரின் கபடமற்ற சிந்தையையும், நற்

குணங்களையுங் கண்டு நரேந்திரன் மகிழ்ந்தான். எந்த மதத்தையும் அவர் குறைகூறவில்லை. பரிசுத்தமாயிருப்பவன் எந்த மதத்தவனுயிருந்தாலும் அவனுக்கு முத்தியுண்டென்று அவர் சொன்னுர். தயால் பாபுவினுடைய இப்பரந்த கொள்கை, விலாஸினுடைய காதுக்கு எட்டினுலும், அவருடைய ஆச்சார்ய பதவி போய்விடும்! ஆனுல் நரேந்திரன் அவருடைய சரளமான பேச்சையும், விசாலமான நோக்கங்களையும் கண்டு பரவச மடைந்தான். ராஸ்விஹாரி விலாஸ்விஹாரியைப் பற்றிக்கூட அவர் குறைகூறவில்லை. அவர் யாரைப் பற்றிப் பேசினுலும், அவர்களைப்போன்ற சத்புருஷர்களைத் தாம் வேறெங்கும் பார்த்ததில்லை யென்றே சொன்னுர். கடைசியில், விலாஸைப்பற்றிப் பேசும்பொழுது, வருகிற வைகாசிமாதம் கலியாணம் நடக்கப்போகும் விஷயத்தையும் கூறினுர். பிரம்மசமாஜ முறையில் அக் கலியாணத்தைத் தாமே நடத்திவைக்கப் போவதாகவும் கூறி மிகுந்த குதூகல மடைந்தார்.

கடைசியில் சொல்லிய இச் சமாச்சாரத்தைக் கேட்டதும், நரேந்திரனுடைய முகம் மாறுதலடைந்தது. ஆனுல் தயால்பாபு அதைக் கவனிக்கவில்லை. அவர் ஆனந்தசாகரத்தில் மூழ்கியிருந்தார்.

தம் வீட்டில் சாப்பிட்டுவிட்டுப் போகும்படி அவர் நரேந்திரனைப் பெரிதும் வேண்டிக்கொண்டார். ஆனுல் நரேந்திரன் சம்மதிக்கவில்லை. சுமார் ஒன்றரை மணி நேரத்திற்குப் பின்பு, ஆச்சாரியரிடமிருந்து அவன் விடைபெற்றுக் கொண்டு வெளியேறியபொழுது, அவனுடைய மனம் மிக்க வியாகூலம் அடைந்திருந்தது. உலகம் முழுவதும் அவனுக்கு ஒரே சூனியமாய்த் தோன்றியது. நதியைக் கடந்ததும், இடது பக்கம் வெகுதூரத்தில், ஜமீன்தாரிணி

மாளிகை தென்பட்டது. உடனே தன் முகத்தைத் திருப்பிக்கொண்டு, மைதானத்தின் வழியாகவே நேரே சென்று, ரெயில்வே ஸ்டேஷனை நோக்கி விரைந்து நடக்கலானான்.

இவ்வுலகத்தில் அவன் விஞ்ஞானம் ஒன்றைத்தான் நேசிக்கிறான் என்றும், அதன் மீதுதான் தனக்குப் பிரேமை யென்றும், இதுவரை நினைத்துக்கொண்டிருந்தான். வேறு எதற்குமே தன்னுடைய ஹிருதயத்தில் இடமில்லையென்று அவன் நிச்சயமாய் நம்பியிருந்தான். உலகத்திலுள்ள மற்றப் பொருள்களை, விஞ்ஞானத்திற்குமுன் அவன் துச்சமாக மதித்தான். ஆனால் அவனுக்கும் தெரியாமல், அவனுடைய ஹிருதயம் இன்னொரு பொருளை நாடியிருக்கிறது என்பது இன்றுதான் முதன் முதலில் தெரிந்தது. அவனுக்கு அது மிகுந்த ஆச்சரியத்தை விளைவித்தது. சில சமயங்களில் அவன் மிகுந்த திகிலடைந்தான். தன்னை மிகவுங் கேவலமாகவும், அற்பமாகவும் மதிக்க ஆரம்பித்தான். விஜயாவின் நடத்தையும், பேச்சுக்களும் இப்பொழுது அவனுக்கு மிக அருவருக்கத்தக்கனவாய்த் தோன்றின. விலாஸோடும் அவள் இம்மாதிரி தானே கொஞ்சிக் குலாவியிருப்பாள் என்பதை நினைத்ததும், அவனுடைய உடல் முழுதும் நடுக்கமெடுத்தது. தன்னுடைய சகல சொத்துக்களையும் பிடுங்கிக்கொண்டு, தன்னைத் தெருவில் விட்ட அவளிடத்திலேயே, தன்னுடைய ஏழைமையைச் சொல்லி முறையிட்டுத் தன்னிடத்திலிருந்த ஒரே பூதக்கண்ணுடியை விற்கச் சென்றது எத்தகைய மதியீனம்! இம்மாதிரி அவன் தன்னையே நொந்துகொண்டான். அப்படித்தான் வேண்டும்! ஒரு வஞ்சகப் பெண்ணின் வேண்டுகோளைப் பெரிதாக மதித்துத் தன் வேலை வெட்டியெல்லாம் போட்டு விட்டுக் கல்கத்தாவிலிருந்து இவ்வளவு தூரம் ஓடிவரும் தன்னைப்போன்ற வெட்கங்கெட்ட மனிதர்களுக்கு, அது

சரியான தண்டனைதான்! விலாஸ் தன்னை அவமானப் படுத்தி வீட்டினின்று வெளியேற்றியதும் சரிதான்!

ஸ்டேஷனை யடைந்தபொழுது, இத்தனை துன்பத்திற்குங் காரணமான அந்தப் பூதக்கண்ணாடியுடன் நாராயணன் நின்றுகொண்டிருப்பதைக் கண்டான். "டாக்டர் பாபு, ஜமீன்தாரிணியம்மா இதைத் தங்களிடத்தில் கொடுக்கும்படி சொன்னார்கள்" என்று நாராயணன் சொன்னான்.

நரேந் :—ஏன்?

ஏன் கொடுக்கும்படி சொன்னாள் என்பதைப் பாவம் நாராயணன் எப்படி அறிவான்! ஆனால் அது டாக்டர் பாபுவினுடைய கருவி, அதுதான் அநேக மனஸ்தாபங்களுக்கும் காரணமாயிருந்தது என்பது மட்டும் அவனுக்குத் தெரியாமலில்லை. அவன் வெகு புத்திசாலித்தனமாகச் சிரித்துக்கொண்டு, "நீங்கள் திரும்ப வேண்டுமென்று கேட்டீர்களல்லவா?" என்றான்.

நரேந்திரன் மிகுந்த கோபத்துடன், "இல்லை, எனக்கு வேண்டாம். இதன் விலையைத் திருப்பிக் கொடுப்பதற்கு என்னிடத்தில் பணமில்லை" என்றான்.

'டாக்டர் பாபு கோபமாய் இருக்கிறார்போலும்; அதனால்தான் அப்படி சொல்கிறார்' என்று நாராயணன் நினைத்தான். அவன் விஜயாவினிடத்தில் வெகுநாளாய் வேலை செய்கிறவன். பணவிஷயத்தில், விஜயாவினுடைய மனோபாவம் என்ன என்பது அவனுக்கு நன்றாய்த்தெரியும். ஆகையினால் அவன் சற்றுச் சிரித்து, ஓர் அசட்டுப்பார்வையுடன், "என்ன பிரமாத ரூபாய்! முன்னூறு, நானூறு ரூபாயை ஜமீன்தாரணியம்மா ஓட்டுக்குச் சமானமாக மதிக்கிறார்கள்! இதைக் கொண்டுபோங்கள். தங்களுக்கு இஷ்டமானபோது பணத்தைக் கொடுக்கலாம்" என்றான்.

நரேந்திரனுடைய கோபம் இன்னும் தணியவில்லை; "இல்லை, இல்லை; நாராயணா! நீ திருப்பி எடுத்துக்கொண்டு போ; எனக்கு அது அவசியமில்லை. இருநூறு ரூபாய்க்குப் பதிலாக நானூறு ரூபாய் என்றால் கொடுக்கமுடியாது" என்றான்.

"இல்லை, டாக்டர் பாபு; அது முடியாது. நீங்கள் கொண்டுபோகத்தான் வேண்டும்; நான் வண்டியில் வைத்து விட்டுத்தான் போவேன்."

அக்கருவியை நரேந்திரன் கொண்டுபோய்விட்டால், அதில் நாராயணனுக்கும் சிறிது நலமுண்டு. வேலைக்காரர் கள்மீது விலாஸ் 'சிடு சிடு' வென்று விழமாட்டான்! அதனால்தான் மிகக் கனமான அப்பெட்டியை எடுத்துக்கொண்டு இவ்வளவு தூரம் அவன் ஓடிவந்தான். ஆனால் இப்பொழுது நரேந்திரன் கொஞ்சம் தயங்குவதைக் கண்டதும் அவனுக்குப் பயமாய்விட்டது. ஆகையினால் டாக்டர் பாபுவின் சமீபத்தில் சென்று, இரகசியமாய் அவனுடைய காதோடு, "நீங்கள் கொண்டுபோங்கள், டாக்டர் பாபு. ஜமீன்தாரிணி யம்மாளுக்குச் சௌகரியமாகிவிட்டால், ஒருவேளை இதற்குப் பணங்கூடக் கேட்கமாட்டார்கள்!" என்றான்.

இதைக் கேட்டதும் நரேந்திரன் வெகுண்டெழுந்தான். ஆனால் பிளாட்பாரத்தில் ஜனங்கள் ஏராளமா யிருந்ததால், நாராயணன் பிழைத்தான்! நரேந்திரன் தன் கோபத்தை அடக்கிக்கொண்டு, வெளியேபோகும் வழியைக் காண்பித்து, "என் முன்னால் நில்லாதே; போ, வெளியே!" என்றான். இவ்விதம் சொல்லி முகத்தைத் திருப்பிக்கொண்டு அவன் இன்னொரு பக்கம் போய்விட்டான். நாராயணனுக்கு விஷயம் என்னவென்று விளங்கவில்லை.

சுமார் பதினைந்து நிமிஷங்களுக்கு அப்புறம் வண்டி வந்தது. நரேந்திரன் முதல்வகுப்பு வண்டியில் ஏறினான்.

உடனே அவ்வண்டிக்குப் பக்கத்தில் நாராயணன் வந்து, "டாக்டர் பாபு!" என்று கூப்பிட்டான்.

நரேந்திரன், இன்னொரு பக்கம் திரும்பிக்கொண்டிருந்தான். சத்தத்தைக் கேட்டதும் திடீரென்று திரும்பி, நாராயணனுடைய பரிதாபகரமான முகத்தைப் பார்த்தான். பாவம்! வேலைக்காரன்மீது அவ்வளவு கோபித்துக்கொண்டதற்காக, அவனுக்கே சிறிது வருத்தமாயிருந்தது. ஆகையினால் சற்றுப் புன்னகையுடன், "இன்னும் நீ போகவில்லையா?" என்று கேட்டான்.

நாராயணன் ஒரு காகிதத் துண்டையும் பென்சிலையும் எடுத்துக்கொண்டு, "உங்களுடைய விலாசம் கொஞ்சம்...." என்றான்.

நரேந் :—என்னுடைய விலாசத்தை அறிந்து நீ என்ன செய்யப்போகிறாய்?

நாரா :—நான் ஒன்றும் செய்யப் போவதில்லை, ஜமீன்தாரிணியம்மா........?

விஜயாவின் பெயரைக் கேட்டதும், நரேந்திரனுக்கு மீண்டும் கோபம் பொறுக்க முடியவில்லை; "போக்கிரிப் பயலே! நில்லாதே என் முன்னால்" என்று கர்ஜித்தான்.

நாராயணன் திடுக்கிட்டு இரண்டடி பின்னால் சென்றான். அதற்குள் வண்டி ஊறிக்கொண்டு கிளம்பிவிட்டது.

நாராயணன் திரும்பி வந்து அறைக்குள் நுழைந்த பொழுது, கட்டிலின்மீது சாய்ந்து, விஜயா கண்ணைமூடி உட்கார்ந்து கொண்டிருந்தாள். கால் சப்தத்தைக் கேட்டதும், விஜயா கண்களைத் திறந்தாள். உடனே நாராயணன், "நான் கொண்டுபோய்க் கொடுத்தேன், அவர் வாங்கிக் கொள்ளவில்லை" என்றான்.

விஜயாவின் முகத்தில் வேதனையோ அல்லது ஆச்சரியமோ, சிறிதேனும் தோன்றவில்லை. கையிலிருந்த காகிதத்

தையும், பென்சிலையும் மேஜையின் மீது வைத்துவிட்டு, "அப்பா! இந்த மாதிரி கோபத்தை நான் எங்குமே பார்த்த தில்லை! விலாசம் கேட்டேனே இல்லையோ, அடிக்க வந்து விட்டார்" என்றான் நாராயணன்.

இதற்கும் விஜயா ஒன்றும் பதில் சொல்லவில்லை.

விஜயாவிடத்தில் போய் என்ன சொல்வது என்பதை நாரயணன் வழி முழுதும் யோசித்துக்கொண்டே வந் தான். அவன் சொல்வதைக் கேட்பதற்கு விஜயா வெகு ஆத்திரமாயிருப்பாளென்று அவன் நினைத்துக்கொண்டிருந் தான். ஆனால் இப்பொழுது அவளுடைய நடத்தையைக் கண்டதும், நாராயணனுக்கு ஆச்சரியமாக இருந்தது. சிறிது நேரம் மௌனமாக நின்றுகொண்டிருந்து விட்டுக் கடைசியில் மெள்ள நழுவி அறையை விட்டுப் போய் விட்டான்.

## பதினெட்டாம் அத்தியாயம்

## பொறுமைக்கும் எல்லையுண்டு

ஐந்தாறு நாட்களுக்குள்ளேயே, விஜயாவின் வியாதி குணமடைந்து விட்டது; ஆனால் மிகுந்த பலஹீனமாயிருந்தாள். ஆகையினால் விலாஸ் நல்ல டாக்டரைக் கூட்டிவந்து காண்பித்தான். தேக புஷ்டியும், பலமும் கொடுக்கக்கூடிய ஔஷதங்களும் அவளுக்குக் கொடுக்கப்பட்டன. ஆனால் அவளுடைய பலஹீனம் நாளுக்குநாள் அதிகரித்தது.

பங்குனி மாதம் முடிந்துவிட்டது, நடுவில் சித்திரை மாதம் ஒன்றுதான் இருந்தது. வைகாசி மாதத்தின் முதல் வாரத்திலேயே விவாகத்தை முடித்துவிட வேண்டுமென்று ராஸ்விஹாரி நிச்சயித்திருந்தார். விஜயாவோ நாளுக்குநாள் இளைத்துக்கொண்டே சென்றாள். இதைக் கண்டு ராஸ்விஹாரி மிகவும் கவலைப்படலானார். வைத்தியஞ் செய்வதில் ஒரு குறைவும்இல்லை. பின் அவள், நாளுக்குநாள் மெலிவுறுவதன் காரணமென்ன? அப்பூதக் கண்ணாடியின் சமாச்சாரமும் எப்படியோ தந்தைக்கும் மகனுக்கும் எட்டிவிட்டது. அதைக் கேட்டதும் கோபத்தினால் விலாஸ் துடித்துக்கொண்டிருந்தான். ராஸ்விஹாரி அவனைச் சாந்தப்படுத்த முயன்றார். இச்சிறு விஷயங்களையெல்லாம் பிரமாதப்படுத்துவதனால், பிரயோஜனமில்லாமற் போவதோடுகூட, விஜயாவின் தேகநிலைக்கும் அது தீங்கு விளைக்கும் என்று சொன்னார். உலகத்தில் உள்ள ஜனங்கள் எல்லோரையும், விலாஸ் துச்சமாக நினைத்தபோதிலும், தன் பிதாவின் புத்தி நுட்பத்திற்கும் அனுபவ ஞானத்திற்கும் நல்ல மதிப்பு வைத்திருந்

தான். மேலும் விலாஸ் தன் மனத்திற்குள்ளேயே புகைந்து கொண்டிருந்தானே ஒழிய, அதை வெளிப்படையாகக் காட்டுவதற்கு அவனுக்குத் தைரியமில்லை. என்றாலும் அதைச் சகித்துக்கொண்டிருப்பதற்கும் அவனால் முடியவில்லை. ஒருநாள் அதி அற்ப விஷயத்திற்காக நாராயணன் மீது சீறி விழுந்தான். முதலில் அவனை அடிக்கப் போய் விட்டான்; கடைசியில் அவனுடைய சம்பளத்தைத் தீர்த்துக் கொடுத்து, வேலையினின்று விலக்கிவிடும்படி குமாஸ்தாவிற்குக் கட்டளையிட்டான்.

காலையிலும் மாலையிலும் சிறிது உலாவும்படி டாக்டர் விஜயாவுக்குச் சொல்லியிருந்தார். அன்று காலையில் நதிக் கரையில் சிறிது உலாவிவிட்டு விஜயா வீட்டிற்குள் நுழைந்ததும், நாராயணன் கண்ணீரும் கம்பலையுமாய் வந்து, “அம்மா, சின்னபாபு என்னை வேலையினின்றும் விலக்கி விட்டார்” என்று அழுதான்.

விஜயா :—(ஆச்சரியமுற்று) என் !

நாரா :—(அழுதுகொண்டே) பெரிய பாபு (வனமாலி) கூட என்னை ஒரு நாளும் திட்டினதில்லை; ஆனால் இன்று....

இவ்விதம் சொல்லி அவன் விம்மி விம்மி அழவாரம்பித்தான். பின்பு அழுகையை அடக்கிக்கொண்டு, தான் ஒரு குற்றமும் செய்யவில்லையென்றும், பின்னும் சின்ன பாபுவுக்கு ஏனோ தன்னைக் கண்டாலே பிடிக்கவில்லையென்றும் சொன்னான். டாக்டர் பாபுவைக் கூட்டிக்கொண்டு வந்ததும், அவரிடத்தில் பூதக் கண்ணாடியைக் கொண்டு போய்க்கொடுத்த சமாசாரத்தை, சின்ன பாபுவினிடத்தில் சொல்லாததுமே அவன் செய்த குற்றங்கள்; அதற்காகவே அவனை விலக்கிவிட்டதாகவும் சொன்னான்.

விஜயா வெகு நேரம் வரை பேசாமல் இருந்தாள். பின்பு, “அவர் எங்கே இருக்கிறார் ?” என்று கேட்டாள்.

நாரா :—கச்சேரியில் உட்கார்ந்து, காகிதங்களைப் பார்த்துக்கொண்டிருக்கிறார்.

விஜயா :—நீ போய் வேலை செய்.

இவ்விதம் சொல்லி விஜயா எழுந்து உள்ளே போய் விட்டாள். ஒரு மணி நேரத்திற்குப் பின்பு, விலாஸ் கச்சேரியினின்றும் வீட்டிற்குப் போய்விட்டதாக அறிந்தாள். இன்று விலாஸ் தன்னை வந்து ஏன் பார்க்கவில்லையென்பது அவளுக்கு விளங்கிவிட்டது.

தயால் பாபு சுகமடைந்ததும், தினந்தோறும் வந்து தம் வேலையைப் பார்க்கலானார். சாயந்திரம் அவர் வீடு திரும்பும்பொழுது, சிற்சில தினங்களில் விஜயாவும் அவரோடு பேசிக்கொண்டே சிறிது தூரம் சென்று வழியனுப்பி வருவாள்.

நரேந்திரனுக்கும் தயால் பாபுவுக்கும் இடையே நெருங்கிய அன்பு உண்டாகிவிட்டது. வியாதியைப்பற்றிய பேச்சு வந்ததும், அந்நவீன டாக்டரை அவர் மிகுதியாகப் புகழ ஆரம்பித்துவிட்டார். விஜயா பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தாள் ; தன் அபிப்பிராயம் ஒன்றையும் அவள் சொல்லவில்லை. நரேந்திர பாபுவைக் கூப்பிட்டு விஜயாவுக்கு வைத்தியம் செய்யவேண்டும் என்று தயால் பாபுவே வலிய எப்படிக் கூறுவார் ? உள் இரகசியங்கள் அவருக்கு ஒன்றுமெ அதுவரை தெரியாது. ஆனால் அவைகளை அறிவதற்கு வெகுநாட்கள் ஆகவில்லை.

ஐந்தாறு தினங்களுக்குப் பின்பு ஒருநாள் அவர் திடீரென்று விஜயாவின் அறைக்குள் வந்து, “குழந்தாய் ! இனிமேல் நான் நாராயணனை என் வீட்டில் வைத்துக் கொள்ள முடியாது” என்றார்.

விஜயா :—ஏன் ?

தயால் :—உன் வீட்டில் நீயே அவனை வைத்துக்கொள்ள முடியாவிட்டால், நான் எங்ஙனம் அவனை வைத்துக்கொள்ள முடியும்?

விஜயா :—(கோபத்துடன்) அதுவும் என்னுடைய வீடுதானே!

தயால் :—அது உண்மைதான். நாங்கள் எல்லோருமே உன்னைச் சார்ந்துதான் இருக்கிறோம். என்றாலும்............

விஜயா :—நாராயணனை வைத்துக்கொள்ளக் கூடாதென்று, அவர் (விலாஸ்) தங்களிடத்தில் சொன்னாரா?

தயால் பாபு பேசாமல் இருந்தார். விஜயாவுக்கு விஷயம் விளங்கிவிட்டது. "அப்படியானால், நாராயணனை என்னிடத்திலேயே அனுப்பி விடுங்கள். அவன் என் தந்தை காலத்திலிருந்தே எங்கள் வீட்டில் இருக்கிறவன். நான் அவனை வேலையினின்றும் நீக்கமாட்டேன்" என்றாள்.

தயால் :—அது நன்றாயில்லை; மகளே. அவருடைய வார்த்தையின்படி நடப்பது உனது கடமையல்லவா?

விஜயா :—அப்படியானால் என்னை என்ன செய்யச் சொல்கிறீர்கள்?

தயால் :—நீ ஒன்றும் செய்ய வேண்டாம். நாராயணனே, வீட்டிற்குப் போகவேண்டுமென்று விரும்புகிறான். அவனுக்குக் கொஞ்ச நாள் ரஜா கொடு. வீட்டிற்குப் போய்விட்டு வரட்டும்.

விஜயா ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுக்கொண்டே, "நல்லது, அப்படியே ஆகட்டும். ஆனால் போவதற்கு முன்பு, என்னை வந்து பார்த்து விட்டுச் செல்லுமாறு அவனிடம் சொல்லுங்கள்" என்றாள்.

பெருமூச்சின் சப்தத்தைக் கேட்டு வயோதிக ஆச்சாரியர் நிமிர்ந்து பார்த்தார். விஜயாவின் முகம் பார்ப்பதற்குப் பரிதாபகரமாயிருந்தது. அதில் வெறுப்பும் பகையுந் தோன்

றின. இதைக்கண்டு ஆச்சாரியர் திடுக்கிட்டார். அன்றைய தினம் இது சம்பந்தமாய் வேருென்றும் சொல்வதற்கு அவருக்குத் தைரியமில்லை.

இதன்பின் ஐந்தாறு தினங்கள் வரையில் தயால் பாபுவைக் காணவில்லை. கச்சேரியில் விஜயா விசாரித்தபொழுது, அவர் வேலைக்குக்கூட வரவில்லையென்று தெரியவந்தது. அவருடைய வீட்டிற்கு ஆள் அனுப்பி, என்ன விஷயம் என்று அறியலாம் என விஜயா நினைத்துக்கொண்டிருக்கும் பொழுதே, வெளியில் தயால் பாபுவினுடைய இருமல் சத்தம் கேட்டது. விஜயா ஆனந்தத்துடன் எழுந்து நின்று அவரை வரவேற்ருள்.

தயால் பாபுவின் மனைவி எப்பொழுதும் வியாதியாகவே இருக்கிருள். திடீரென்று அவளுடைய வியாதி அதிகரிக்கவே, அவரால் வெளியேற முடியவில்லை. அவரே சமையல் முதலிய வேலைகளையெல்லாம் பார்த்துக்கொள்ள வேண்டியிருந்தது. "இப்பொழுது எப்படியிருக்கிறது?" என்று விஜயா கேட்டாள்.

தயால்:—இன்று கொஞ்சம் பரவாயில்லை. நரேந்திர பாபுவுக்கு நான் கடிதம் எழுதியிருந்தேன். அவர் நேற்று மாலை வந்து, மருந்து கொடுத்துவிட்டுச் சென்ருர். ஒரு நாளைக்குள் முக்கால்வாசி வியாதி தீர்ந்துவிட்டது. எத்தகைய அற்புதமான சிகிச்சை!

விஜயா:—(சிரித்துக்கொண்டு) ஏன் வியாதி தீராது. உங்களுக்கு அவர்மேல் அத்தகைய நம்பிக்கை இருக்கிறது!

தயால்:—நீ சொல்வது உண்மைதான். ஆனுல் ஒருவர் மீது நம்பிக்கை லகுவில் ஏற்பட்டுவிடுமா? அநேக விஷயங்களில் நாம் அவரைப் பரிசை்ஷ செய்து பார்த்திருக்கிருேமல்லவா? வீட்டில் அவர் கால் வைத்தவுடனேயே வியாதியெல்லாம் தீர்ந்துவிடுவதாக எங்களுக்குத் தோன்றுகிறது.

"தீர்ந்து போகத்தான் செய்யும்" என்று சொல்லி விஜயா புன்முறுவல் செய்தாள். இப்பொழுது தயாலும் சிரித்துக்கொண்டு, "அவர் என் மனைவிக்கு மட்டும் மருந்து கொடுத்துவிட்டுச் செல்லவில்லை; இன்னோர் அம்மாளுக்கும் மருந்து எழுதிக் கொடுத்திருக்கிறார்" என்று சொல்லி, ஒரு காகிதத்தை விரித்து மேஜையின்மீது வைத்தார். அதில், மேலே விஜயாவின் பெயர் எழுதியிருந்தது. அதைப் பார்த்ததும், அவ்வெழுத்துக்கள் ஆனந்த மய அம்புகள்போல் விஜயாவின் ஹிருதயத்தில் பதிந்துவிட்டன. நொடிப்பொழுதில் அவளுடைய முகம் சிவந்து பிரகாச மடைந்து, அடுத்த நிமிடத்தில் ஒளியிழந்தது. ஆச்சாரியரின் ஆனந்தத்தில், அவர் இதைக் கவனிக்கவில்லை. "இனிமேல் நீ என்னைத் தட்ட முடியாது. மருந்தை ஒரு முறையாவது பரிக்ஷை செய்து பார்க்கத்தான் வேண்டும்" என்றார் தயால் பாபு.

விஜயா:—அது பெரிய ஆபத்தில் கொண்டுவந்து விடும்.

தயால்:—நன்றாய்ச் சொன்னாய்! ரூபாய் கையில் வந்ததும், நோயாளியைப் பார்த்தோ, பாராமலோ மருந்து எழுதிக்கொடுக்கிறார்களே, அம்மாதிரி டாக்டர் என்று நரேந்திரரை நினைத்துக்கொண்டாயா? அவர் சீமையில் வைத்தியப் பரீட்சை கொடுத்துவிட்டு வந்திருக்கிறார். அவர் நோயாளியைப் பாராமல் ஒன்றுமே செய்யமாட்டார். அவர் தம்முடைய பொறுப்பை நன்கு உணர்ந்தவர். பெரிய டாக்டர்கள் எல்லாம் அம்மாதிரிதான் செய்வார்கள்.

விஜயா:—(ஆச்சரியத்துடன்) என்னைப் பார்த்துத்தான் இப்பொழுது இம்மருந்து எழுதிக்கொடுத்திருக்கிறாரோ! என்னுடைய தேகஸ்திதியைப்பற்றி நீங்கள் சொல்வதைக் கேட்டு, உடனே எழுதிக்கொடுத்துவிட்டார்!

தயால் :—(தலை யசைத்துக்கொண்டு) இல்லை, இல்லை, இல்லை, வேலியைப் பிடித்துக்கொண்டு, நீ நேற்றுத் தோட்டத்தில் நின்றுகொண்டிருந்தபொழுது, அந்த வழியாக உன்னைப் பார்த்துக்கொண்டேதான் அவர் சென்றார். உன்னை அவர் நன்றாய்ப் பார்த்துவிட்டார். அந்தச் சமயம் நீ வேறு எதையோ நினைத்துக் கொண்டிருந்தாய் போலும். ஆகையினால்தான்.........

விஜயா :—(திடுக்கிட்டு) அவர் ஆங்கில உடைதரித்திருந்தாரா ? தலையில் தொப்பி வைத்திருந்தாரா ?

தயால் :—ஆம், அவரைப் பார்த்தால், அவர் அசல் ஆங்கிலேயர் அல்லவென்று யாரால் சொல்ல முடியும் ? நானுங்கூட அவரைப் பார்த்ததும் பிரமித்துவிட்டேன்.

நரேந்திரன் அவள் எதிரிலேயே சென்றான் ; அவளைப் பார்த்துக் கொண்டுதான் சென்றான் ; ஆயினும் அவள் அவனை ஏறிட்டேனும் பார்க்கவில்லை ; யாரோ ஒரு போலீஸ் அதிகாரி என்று, அவனை அவள் வெறுப்புடன் நோக்கினாள். அதற்காக இப்பொழுது விஜயாவின் ஹிருதயம் எத்தகைய வேதனையுற்றது என்பது தயால் பாபுவுக்குக் கொஞ்சமேனும் தெரியாது. அவர் சுபாவமாகவே, “ சித்திரை மாதம் ஒன்றுதான் நடுவில் இருக்கிறது. வைகாசி மாதத்தின் முதல் அல்லது இரண்டாவது வாரத்தில் கலியாணம் நடக்கப்போகிறது. இன்னும் நீ இப்படி இருக்கிறாயே என்று நினைத்து, நான் நரேந்திர பாபுவினிடத்தில், ‘விஜயாவின் சரீரத்தில் கொஞ்சங்கூட பலமில்லை. டாக்டர் பாபு, வெகு சீக்கிரத்தில் பலந்தரக்கூடிய மருந்து ஏதாவது நீங்கள் கொடுத்தால் நலம்’ என்று சொன்னேன்” என்றார்.

இவ்வாறு தயால் பாபு சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே விலாஸ் அறைக்குள் நுழைந்து ஒரு நாற்காலியை

இழுத்து உட்கார்ந்தான். அவனுக்கு முன்னால் நரேந்திரன் மருந்து எழுதிக்கொடுத்த சீட்டுக் கிடந்தது. உடனே அவன் அதை எடுத்து, ஆதியிலிருந்து அந்தம் வரைக்கும் இரண்டு மூன்று முறை படித்துவிட்டு, மீண்டும் அது இருந்த இடத்திலேயே வைத்தான். "இது டாக்டர் நரேந்திரனல்லவா எழுதிக்கொடுத்திருக்கிறான்? இது எவ்விதம் இங்கே வந்தது? நீ சாப்பிட்டுவிட்டாயா என்ன?" என்றான்.

இக்கேள்விக்கு ஒருவரும் பதிலளிக்கவில்லை. விஜயா முகத்தைத் திருப்பிக்கொண்டு, ஜன்னலின் வழியாக வெளியே பார்க்க ஆரம்பித்தாள்.

விலாஸ் அத்தியந்த வெறுப்புடன் சிரித்துக்கொண்டு, "உலகத்தில் நரேந்திரன் ஒருவன்தானா டாக்டர்? இப்பொழுது எனக்கு எல்லாம் விளங்கிவிட்டது! இதனால்தான் மருந்துகளெல்லாம் சீசாவில் அப்படியே இருக்கிறது போலும்! ஓஹோ! அதிருக்கட்டும்; இக்கலியுக தன்வந்திரி இச்சீட்டை இங்கே எப்படி அனுப்பினான் என்று நான் அறிய விரும்புகிறேன். யாராவது அவனைக் கூட்டிவந்தார்களா?" என்றான்.

இதற்கும் ஒருவரும் பதில் சொல்லவில்லை. உடனே விலாஸ், தயால் பாபுவை நோக்கி, "நான் வரும்போது நீங்கள் ஏதோ பிரமாதமாய்ப் பிரசங்கஞ்செய்துகொண்டிருந்தீர்களே! உங்களுக்கு ஏதாவது இவ்விஷயத்தைப் பற்றித் தெரியுமா?" என்று கேட்டான்.

ஜமீன் கச்சேரியில், விலாஸின்கீழ் தயால் பாபு வேலை செய்ய ஆரம்பித்த நாள்முதலாக, அவனைக் கண்டால் புலிக்குச் சமானமாக நினைத்து நடுங்குவார். நாராயணன் மூலமாக அவர் எல்லா விஷயங்களையும் அறிந்திருந்தார். ஆகையினால், விலாஸின் கையில் அச்சீட்டுப் போனதும், அவ

ருடைய ஹிருதயம் துடித்துக்கொண்டிருந்தது. அவருடைய நாவினின்றும் ஒரு வார்த்தைகூட வெளியேறவில்லை.

விலாஸ் க்ஷணநேரம் சும்மா இருந்து மீண்டும் கர்ஜித்தான் :

"இவ்விஷயத்தில் உங்களுக்கு ஏதாவது தெரியுமாவென்று நான் கேட்கிறேன்!"

வேலைபோய்விடுமே என்ற பயம், வயிற்றுப் பிரச்னை - இத்தகைய ஸ்திதியில் ஓர் ஏழையின் முகத்தைக் கண்டால் மிகவும் பரிதாபகரமாக இருக்கும். தயால் பாபு நடுங்கிக் கொண்டு ஈனக்குரலில், "நான்தான் அதைக் கொண்டு வந்தேன்" என்றார்.

விலாஸ் :—ஓஹோ! அப்படியா விஷயம்? அவனை எங்கே பார்த்தீர்?"

தயால் பாபு ஒன்றும் பதில் சொல்லவில்லை.

விலாஸ் :—வரி வசூல் கணக்கை எழுதச் சொன்னேனே, அதை முடித்துவிட்டீரா?

தயால் :—இன்னும் இரண்டு நாட்களில் முடித்துவிடுகிறேன்.

விலாஸ் :—இத்தனை நாளாய் என்ன செய்தீர்?

தயால் :—வீட்டுக்காரிக்கு உடம்பு சௌகரியமில்லை; பெரிய ஆபத்தில் இருந்தாள். நானே சமையல் செய்ய வேண்டி நேர்ந்தது; அவளுக்கு வைத்தியமும் பார்க்க வேண்டியிருந்தது. ஆகையினால் கணக்கு முடியவில்லை.

விலாஸ் :—முடியவில்லை! முடியாவிட்டால் வேலை என் பார்க்கிறீர்? நான் முன்னமேயே அப்பாவிடம் சொல்லிவிட்டேன், இம்மாதிரிக் கிழங்களையெல்லாம் வைத்துக்கொண்டு வேலைபார்க்க முடியாதென்று!

விஜயாவின் கண்களில் தீப்பொறி பறந்தது; "தயால் பாபுவை வேலைக்கு வைத்திருப்பது தங்களுடைய தந்தையல்ல, நான் என்பது ஞாபகமிருக்கட்டும்" என்றாள்.

விலாஸ் திடுக்கிட்டான். இம்மாதிரி விஜயா பேசியதை அவன் ஒரு போதும் கேட்டதில்லை. ஆனால் வணங்கிப் பேசுவது என்பதுதான் அவன் சுபாவத்திலேயே கிடையாதே! "வேலைக்கு வைத்திருப்பது யாராயிருந்தாலுஞ் சரி, அதைப்பற்றி எனக்குக் கவலையில்லை. வேலைதான் எனக்குக் குறி" என்றான்.

விஜயா:—மனைவி நோயாய்க் கிடக்கும்பொழுது, எப்படி வேலை செய்ய வருவார்?

விலாஸ்:—இப்படித்தான் எல்லோரும் சொல்வது வழக்கம். அதையெல்லாம் உண்மையென்று நம்பிக்கொண்டிருந்தால், என் வேலை எப்படி நடக்கும்? நான் ஒரு வேலையை அவசியம் முடிக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறேன்; அதை ஏன் முடிக்கவில்லை யென்பதற்குக் காரணம் வேண்டும். மனைவிக்கு வியாதி என்பது சரியான காரணம் ஆகாது.

விஜயாவின் உதடுகள் துடித்தன. "உலகத்தில் எல்லோரும் பொய்யர்களல்ல; எல்லோரும் பாசாங்குக்காரர்களல்ல; மற்றவர்கள் எப்படியிருந்தாலும், பிரம்ம சமாஜ மந்திருக்கு ஆச்சாரியராயிருக்கும் ஒருவர் அப்படியிருக்க மாட்டார். நல்லது, அது போகட்டும், அவ்வேலை அவ்வளவு அவசரமானதாயிருந்தால், தாங்களே அதை ஏன் செய்திருக்கக்கூடாது? தங்களுக்கு என்ன கஷ்டம் நேர்ந்துவிட்டது?"

விலாஸ்:—அந்த வேலையெல்லாம் நானா செய்கிறது?

விஜயா:—ஏன் செய்யக்கூடாது? நீங்கள் மாதம் இருநூறு ரூபாய் சம்பளம் வாங்குகிறீர்களே; அது

சும்மாவா நான் உங்களுக்குக் கொடுக்கிறேன்? வேலை செய்வதற்காகத்தானே கொடுக்கிறேன்!.

விலாஸ் :—நான் உன் வேலைக்காரனா?

அடக்கமுடியாத கோபத்தினால், என்ன செய்கிறோம், என்ன சொல்கிறோம், என்பதையே விஜயா மறந்துவிட்டாள். "சம்பளம் பெற்று வேலைசெய்யும் ஒருவனை, வேலைக்காரன் என்று சொல்லாமல் வேறென்ன சொல்வது? தாங்கள் இதுவரை செய்துவந்த அடாத செயல்களை நான் சகித்துக்கொண்டிருந்தேன்; ஆனால் அவை மேலும் மேலும் அதிகரித்துக்கொண்டே செல்கின்றன. வேலைக்காரனுக்கும் எஜமானிக்குமுள்ள சம்பந்தத்தைத் தவிர, இனிமேல் உங்களுக்கும் எனக்கும் வேறு எவ்விதமான சம்பந்தமும் இல்லை. இதர வேலைக்காரர்கள் என்ன நிபந்தனைகளுக்கு அடங்கி, வேலை செய்கிறார்களோ, அதே மாதிரி தாங்களும் வேலை செய்வதாயிருந்தால் இங்கே இருக்கலாம்; இல்லையானால் இன்றே உங்களை வேலையினின்றும் நீக்குகிறேன். இனிமேல் என் கச்சேரிக்குள் நுழைய வேண்டாம்" என்றாள்.

விலாஸ் வெகுண்டெழுந்தான். வலதுகைச் சுட்டுவிரலை அவளுக்கு முன்னால் ஆட்டிப் பயமுறுத்திக்கொண்டு, "உனக்கு இவ்வளவு தைரியமா" என்றான்.

விஜயா :—தைரியம் யாருக்கு? எனக்கா, தங்களுக்கா? என்னுடைய ஜமீனில் வேலை பார்த்துக்கொண்டு, என்னை அதிகாரம் செய்வது? என்னை 'நீ' என்று அழைப்பதற்கு உங்களுக்கு யார் அதிகாரங் கொடுத்தது? என்னுடைய வேலைக்காரர்களை என் அனுமதியின்றி நீக்குவதற்கும், என்னுடைய அதிதிகளை என் முன்னாலேயே அவமானம் செய்வதற்கும் உங்களுக்கு எங்கிருந்து தைரியம் வந்தது?

விலாஸ் கோபோன்மத்த மடைந்தான். அவனுடைய குரலினால் வீடு முழுதும் நடுங்கியது: "அதிதி! அன்றே

அவனுடைய கால் கைகளை ஒடியாமல் விட்டது, அவனுடைய முன்னோர்கள் செய்த தவம் என்று நினைக்கவேண்டும். போக்கிரி 'ராஸ்கல்'! இனிமேல் அவனை எங்காவது கண்டால்........"

இச் சத்தத்தைக் கேட்டதும், கோபாலன் பயந்து, கன்னையா சிங்கைக் கூட்டிக்கொண்டு வந்தான். இதைக் கண்டதும் விஜயா மிக்க வெட்கமடைந்து, கூடியமட்டிலும் சாந்தமான குரலில், "நீங்கள்மட்டும் அவரைத் தொட்டிருப்பீர்களானால், உங்கள் கதி என்னவாயிருக்கும் என்பது தங்களுக்குத் தெரியாதுபோலும். அவர், உயர்ந்த கல்வியும் பெருந்தன்மையும் வாய்ந்த டாக்டர்! நீங்கள் அவரை அன்று அடித்திருந்தாலும், வியாதியாய்க் கிடக்கும் ஒரு ஸ்திரீயின் வீட்டில் சண்டை செய்யாது பேசாமல் சகித்துக்கொண்டே போயிருப்பார். இனிமேல் எப்பொழுதாவது நீங்கள் அவரை அடிக்கவேண்டுமென்று நினைத்தால், உங்களுக்கு ஓர் எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். ஒன்று, நீங்கள் அவரைப் பின்னாலிருந்து தாக்கவேண்டும்; இரண்டாவதாக, உங்களைப்போல் இன்னும் ஐந்தாறு பேர்களை உங்களோடு கூட்டிக்கொண்டு போங்கள்........! சீ! உங்கள் வீரப்பேச்சை நிறுத்துங்கள், போதும். வேலைக்காரர்களெல்லாம் மேலே வந்துவிட்டார்கள், வெட்கக்கேடு! நீங்கள் போகலாம்" என்று சொல்லி, அவள் அறையினின்றும் வெளியே சென்றுவிட்டாள்.



## பத்தொன்பதாம் அத்தியாயம்

### கபட நாடகம்

மகனிடமிருந்து எல்லாச் சமாச்சாரங்களையுங் கேட்டவுடன், ராஸ் விஹாரிக்குக் கோபம் பொறுக்க முடியவில்லை. " அடே முட்டாள்! இவ்வளவு படித்தும் உனக்குக் கொஞ்சமேனும் புத்தியில்லை. நீ மாடு மேய்ப்பதற்குத்தான் லாயக்கு; வேறு எந்த வேலைக்கும் நீ பிரயோஜனமில்லை. முதலில் கலியாணம் ஆகிவிடட்டும்; அப்புறம் எக்கேடு கெட்டுப்போனாலும் பரவாயில்லை என்று நினைத்து எவ்விதம் உட்காரவேண்டும், எவ்விதம் எழுந்திருக்கவேண்டும் என்றெல்லாம் உனக்குக் கிளிப்பிள்ளைக்குச் சொல்வதுபோல் சொன்னேனே; அது உன் மூளையில் ஏறவே இல்லையே! நீ அவளை அதிகாரம் பண்ணவேண்டுமென்று நினைக்கிறாய்! அவளோ ஜமீன்தார் குடும்பத்து ஸ்திரீ, ஹரிராயின் பேத்தி! நீயோ முந்தாநாள் வரைக்கும் மாடு மேய்த்துக் கொண்டிருந்தவனுடைய மகன்! அவள்மீது உன் அதிகாரம் செல்லுமா? முட்டாள்! ,மானம் மரியாதை போய், ஒரு ஜமீன் போய், மாதம் இருநூறு ரூபாய் கிடைத்துக்கொண்டிருந்த சம்பளமும் போய்விட்டது. இனிமேல் ஏரை ஓட்டிக்கொண்டு, வயலுக்குப் போய், உழு; போ. மடையா, கண்களைச் சிவக்க வைத்துக்கொண்டு என்னிடத்தில் அவளைப்பற்றிக் குறை கூற வந்துவிட்டான்! என் முகத்தில் விழிக்காதே; எங்கேனும் தொலை!"

விஜயாவோடு சண்டை போட்டுக்கொள்ளாமல் இருப்பதுதான் தனக்கு நலம் என்பது விலாஸுக்கும் தெரியும்.

அதனுடன் தந்தையின் கோபாவேசத்தையுங் கண்டபின்பு, அவனுடைய ஆட்டபாட்டமெல்லாம் அடங்கிவிட்டன. ராஸ்விஹாரி எழுந்து வெகுவேகமாய்த் தம் அறைக்குள் சென்றுவிட்டார். கோபமிகுதியினால் மகனிடத்தில் என்ன சொன்னபோதிலும், காரியத்தில் மட்டும் எப்பொழுதும் புத்திசாலித்தனமாகவே அவர் நடந்துகொள்வார். கோபத்தினாலோ, சோம்பேறித்தனத்தினாலோ, ஒருகாலும் தம் காரியத்தைக் கெடுத்துக்கொள்ள மாட்டார். ஆகையினால், விஜயாவின் கோபாக்கினி சாந்தியடைவதற்குச் சிறிது நேரங் கொடுத்து,மறுநாளே அவள் வீட்டிற்குப் போய்ச்சேர்ந்தார். உள்ளே நுழைந்து, ஒரு நாற்காலியை இழுத்து அதில் உட்கார்ந்துகொண்டார்.

விஜயாவின் கோபமும் கொஞ்சங் கொஞ்சமாய் அடங்கிவிட்டது. தான் நடந்துகொண்ட விதத்திற்காக அவளே பின்பு பச்சாத்தாபப்பட ஆரம்பித்தாள். வீட்டு வேலைக்காரர்களையெல்லாம் வைத்துக்கொண்டு அவள் இம் மாதிரி கத்தி நாடகம் நடித்த விஷயம், கிராமம் முழுவதும் வீடு வீடாய்ப் பரவியிருக்கும். தெருக்களிலும், பாதைகளிலும், மனிதர்கள் இதைப்பற்றியே பேசுவார்கள்; பெண்கள், ஆற்றிலும் குளத்திலும் குளிக்கும்போது இதைப்பற்றியே வம்பளப்பார்கள். இம்மாதிரியெல்லாம் நினைத்து, விஜயா தன் அறையினின்றும் வெளியேறுவதற்குக்கூட வெட்கப்பட்டாள். இன்று எவனை வேலைக்காரன் என்று சொல்லி அவமானப்படுத்துவதற்கு அவள் கொஞ்சமும் பின்வாங்கவில்லையோ, அவனையே இன்னும் இரண்டொரு வாரங்களுக்குப் பின்பு கணவனாக வரிக்கவேண்டியிருக்குமே, அப்பொழுது கிராமத்தார் என்ன நினைப்பார்கள் என்று எண்ணும்போது உயிரை மாய்த்துக்கொள்ளலாமா என்று கூட அவளுக்குத் தோன்றும்.

ஆகையினுல் ராஸ்விஹாரி மெள்ள அறையில் நுழைந்து சந்தோஷத்துடன் தாமே ஒரு நாற்காலியை இழுத்து அதன்மீது உட்கார்ந்தபொழுது, விஜயாவுக்கு அவரை ஏறிட்டுப் பார்க்கவும் தைரியமில்லை. ஆனுல் அவரை அவள் ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். அவர் இன்ன இன்ன மாதிரி பேசுவார், நாம் இன்ன இன்ன மாதிரி பதில் சொல்லவேண்டும் என்றுகூட யோசித்து வைத்திருந்தாள். ஆனுல் அவள் நினைத்ததற்கு நேர்விரோதமாக ராஸ்விஹாரி பேச ஆரம்பித்தபொழுது விஜயா ஆச்சரியமுற்றுள். அவர் க்ஷண நேரம் பேசாமலிருந்து நீண்டதொரு பெருமூச்சு விட்டு, "விஜயா, நேற்று நடந்ததை நான் கேள்விப்பட்டதும், எத்தகைய ஆனந்தமடைந்தேன் தெரியுமா? மகளே. அதை உன்னிடத்தில் தெரிவிப்பதற்கு நேற்றே ஓடி வந்திருப்பேன்; ஆனுல் அந்தப் பாழும் வயிற்று வலியினுல், கட்டிலை விட்டு எழுந்திருக்கவே முடியவில்லை. நீ தீர்க்காயுளாய் இருக்கவேண்டும், மகளே; இதுதான் என் பிரார்த்தனை" என்று சொல்லி மீண்டும் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டுச் சொல்லவாரம்பித்தார்.

"சுகத்திலும், துக்கத்திலும், நன்மையிலும், தீமையிலும், என்னைத் தர்ம வழியிலேயே நடத்த வேண்டுமென்று, நான் சர்வ சக்திமானுகிய கடவுளிடத்தில் தினந்தோறும் பிரார்த்தனை செய்கிறேன்." இவ்விதம் சொல்லி அவர் தம் இரண்டு கைகளையுங் கூப்பித் தலையின்மீது வைத்துக்கொண்டு, கண்களை மூடி அந்தச் சர்வ சக்திமானுகிய கடவுளையே வணங்குபவர்போல் சிறிது நேரம் இருந்தார்.

பின்பு கண்களைத் திறந்துகொண்டு சொல்லலுற்றுர்: "என்னைப்போன்ற கபடமற்ற வெள்ளைப் பேர் வழியின் புத்திரனுய்ப் பிறந்தும், எங்ஙனம் விலாஸ் இவ்வளவு காரியக்

காரப் பயலாய்விட்டான் என்பதுதான் எனக்கு விளங் கவே இல்லை. லௌகிக காரியங்களில் கொஞ்சமேனும் அனுபவமில்லாதவனும், எது நன்மை, எது தீமை என்று உணரச் சக்தியற்றவனுமாகிய எனக்குப் பிறந்தவன், இவ்வ ளவு சிறு வயதில், எங்ஙனம் இத்தகைய கெட்டிக்காரனா ஞன்? ஈசுவரனுடைய திருவிளையாடல்களையும், அவர் சிருஷ்டித்த இவ்வுலகத்தின் இரகசியங்களையும் அறிவது வெகு கடினம், மகளே!" இவ்விதம் சொல்லி மீண்டும் ஒருமுறை கண்களை மூடித் தியானத்தில் ஆழ்ந்தார்.

விஜயா பேசாமல் உட்கார்ந்திருந்தாள். ராஸ்விஹாரி மீண்டும் பேச ஆரம்பித்தார். "ஆனால் எதுவும் அளவுக்கு மிஞ்சிவிடக்கூடாது. விலாஸிற்கு வேலைதான் குறி என் பதை நான் அறிவேன். வேலையின் முன்னால் அவன் எதையுமே பொருட்படுத்துவதில்லை. ஆனால் அதன் காரண மாகப் பெரியோர்களை யெல்லாம் மரியாதை யில்லா மல் நடத்தலாமா? தயால் பாபுவைப் போன்றவர்கள் ஏதாவது குற்றம் செய்துவிட்டால், மன்னிக்கத்தான் வேண்டும். குற்றவாளிகளில் பணக்காரனென்றும், ஏழை யென்றும், பெரியவனென்றும் சிறியவனென்றும் வித்தியா சம் பாராட்டக்கூடாது என்பது உண்மைதான். ஆனால் எந்த விஷயத்திலும் அக்ஷரந்தவறாமல், சட்டப்படி நடப்பது முடியாத காரியம். வேலை செய்யாததும் குற்றந்தான்; ரஜா எடுக்காமல் வீட்டில் இருந்துகொண்டதும் பிசகு தான். ஆபீஸ் நியமங்களை மீறுவது, வருந்தத் தக்கதே யாகும். என்றாலும், தயால் பாபு முதியவர்; அவரிடத்தில் இவ்வளவு கண்டிப்பாய் வேலை வாங்குவது உசிதமல்ல. மகளே, நாங்களெல்லாம் கிழவர்க ளாகிவிட்டோம். எங் களுக்கு முன்னிருந்த பலமுமில்லை, சுறுசுறுப்புமில்லை. கடமை, கடமையென்று மற்றவர்கள் எவ்வளவு போற்றி

ணுலுஞ்சரி, எவ்வளவு கொண்டாடினுலுஞ்சரி ; எங்களுக்கு என்னவோ, கடமையையே பெரிதாகக் கருதும் விலாஸைப்போன்ற மனிதர்களைக் கண்டாலே பிடிப்பதில்லை. என்னுடைய மகனென்றால் ஒரு பேச்சு, மற்றவர்களென்றால் ஒரு பேச்சா, மகளே ? ஒருகாலும் இல்லை. வேலையில் இரண்டுநாள் தாமதமானாலும் பரவாயில்லை, பத்துரூபாய் நஷ்டமானாலும் பரவாயில்லை! அதற்காக விருத்தர்களையும், பலஹீனர்களையும் துன்பப்படுத்தக் கூடாதென்பதே என் கொள்கை. உன்னுடைய ஜமீனுக்கு ஒரு கெடுதியும் நேர்ந்து விடக் கூடாது என்பதற்காகவே விலாஸ் இம்மாதிரி எல்லாம் செய்கிறான் என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆகையினால் நான் சொல்வதைத் தப்பர்த்தம் செய்துகொள்ளாதே; மகளே, தற்சமயம் நான் இவ்வுலகத்தில் பற்றற்று இருந்தாலும், சொத்துச் சுகங்களைப் பாதுகாப்பது கிருஹஸ்தர்களுடைய கடமை என்பதை நானும் ஏற்றுக்கொள்கிறேன். அவைகளை விருத்தி செய்வது மிகவும் போற்றத்தக்கதேயாகும். ஏனென்றால் செல்வமில்லாமல், தனக்கோ, அல்லது உலகத்துக்கோ எவ்வித நன்மையுஞ் செய்யமுடியாது. விலாஸினுடைய மேற்பார்வையில், உங்கள் இருவருடைய ஜமீன்களும் இருமடங்கு, மும்மடங்கு,பதின்மடங்கு விருத்தியடைந்தது என்று நான் கேள்விப்பட்டாலும், சிறிதும் ஆச்சரியப்படமாட்டேன். ஆனால் செல்வவிருத்தியில் சிறிது தடை அல்லது ஹானி ஏற்பட்டவுடன் தைரியத்தை இழந்து விடுவதும் நலமாகாது. ஆகையினால் நீ அவனுக்குக் கொடுத்த தண்டனையினால், இனிமேலாவது அவன் திருந்திக்கொள்ளவேண்டுமென்று நான் ஈசுவரனைப் பிரார்த்திக்கிறேன். வேலை! வேலை! உலகத்தில் நாம் கேவலம் யந்திரத்தைப்போல் வேலை செய்வதற்கு மட்டுமா வந்தோம் ? தயை, நற்குணம், பெருந்தன்மை இவையெல்லாம்

மனிதனுக்கு வேண்டாமா? இவ்வுண்மைகளை அவன் உணரு மாறு நீயே அவனைத் தண்டித்தது நலமேயாகும்!"

விஜயா ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. ராஸ்விஹாரி தமக்குள் ஏதோ யோசிப்பவர்போல் வெகுநேரம் வரைக் கும் இருந்துவிட்டுப் பின்பு தலை நிமிர்ந்தார். சற்று நகைத்து மெல்லிய குரலில் சொல்லலுற்றார்: "எனது இரண்டு குழந் தைகளில், ஒன்று வேலையையே பெரிதாக மதிக்கிறது; இன் னொன்று அன்பு, தயை முதலியவைகளையே பிரதானமாகக் கொள்கிறது. ஒன்றுக்கு வேலைப்பைத்தியம், இன்னொன் றுக்கு அன்புப் பைத்தியம்! நேற்றிருந்து எனக்கு இதே யோசனைதான். பகவான் இவ்விருவரையும் ஒன்று சேர்த் துத் தம் திருவிளையாடல்களைப் புரியும்போது, பூலோகம் ஸ்வர்க்க மயமாகிவிடும்! அவ்வானந்தக் காட்சியை நான் ஒரு நாளாவது பார்த்துவிட்டுச் செல்லும் பாக்கியம் எனக் கிருக்க வேண்டுமென்றே நான் இறைவனைப் பிரார்த்திக் கிறேன்."

இவ்விதம் சொல்லி அவர் இத்தடவை மேஜை யின் மீது தலையைவைத்து வணங்கினார். பின்பு தலையை மேலே தூக்கி, "இதில் இன்னொரு ஆச்சரியம்! விலாஸுக் கும் தான தர்மங்களில் சிரத்தை கொஞ்சமல்ல. மந்திரம் ஸ்தாபிப்பதற்காக அவன் எத்தகைய முயற்சி செய்தான்! எவ்வளவு கஷ்டப்பட்டான்! உலகத்தில் பிரம்மசமாஜத்தையே விலாஸ் தன் வாழ்க்கையின் லக்ஷ்யமாகக் கொண்டிருக்கி றான்; அதை விட்டால் அவனுக்கு வேறு ஒன்றுமே தெரி யாது, என்று அவனை நன்கு அறியாதவர்கள் நினைப்பார்கள்! பேஷ்! என் மூடத்தனத்தைப் பார், மகளே! விலாஸினு டைய சுபாவங்களையும், குணங்களையும் உனக்கு நான் சொல்ல வருகிறேன்! அவைகள் உனக்குத் தெரியாவா, என்ன! (சிறிது சிரித்து) என்னுடைய சந்தோஷத்திற்

கெல்லாம் காரணமென்ன தெரியுமா, மகளே? சிவனில் பாதி உமை! நாலுவிதமான புருஷார்த்தங்களையும் அடைய, நீ அவனுககு உதவியா யிருக்கிறாய்! அவனுடைய க்ஷேம மெல்லாம் உனது கையில் இருக்கிறது! சக்தி அவனுடை யது; புத்தி உன்னுடையது. அவன் சுமையைச் சுமந்து கொண்டு வருவான்; நீ வழிகாட்டவேண்டும். அப் பொழுதுதான் உங்களிருவருடைய வாழ்க்கையும் உல கத்திற்குப் பயன்படும். மகளே! இதை நினைத்து நினைத் துத்தான் நான் மனம் பூரிக்கிறேன். வாழ்க்கையின் மார்க்கத்தில் இனிமேல் விலாஸுக்கு ஒரு பயமுமில்லை என்பதை நான் இன்று பிரத்தியக்ஷமாகப் பார்க்கி றேன். அவனுடைய எதிர்கால வாழ்க்கையைப் பற்றி இனிமேல் எனக்குக் கொஞ்சமேனுங் கவலையில்லை; மகளே, இத்தனை யுக்தியும்,புத்தியும், யோசனையும், நீ இதுவரை எங்கே மறைத்து வைத்திருந்தாய்? எனக்கு வெகு ஆச்சரியமாக விருக்கிறது!" என்றார்.

இவற்றையெல்லாம் கேட்டுக் கொண்டிருப்பது விஜயா வுக்கு மிகவும் கஷ்டமாயிருந்தது. ஆயினும் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். சுவரின் மீதுள்ள கடிகாரத்தைப் பார்த்ததும், ராஸ்விஹாரி திடுக்கிட்டவர்போல் எழுந்தார். "பத்துமணி ஆகப் போகிறதே! தயால்பாபுவின் மனைவி யைப் பார்க்கச் செல்லவேண்டும்" என்றார்.

விஜயா :—அந்த அம்மாள் இப்பொழுது எப்படியிருக் கிறார்கள்?

"இப்பொழுது பரவாயில்லை" என்று சொல்லிவிட்டு ராஸ்விஹாரி வாசலை நோக்கி இரண்டோர் அடி எடுத்து வைத்தார். பின்பு திடீரென்று திரும்பி, "ஆனால் நான் என்ன சொல்லவேண்டுமென்று வந்தேனோ, அதை இன் னும் சொல்லவில்லை" என்று கூறி ராஸ்விஹாரி திரும்பி

வந்து நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு மெல்லிய குர லில் ஆரம்பித்தார்; "உன்னிடத்தில் நான் ஒன்று கேட்டுக் கொள்கிறேன். அவ்விதம் நீ செய்வாயா?" என்றார்.

விஜயா பீதியடைந்தாள். அவளுடைய மனோ நிலையை நொடிப்பொழுதில் அறிந்துகொண்டு, "அது முடியாது மகளே, கிழவனுடைய வேண்டுகோளைக் கேட்கத்தான் வேண்டும். கேட்பாயா? சொல்" என்றார் ராஸ்விஹாரி.

விஜயா மிகுந்த மெல்லிய குரலில், "சொல்லுங்கள்" என்றாள்.

ராஸ் :—அவன் நேற்று முழுதும் உண்ணவுமில்லை, உறங்கவுமில்லை. கண்ணீர் விட்டுக் கதறுகிறான். ஆயினும், இந்த விஷயத்தில் நீ கொஞ்சம் கடுமையாகவே இருக்க வேண்டும். நேற்றுத்தான் துக்கத்தினால் வரவில்லை. ஆனால் இனிமேல் அவனால் வராமலிருக்க முடியாது. இன்று அவன் கட்டாயம் வருவான். உன்னிடத்தில் அவன் மன்னிப்புக் கேட்டவுடன், நீ மனமிரங்கி விடுவாய்! அதுதான் கூடாது என்கிறேன், நான். நீ விதித்த தண்டனையைக் குறைந்த பக்ஷம் இன்னும் இரண்டொரு நாளாவது அவன் அனுப விக்க வேண்டும்.

இவ்விதம் சொல்லி விஜயாவின் முகத்தில் ஆச்சரியக் குறிகளைக் கண்டு, ராஸ் விஹாரி சிறிது சிரித்து, மீண்டும் சொல்லலுற்றார்: "இது உனக்கு எவ்வளவு கஷ்டமாயிருக் கிறது என்பது எனக்கென்ன தெரியாததா? உன்னுடைய சுபாவத்தை நான் நன்கு அறிவேன். இது உனக்குக் கொஞ் சம் கஷ்டமாய்த்தான்இருக்கும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் முழுத்தண்டனையையும் அனுபவிக்காவிட்டால் பிரா யச்சித்தம் ஏது? அவன் செய்த குற்றம் எப்படி நீங்கும்? இம்மாதிரி கொடூரமாக உன்னால் நடந்துகொள்ள முடியா விட்டால், இன்று அவனைப் பார்க்கமுடியாது என்று

சொல்லி விடு. வருத்தத்துடன் திரும்பிப் போகட்டும். இது தான் என்னுடைய வேண்டுகோள், விஜயா.

ராஸ் விஹாரி சென்ற பின்பு, விஜயா உண்மையிலேயே ஆச்சரியமுற்றுச் சிறிது நேரம் வரை பேசாமல் உட்கார்ந்திருந்தாள். அவர் இம்மாதிரி பேசுவாரென்று விஜயா கனவிலும் நினைக்கவில்லை. அவர் தம் மகனைத் தாங்கிப் பேசுவார், அந்த சமயத்தில் தான் கடின சித்தத்துடன் இருக்க வேண்டும், கொஞ்சமேனும் விட்டுக் கொடுக்கக் கூடாது என்று விஜயா நினைத்துக் கொண்டிருந்தாள். மேலும் விலாஸ் விஹாரி தகப்பனுடன் வந்து முன்போலவே மிகுந்த கோபாவேசத்துடன் பேசுவான் என்பதை நினைத்துப் பார்த்த பொழுதெல்லாம், அவளுடைய மனது மிகவும் சஞ்சலமுற்றது.

ஆனால் இப்பொழுது ராஸ் விஹாரி அறையினின்றும் வெளியே சென்றபொழுது, அவளுடைய ஹிருதயத்தினின்றும் ஒரு பெரிய பாரம் நீங்கியது போலிருந்தது. ஒரு சமயம் இம்மனிதர்மீது அவள் அளவு கடந்த நம்பிக்கை வைத்திருந்தாள். ஆனால் அந்நம்பிக்கை ஏன் சிறிது சிறிதாக அகன்றுவிட்டது என்பதை நினைக்க, அவளுடைய மனம் மிகுந்த வேதனையுற்றது. அவருடைய நோக்கங்களை நன்கு அறிந்துகொள்ளாமல் அவரைப்பற்றி வித்தியாசமாக நினைத்தது தவறு என்று நினைக்கவாரம்பித்தாள். பரலோகத்திலிருக்கும் அவளுடைய பிதா, தம் ஆப்த நண்பரைப்பற்றி தம்முடைய மகள் இவ்வளவு கேவலமாக நினைத்தாளே என்று வருந்துவாரோ என்றுகூட அவள் சிந்திக்கலானாள். "நான் எண்ணியது தவறே. இதோ பார், அவர் தம்முடைய மகன் செய்த குற்றத்தைக்கூட மன்னிக்கவில்லை. அவனை நான் லகுவில் மன்னித்துவிடக்கூடாது என்று

போகும்போது வேண்டிக்கொண்டு செல்கிறார்!" என்று அவள் அடிக்கடி தனக்குள் சொல்லிக்கொள்வாள்.

மேலும் ராஸ்விஹாரியின் பேச்சுக்களிலெல்லாம் மற்றொரு விஷயமும் ஸ்பஷ்டமாக விளங்கியது. அதுதான் விலாஸுக்கு விஜயாவின்மீதுள்ள அத்தியந்த காதல். அக்காதல் மிகுதியினால் ஏற்பட்டதே அவனுடைய பொறாமை!

ராஸ்விஹாரி சென்றபின் அவருடைய வார்த்தைகள் வெகுநேரம் வரை அவள் காதுகளில் ஒலித்துக்கொண்டே இருந்தன. அவள் அப்படியே ஜன்னலுக்கு வெளியே பார்த்துக்கொண்டு ஸ்தம்பித்து உட்கார்ந்து விட்டாள். பொறாமை மிகவும் வெறுக்கத்தக்கது என்பது உண்மைதான். ஆனால் அவ்வெறுக்கத்தக்க பொறாமையே இன்று விலாஸின் குற்றங்கள் பலவற்றை விஜயாவின் திருஷ்டியில் குணங்களாக மாற்றின. ராஸ் விஹாரியையும் விலாஸ் விஹாரியையும் தன் நன்மையை நாடுகிறவர்களாக விஜயா மீண்டும் மதிக்கலானாள்.

“ அம்மா, அப்படியானால், நான் இப்பொழுது வீட்டிற்கு வரமுடியாதென்று எழுதிவிடட்டுமா ?" என்று நாராயணன் வந்து கேட்டான்.

விஜயா :—சரி........

நாராயணன் போய்விட்டான். விஜயா அவனை மீண்டும் கூப்பிட்டு மிகுந்த நாணத்துடன், “ வேண்டாம், நாராயணா, நீ தான் வருவதாக அவர்களுக்குக் கடிதம் எழுதிவிட்டாயே ! ஆகையினால் நீ போய், ஒரு மாதம் அல்லது இரண்டு மாதம் இருந்துவிட்டு வாயேன்? அவர் (விலாஸ்) சொல்லையும் தட்டாதது போலிருக்கும், நீயும் ஒரு முறை வீட்டுக்குப் போய்ப் பார்த்துவிட்டு வந்தது போலிருக்கும். நீ வெகுநாளாய் ஊருக்கே போகவில்லை யல்லவா ? நான் சொல்வதென்ன, நாராயணா ?" என்றாள்.

நாராயணன் மிகுந்த ஆச்சரியமுற்ருன். "நல்லது அம்மா, நீங்கள் சொன்னுல்சரி; நான் போய்ப் பத்து இருபது நாள் இருந்துவிட்டு வருகிறேன்" என்ருன்.

நாராயணன் சென்ற பின்பு, விஜயா தன் கோழைத் தனத்திற்காக மிகுந்த வெட்கமுற்ருள். ஆனல் அவனைக் கூப்பிட்டுப் போகவேண்டாம் என்று சொல்வதற்கும் அவளுக்குத் தைரியமில்லை.

# இருபதாம் அத்தியாயம்

## நரேந்திரனது பைத்தியம்

விஜயாவின் வீட்டின் ஓரத்திலுள்ள ஜமீன்கச்சேரிக்கு முன்னால் ஒரு வேப்பமரம் இருக்கிறது. அவ்வேப்பமரத்தின் அடர்த்தியின் காரணத்தினால், மாடி வராந்தாவிலிருந்து பார்த்தால், கச்சேரியில் நடக்கும் விஷயம் எதுவுமே தெரியாது. யார் எப்பொழுது வந்தார்கள், எப்பொழுது போனார்கள் என்பதுகூட அறியமுடியாது.

மேற்கூறிய சம்பவம் நடந்த தினத்திலிருந்து, தயாள் பாபு விஜயாவின் வீட்டிற்கு வருவதில்லை. அவர் கச்சேரிக்காவது வருகிறாரா இல்லையா என்று கேட்பதற்கு அவளுக்குச் சங்கோசமாக இருந்ததனால், அவள் அதையும் அறிந்து கொள்ளவில்லை. விலாஸனும் அவளுடைய வீட்டிற்கு வருவதை நிறுத்திவிட்டான். ராஸ்விஹாரி மட்டும் ஒரு நாள் வந்து நாலைந்து நிமிஷம் பேசிக்கொண்டிருந்தார். 'உடம்பு எப்படி இருக்கிறது?' என்று மட்டும் கேட்டுவிட்டுப் போய்விட்டார்.

மனித ஹிருதயத்தின் உள் அந்தரங்கங்களை அறிவது மிகக்கஷ்டம். ராஸ் விஹாரி பாபு அன்று பக்ஷபாதமில்லாது தம்முடைய மகனுக்கு விரோதமாகப் பேசிவிட்டுப்போனதிலிருந்து, விஜயாவின் மனத்தில் ஒருவிதக் குழப்பமே குடிகொண்டது. அவளுக்கு மனோதிருப்தியும் மனவமைதியும் இல்லை. இவ்விதம் அநேக நாட்கள் கழிந்தன.

ஒரு நாள் மாலை விஜயா நதிக்கரையில் சற்று உலாவிவிட்டு வருவதற்காகச் சென்றாள். அச்சமயம் ஒரு

குமாஸ்தா ஓடி வந்து, "அம்மா, தாங்கள் எங்கேனும் வெளியே செல்கிறீர்களா? கன்னையாசிங் எங்கே?" என்று கேட்டார்.

விஜயா :—கொஞ்ச தூரந்தான், இதோ நதிக்கரையில் உலாவிவிட்டு வரலாமென்று போகிறேன். ஒருவரும் கூட வரவேண்டிய அவசியமில்லை. - ஏன் ஏதாவது ஜோலி யிருக்கிறதா?

குமாஸ்தா :—கொஞ்சம் ஜோலியிருக்கிறது. அதை நாளைக்கு வேண்டுமானால் பார்த்துக்கொள்ளலாம். தாங்கள் தான் புறப்பட்டு விட்டீர்களே என்று சொல்லிக் குமாஸ்தா திரும்பிச் செல்ல ஆரம்பித்தார்.

விஜயா :—சிறு வேலையாயிருந்தால், இப்பொழுதே பார்த்துவிடுகிறேன். சொல்லுங்கள், என்ன வேலை? இக் காகிதம், தஸ்தாவேஜிகளை யெல்லாம் யாரிடத்தில் கொண்டு வந்தீர்கள்?

குமாஸ்தா :—தங்களிடத்தில்தான் கொண்டுவந்தேன். சென்ற வருஷக் கணக்கெல்லாம் தயாராயிருக்கிறது. இதைப் பரிசோதித்துப் பார்த்துத் தாங்கள் கையெழுத்திட வேண்டும். இந்த வருஷத்திலிருந்து தினசரிக்கணக்கிலும் உங்கள் கையெழுத்தே வாங்கவேண்டுமென்று சின்ன பாபு உத்தரவிட்டிருக்கிறார்.

விஜயா மிக்க ஆச்சரியத்துடன், "அப்படியா!" என்று சொல்லித் திரும்பி வந்து வெளிமுற்றத்தில் உட்கார்ந் தாள். குமஸ்தா அக்கணக்குகளை யெல்லாம் ஒரு மேஜையின் மீது வைத்து, அவைகளில் ஒன்றை எடுத்துத் திறக்கப் போகையில், "சின்னபாபு என்றைக்கு இவ்வுத்தரவிட்டார்?" என்று விஜயா கேட்டாள்.

குமாஸ்தா :—இன்று காலை.

விஜயா :—இன்று காலை அவர் வந்தாரா?

குமாஸ்தா :—அவர்தான் தினந்தோறும் வருகிறாரே.

விஜயா :—இப்பொழுது கச்சேரியில் இருக்கிறாரா?

குமாஸ்தா :—இல்லை, என்னை இங்கே அனுப்பிவிட்டு, அவர் இப்பொழுதுதான் வீட்டுக்குப் போனார்.

விலாஸுக்கும் விஜயாவுக்கும் நடந்த பேச்சு வார்த்தைகள் வேலைக்காரர்கள் எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. விஜயா கேட்ட கேள்வியின் உட்கருத்தை உணர்ந்துகொண்டு குமாஸ்தா அநேக விஷயங்கள் சொன்னார். விலாஸ் விஹாரி தினந்தோறும் பதினொரு மணிக்குக் கச்சேரிக்கு வந்துவிடுகிறார்; ஒருவரோடும் அதிகமாய்ப் பேசுவதில்லை; தம்முடைய வேலையை ஒழுங்காகச் செய்துவிட்டு, ஐந்து மணிக்கு வீடு சென்றுவிடுகிறார்; தயால் பாபுவின் மனைவி குணமடைகிறவரை அவர் ஆபீசுக்கு வரவேண்டிய அவசியமில்லை என்று அவருக்கு ரஜா கொடுத்துவிட்டார். இம்மாதிரி அநேக விஷயங்களைக் குமாஸ்தா தம் எஜமானிக்குச் சொன்னார்.

விஜயா தலைகுனிந்துகொண்டு பேசாமல் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டிருந்தாள். விலாஸ் அவளோடு கோபித்துக்கொண்டுதான் இத்தகைய புது நியமங்களை ஏற்படுத்தியிருக்கிறார் என்று விஜயாவுக்கு விளங்கிவிட்டது. என்றாலும், "இதுவரை யாரிடத்தில் கையெழுத்து வாங்கிக் காரியங்களை நடத்திக்கொண்டு வந்தீர்களோ, அதேமாதிரி இப்பொழுதும் செய்யுங்கள்" என்று சொல்ல அவளுக்கு மனமில்லை. "இந்தக் கணக்குகளையெல்லாம் இங்கேயே வைத்துவிடுங்கள்; நாளைக்கு வந்து கையெழுத்து வாங்கிக் கொண்டு போங்கள்" என்றாள்.

இவ்விதம் சொல்லிக் குமாஸ்தாவுக்கு விடைகொடுத்து அனுப்பிவிட்டு, கொஞ்சநேரம் பேசாமல் உட்கார்ந்திருந்தாள். வெளியில் சூரியவெளிச்சம் சிறிது சிறிதாகக்

குறைந்துகொண்டே வந்தது. அடுத்த வீடு அண்டை வீடு களில் சாயங்கால பூஜையின் மணியோசையும் சங்கநாதமும் கேட்க ஆரம்பித்தன. இன்னும் விஜயா எழுந்திருந்த பாடில்லை. அவள் எவ்வளவு நேரம் அவ்விதம் இருந்திருப் பாளோ தெரியாது. ஆனால் அச்சமயம் விளக்கு ஏற்றிக் கொண்டு அங்கு வைப்பதற்காக வந்த வேலைக்காரன், எஜ மானி இம்மாதிரி இருளில் உட்கார்ந்திருப்பதைக் கண்டதும் திடுக்கிட்டு நின்றான். உடனே விஜயா நாணமுற்று எழுந்தி ருந்தாள். வெளியில் வந்ததும் அவள் கண்ட காட்சி அவளைப் பிரமிக்கச் செய்தது. தான் இனி அவனைப் பார்க்கமுடியு மென்று அவள் கனவிலும் நினைக்கவில்லை. எக்காரணத்தை முன்னிட்டாவது இனி அவன் இவ்வீட்டில் கால்வைப்பானா? அச்சமயம் எங்கும் கனமான இருள் சூழ்ந்திருந்தது. ஆயினும் அவளை நோக்கி வந்துகொண்டிருந்த ஆறரை அடி உயரமுள்ள ஆங்கில உடைதரித்த உருவம், டாக்டர் பாபுதான் என்பதை அவள் அறிந்துகொண்டாள்.

இன்று விஜயா அவனை யாரோ ஒரு போலீஸ் உத்தி யோகஸ்தன் என்று நினைத்து ஏமாறவில்லை. மின்னற்கொடி போல் ஓர் ஆனந்தரேகை அவள் மனத்தில் தோன்றி மறைந் தது. அதன்பின் அவள் உள்ளத்தில் பயம் என்னும் அந்த காரம் குடிகொண்டது. மரஞ் செடிகொடிகள் நிறைந்த பாதையில், இடையிடையே அவனுடைய உருவம் அடிக்கடி மறையும்; ஆனால் அவனுடைய கால் ஜோடுகளின் சப்தம் விஜயாவை நோக்கிக் கொஞ்சம் கொஞ்சமாய் அவன் சமீபித்துக்கொண்டிருப்பதை அறிவித்தது. 'அவரை உப சரித்து உள்ளே அழைத்துக்கொண்டுபோய் உட்காரவைக்க லாமா? அது தவறல்லவா? ஆனால் வாசலுக்கு வெளியிலே நிற்கவைத்துப் பேசி அனுப்பிவிடுவதும் மரியாதை யாகாது' என்று நினைத்தாள்.

இத்தர்ம சங்கடத்தினின்றும் தப்புவதற்கு, அவளுக்கு ஒரு வழியும் புலப்படவில்லை. இதற்குள் நரேந்திரன் வெகு சமீபத்தில் வந்துவிட்டான். அதைக் கண்டதும் அவள் தன்னறைக்கு வேகமாய்ச் சென்றுவிட்டாள். வேலைக்காரக் கிழவன் ஒன்றையும் கவனியாமல் தன் வேலையைப் பார்த்துக்கொண்டிருந்தான். திடீரென்று ஒரு துரையின் உருவத்தை முன்னால் கண்டதும், அவன் பயந்துவிட்டான். ஆனால் நரேந்திரன் கேட்ட கேள்வியிலிருந்து, அவன் வெள்ளைக்காரத் துரையல்ல, டாக்டர் பாபுதான் என்பது அவனுக்குத் தெரிந்துவிட்டது. உடனே நரேந்திரன் கேட்ட கேள்விக்கு, "வெளி முற்றத்தில் இருக்கிறார்கள்" என்று பதிலளித்தான். நரேந்திரனுடைய கேள்வியையும், அதற்கு வேலைக்காரன் சொன்ன பதிலையும் விஜயா கேட்டுக்கொண்டிருந்தாள். இரண்டு மூன்று விநாடிகளுக்குள், முற்றத்திற்குள் பிரவேசித்து, நரேந்திரன் அஞ்சலி செய்தான். தொப்பியையும், கைத்தடியையும் மேஜையின்மீது வைத்துவிட்டுச் சிரித்துக்கொண்டே, "என்னுடைய மருந்து நல்ல பலன் அளித்திருக்கிறதுபோல் தோன்றுகிறதே, பேஷ்!" என்றான்.

இன்று நரேந்திரனை ஏறிட்டுக்கூடப் பார்க்கமுடியாது, அவனுடைய கேள்விகளுக்கு ஒரு வார்த்தைகூடப் பதில் சொல்லமுடியாது என்று க்ஷணநேரத்திற்கு முன்பு விஜயா தன் மனத்தில் நினைத்துக்கொண்டிருந்தாள். ஆனால் ஆச்சரியம் என்னவென்றால், அவனுடைய குரல் காதில் விழுந்ததோ இல்லையோ, அவளுடைய பயமும், பலஹீனமும் எங்கோ பறந்துவிட்டன. அவளுடைய இதய வீணையைக் கண்ணுக்குத் தெரியாத ஒரு விரல் மீட்டியதுபோலிருந்தது. க்ஷணப் பொழுதில் தன் கவலைகளையெல்லாம் மறந்துவிட்டு, "அதெப்படி உங்களுக்குத் தெரியும்?" என்று கேட்டாள்.

நரேந் :—என்னுடைய மருந்தைச் சாப்பிடவேண்டிய அவசியங்கூட இல்லை; கேவலம் ஒருதரம் சீட்டைப் பார்த்தவுடன் அதைக் கிழித்து எறிந்துவிட்டாலே பாதி வியாதி தீர்ந்துவிடுகிறதென்று நீங்கள் தயால் பாபுவினிடத்தில் சொல்லவில்லையா ?

இவ்விதம் சொல்லி, நரேந்திரன் சிரித்த சிரிப்பில் அறை முழுவதும் எதிரொலித்தது.

தயால் பாபுவிடம் எல்லா விஷயங்களையும் கேட்டுக் கொண்டுதான் நரேந்திரன் வந்திருக்கிறான் என்பது விஜயாவுக்கு விளங்கிவிட்டது. "ஓஹோ! அதனால்தான் பாக்கியிருக்கும் பாதி வியாதியையும் தீர்ப்பதற்கு மருந்து எழுதிக்கொடுக்கலாமென்று வந்தீர்களோ ?" என்றாள்.

இதைக் கேட்டதும் நரேந்திரனுடைய சிரிப்பு நின்றுவிட்டது. "நான் சும்மா தமாஷாகச் சொன்னேன்" என்றான்.

"இதெல்லாம் உங்களுக்குத் தமாஷாகத் தோன்றுகிறது போலும்!"

நரேந்திரனுடைய முகம் திடீரென்று மாறியது. "இல்லை, எள்ளளவேனுமில்லை. ஆம், முதன் முதல் அதைக் கேட்டதும் எனக்குச் சிறிது சந்தோஷமாய்த்தானிருந்தது. ஆனால் அடுத்த நிமிஷமே நான் அளவிலாத் துக்கமடைந்தேன். விலாஸ் பாபுவினுடைய நடத்தை அவ்வளவு நன்றாயில்லை யென்பது உண்மை; அவர் காரணமில்லாமல் மற்றவர்களை அவமானப்படுத்திக் கொண்டிருக்கிறார். ஆனால் அதற்காக நீங்களும் பொறுமை யிழந்து, அவரை மரியாதையில்லாமல் பேசுவது சரியல்ல. நீங்களே நன்றாய் யோசித்துப் பாருங்கள்; இத்தகைய சம்பவம் தங்கள் எதிர்கால வாழ்க்கையின் இன்பத்திற்கு எவ்வளவு இடையூறு விளைக்கத்தக்கதாயிருக்கும்! இதைக் கேட்டதும், எனக்கு உண்மையி

லேயே மிகுந்த வருத்தமுண்டாக்கியது. என்னல் உங்களுக்குள் மனஸ்தாபம் உண்டாயிற்று என்பதையறிய........"

இம்மனிதருடைய உள்ளப் பரிசுத்தத்தைக் கண்டு விஜயா புளகாங்கித மடைந்தாள். ஆயினும் அதை வெளியில் காட்டாமல் பரிகாசக் குரலில், "சிரிப்பை மட்டும் இன்னும் தங்களால் அடக்க முடியவில்லையே" என்று சொல்லித் தானும் சிரித்தாள்.

நரேந்திரன் அதி கம்பீர பாவத்துடன், "நீங்கள் ஏன் மீண்டும் மீண்டும் அதையே சொல்லுகிறீர்கள்? நான் சொல்லுவதை நம்புங்கள். எனக்கு உண்மையிலேயே மிகுந்த வருத்தமாயிருந்தது. உங்களிருவருக்குமுள்ள சம்பந்தத்தைப்பற்றி, அச்சமயம் எனக்கு ஒன்றும் தெரியாது. (சிறிது தயக்கத்துடன்) அன்றைத்தினம் நான் கீழே போனதும், ராஸ் விஹாரி பாபு எல்லா விஷயங்களையும் சொல்லி, பொறுமையினுல் ஏற்படும் பலன் இத்தனையும் என்று சொன்னர். தயால்பாபுவும் நேற்று அப்படித்தான் கூறினர். இவற்றையெல்லாம் கேட்டதும் நான் மிகுந்த வெட்கமடைந்தேன். ஆனல் எல்லா மனிதர்களையும் விட்டுவிட்டு, விலாஸ் விஹாரி என்மீது மட்டும் பொறுமை கொள்வதற்கு என்ன காரணம் இருக்கிறது என்பது எனக்கு விளங்கவில்லை. நீங்களெல்லாம் பிரம்ம சமாஜிகள். பிரம்ம சமாஜ ஸ்திரீகள், அவசியம் நேர்ந்தால், எல்லாரோடும் பேசுகிறார்கள். அதுபோல் நீங்களும் என்னோடு பேசுகிறீர்கள், பழகுகிறீர்கள். இதில் விலாஸ் பாபு என்ன குற்றத்தைக் கண்டுபிடித்துவிட்டார்? எனக்கு ஒன்றும் தெரியவில்லையே! நல்லது, நான் ஏதாவது தவறு செய்திருந்தால், தயைசெய்து மன்னித்துவிடுங்கள். நீங்கள் இருவரும் சந்தோஷமாகவும் க்ஷேமமாகவும் இருக்கவேண்டும் என்று வாழ்த்திவிட்டுப்

போவதற்காகவே நான் இப்பொழுது வந்தேன்" என்று சொன்னான்.

நரேந்திரனுடைய கடைசி வார்த்தைகளைக் கேட்டதும், விஜயாவினுடைய கண்களில் ஏனோ கண்ணீர் ததும்பியது. உடனே அவள் தன் முகத்தை ஒருபுறம் திருப்பி, மிகவும் கஷ்டத்துடன் கண்ணீரை அடக்கினாள்.

"அன்று நாராயணன் வசம் அப்பூதக் கண்ணாடியை ஏன் அனுப்பினீர்கள்?" என்று நரேந்திரன் வினவினான்.

"நீங்கள்தானே அது வேண்டுமென்று கேட்டீர்கள்?"

நரேந் :—அது சரிதான்; ஆனால் அதன் விலையைப் பற்றித் தாங்கள் அவனிடம் ஒன்றும் சொல்லியனுப்ப வில்லையே!

விஜயா :—இல்லை. ஜுரத்தினால் அச்சமயம் எனக்கு உணர்வே இல்லை; ஆகையினால் மறந்துவிட்டேன், அம்மறதிக்குத் தாங்களும் லகுவான தண்டனை விதிக்கவில்லையே!

நரேந் :—ஆனால், நாராயணன் என்ன சொன்னான் என்றால் -

விஜயா :—(நடுவே குறுக்கிட்டு) அதெல்லாம் நான் விசாரித்துக்கொண்டேன். அவன் ஆயிரம் சொல்லுவான். அதை எல்லாம் நீங்கள் நம்பலாமா? உண்மையிலேயே நான் தங்கள் சுயமரியாதைக்குப் பங்கம் விளைத்திருந்தாலும், நீங்களே என்னைத் தண்டித்திருக்கக் கூடாதா? வேலைக்காரன் மூலமாக என்னை ஏன் அவமானம் செய்தீர்கள்? தங்களுக்கு நான் அப்படி என்ன பெரும் அபராதம் இழைத்துவிட்டேன்?

இவ்விதம் சொல்லும்பொழுதே விஜயாவின் கண்களில் கண்ணீர் ததும்பியது. நரேந்திரன் மிகுந்த வெட்கத்துடனும், ஆச்சரியத்துடனும் விஜயாவின் முகத்தை நோக்கினான். அவள் உடனே முகத்தை ஒருபுறம் திரும்பிக்

கொண்டாள். ஆகையினால் அவளுடைய முகம் அவனுக்குத் தெரியவில்லை. அவள் கழுத்தில் அணிந்திருந்த முத்துமாலையின் ஒரு சிறு பாகம் மட்டுந் தெரிந்தது. விளக்கு வெளிச்சம் அதன்மீது படுவதினால், வெகு அற்புதமாக அது பிரகாசித்துக்கொண்டிருந்தது. சிறிது நேரம்வரை இருவரும் பேசாமலிருந்தார்கள்.

அதன்பின் நரேந்திரன் துக்கம் நிறைந்த குரலில், "நான் செய்வது சரியல்ல என்று அப்பொழுதே நினைத்தேன்; ஆனால் அதற்குள் ரயில் புறப்பட்டுவிட்டது. நாராயணன் என்ன செய்வான், பாவம்! அவனைக் கோபித்துக்கொண்டது சரியல்ல; (சிறிது நேரம் பேசாமலிருந்து) பொறாமை எவ்வளவு தீயது என்பது இப்பொழுதுதான் எனக்கு விளங்குகிறது. இப்பொறாமை ஒருவனிடத்தில் வளர்ந்துகொண்டு போவதோடில்லாமல், தொத்து வியாதியைப்போல் மற்றவர்களையும் அது பிடிக்கிறது. வித்தியாசமாக ஏதோ நினைத்துக்கொண்டு விலாஸ் பாபு என்மீது பொறாமைப்படுகிறார். அவருடைய பிதாவுங்கூட அதற்காக மிகுந்த வெட்கமும் துக்கமும் அடைந்தார். ஆனால் நான் செய்வதும் பெருந்தவறுதான் என்பதைக் கேட்டு நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்" என்றான்.

விஜயா :—நீங்கள் என்ன தவறு இழைத்துவிட்டீர்கள்?

நரேந் :—காரணமில்லாமல் விலாஸ் பாபு என்னை அவதூறாக நடத்துகிறாரே என்று நீங்கள் அவர்மீது கோபித்துக்கொண்டீர்கள். நானும் அச்சமயம் அப்படித்தான் நினைத்தேன். ஆனால், நான் கீழே சென்றதும், ராஸ் விஹாரிபாபு வந்து, விஷயங்கள் எல்லாவற்றையும் சொன்ன பொழுதுதான், அவருடைய பொறாமையின் காரணம் எனக்கு விளங்கியது. காரணமில்லாமல் யாருமே ஒருவர்மீது பொறா

மைப்பட மாட்டார்கள். தங்களிடத்தில் உண்மையைச் சொல்லுகிறேன். சென்ற 10, 12 நாட்களாக இருபத்து நான்கு மணி நேரமும் உங்களைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தேன். நான் எவ்வளவுமுயன்றும் உங்களுடைய உருவத்தை என் மனத்தினின்றும் அகற்றவே முடியவில்லை. ஆகையினால்தான் அது பயங்கரமான தொத்துவியாதி என்று சொல்லுகிறேன்! வேலை வெட்டியைப்பற்றிய கவலையே இல்லை; இரவும் பகலும் உங்களைப்பற்றிய எண்ணந்தான்! இதன் காரணமென்ன? நீங்களே சொல்லுங்கள். இது மட்டுமா? உங்களைப் பார்ப்பதற்காக இரண்டு மூன்று நாட்களாய்ப் பித்துப்பிடித்தவன்போல் இந்தப் பாதையில் வந்து போய்க் கொண்டிருந்தேன்! இந்தப் பைத்தியம் எனக்கு எப்பொழுது பிடித்ததோ, தெரியவில்லை!

இவ்விதம் சொல்லி நரேந்திரன் சிரிக்க ஆரம்பித்தான். விஜயா முகத்தைத் திருப்பவும்இல்லை; நரேந்திரனைப் பார்க்கவும் இல்லை; அவனுடைய வார்த்தைகளுக்குப் பதில் சொல்லவும் இல்லை. அவள் பேசாமல் எழுந்து, உள்ளே போய்விட்டாள். அதைக் கண்டதும் அவனுடைய சிரிப்பெல்லாம் ஒரு நொடியில் மறைந்துவிட்டது. அவ்விருளில் அவள் சென்ற திசையையே கண்ணிமையாமல் பார்த்துக்கொண்டு, 'நாம் இன்னொரு புதிய குற்றமல்லவா இழைத்துவிட்டோம்!' என்று நினைக்கலானான். ஆகையினால் வேலைக்காரன் வந்து, "தாங்கள் போகவேண்டாம், தங்களுக்காகத் தேநீர் தயாராகிறது" என்று சொன்னபொழுது, நரேந்திரன் மிகுந்த துக்கத்துடன், "எனக்குத் தேநீர் வேண்டிய அவசியமில்லை" என்றான்.

"ஆனால் ஜமீன்தாரிணியம்மா தங்களை உட்கார்ந்திருக்கச் சொல்லுகிறார்கள்" என்று சொல்லிவிட்டு வேலைக்காரன்

போய்விட்டான். இதைக் கேட்டதும் நரேந்திரனுடைய ஆச்சரியத்திற்கு அளவில்லை.

சுமார் ஐந்து நிமிஷங்களுக்குப் பின், போஜனம் பரிமாறிய தாலத்தைக் கையில் எடுத்துக்கொண்டு விஜயா அறைக்குள் பிரவேசித்தாள். தேநீர் தயாரிப்பதற்கு வேண்டிய கோப்பை, தேயிலை, சர்க்கரை வகையராக்களுடன், வேலைக்காரனும் அவளுக்குப் பின்னால் வந்தான். அவளுடைய முகத்தைப் பார்த்தால், அழுதுகொண்டிருந்துவிட்டு வந்தவள்போல் தோன்றியது. அம்மங்கலான வெளிச்சத்திலுங்கூட, அவளுடைய கன்னத்தில் ஓடிய கண்ணீர் அடையாளம் தெளிவாய்த் தெரிந்தது. அதைக் கண்டதும் அவன் மிகுந்த துக்கமும் ஆச்சரியமும் அடைந்தான். ஆனால் அதை வெளிக்காட்டவில்லை. அவளோடு இவ்வளவு நெருங்கிய பழக்கமில்லாதபோது ஒரு நாள், அவனுடைய உள்ளத்தில் எழுந்த ஒருவிதமான குதூகலத்தையும் இச்சையையும் அடக்கமுடியாமல், விஜயாவின் முகவாய்க் கட்டையைப் பிடித்து உயரத் தூக்கினானே, அந்தக் காலமல்ல இது. ஆகையினால் அவன் பேசாமல் இருந்தான்.

மேஜையின்மீது சாமான்களை வைத்துவிட்டு வேலைக்காரன் போய்விட்டான். விஜயாவும் அதன் பக்கத்தில் தாலத்தை வைத்துத் தான் ஒரு நாற்காலியில் உட்கார்ந்தாள். உடனே நரேந்திரன் தாலத்தைத் தன் பக்கம் இழுத்துப் போஜனம் செய்ய ஆரம்பித்தான்.

ஐந்தாறு நிமிடங்கள் மௌனமாயிருந்ததன் பின், விஜயாவே முதலில் பேச ஆரம்பித்தாள்; "உங்களுடைய பைத்தியத்தைப் பற்றிய பேச்சை அப்படியே நிறுத்திவிட்டீர்களே!" என்று சொல்லிச் சிரித்தாள்.

நரேந்திரன் வேறு ஏதோ யோசித்துக்கொண்டிருந்தான் போலும். ஆகையினால் திடீரென்று தலை நிமிர்ந்து, " யாருக்குப் பைத்தியம்?" என்றான்.

" உங்களுக்குத்தான் சில தினங்களாகப் பைத்தியம் பிடித்திருப்பதாகச் சொன்னீர்களே; அது தெளிந்து விட்டதா, இல்லையா?"

நரேந் :—(சிரித்துக்கொண்டு) தெளிந்துவிட்டது.

விஜயா :—(புன்னகையுடன்) நல்ல வேளை! உயிர் பிழைத்தீர்கள்; இல்லையானால் அது உங்களை என்ன பாடு படுத்தியிருக்குமோ, தெரியாது!

விஜயா இன்னும் ஏதோ சொல்ல விரும்பினாள். ஆனால் என்ன சொல்வதென்று தெரியாமல், தொண்டை வரை வந்த ஒரு பெருமூச்சை அடக்கிக்கொண்டு பேசாமல் இருந்தாள்.

கொஞ்சநேரம் அறையில் நிசப்தமாயிருந்தது. நரேந்திரன் தேநீர்க் கோப்பையைக் காலி செய்துவிட்டு, அதை மேஜையின்மீது வைத்தான்; பின்பு தன் கடிகாரத்தை எடுத்து மணி பார்த்துக்கொண்டு, " இன்னும் பத்து நிமிஷ நேரந்தான் இருக்கிறது. நான் செல்கிறேன்" என்றான்.

" கல்கத்தா செல்வதற்கு இதுதான் கடைசி வண்டியா?"

நரேந்திரன் எழுந்து தொப்பியைத் தலையின்மீது வைத்துக்கொண்டு, " இல்லை, இன்னொரு வண்டிகூட இருக்கிறது. ஆனால் அது ஒன்றரை மணி நேரத்திற்கு அப்புறம் வரும். நான் சென்று வருகிறேன், நமஸ்காரம்" என்று சொல்லித் தடியை எடுத்துக்கொண்டு வேகமாகப் போய் விட்டான்.

# இருபத்தோராம் அத்தியாயம்

## விருந்தும் விலங்கும்

விலாஸ் சரியான நேரத்தில் கச்சேரி வருவதும், தன் வேலையைப் பார்த்துவிட்டு வீடு செல்வதுமாய் இருந்தான். அவசியம் ஏற்பட்டால் யாராவது ஓர் ஆளை யனுப்பி விஜயாவின் அபிப்பிராயத்தை அறிந்து கொள்வான்; ஆனால் தானே வருவதில்லை. கூப்பிட்டால் ஒழிய அவன் இனிமேல் ஒருபோதும் வரமாட்டான் என்று விஜயா அறிந்து கொண்டாள். இப்பொழுது விஜயாவுக்கு அவன் மீதிருந்த கோபமும் தணிந்துவிட்டது. இம்மாதிரி இருக்கையில், ஒரு நாள் மாலை திடீரென்று கச்சேரி சிப்பாய் ஒருவன் வந்து விலாஸ்பாபு அவளைப் பார்க்க விரும்புவதாகச் சொன்னான்.

அச்சமயம் விஜயா கடிதம் எழுதிக்கொண்டிருந்தாள். தலையைக்கூட நிமிராமல், "வரச் சொல்" என்று சொன்னாள். விலாஸ் வந்ததும் அவள் எழுந்து நின்று அஞ்சலி செய்து, "வாருங்கள்" என்றாள்.

விலாஸ் நாற்காலியில் உட்கார்ந்தான்; "வேலை அதிகமாயிருந்ததால், நான் இங்கே வருவதற்கு முடியவில்லை. தங்களுடைய உடம்பு நன்றாயிருக்கிறதல்லவா?" என்று கேட்டான்.

விஜயா :—ஆம்.

விலாஸ் :—அந்த மருந்தைத்தானே சாப்பிட்டு வருகிறீர்கள்?

விஜயா இக்கேள்விக்குப் பதில் சொல்லவில்லை. விலாஸும் அதை மீண்டும் வற்புறுத்தாமல் வேறு பேச்செடுத்தான். "நாளை வருஷப்பிறப்பு. கணக்குகளையெல்லாம் அடுக்கி வைத்து நாளைக்குச் சிறிது நேரம் ஈசுவர பஜனை செய்யலாம் என்று நினைக்கிறேன்" என்றான்.

முதலில் கேட்ட கேள்வியை விலாஸ் மீண்டும் கேட்கவில்லை. அதற்கு அவள் பதில் சொல்லவில்லையே என்பதைப் பொருட்படுத்தவும் இல்லை. இதைக்கண்டதும் விஜயா மிக்க சந்தோஷம் அடைந்தாள். அவளுடைய ஹிருதயத்தினின்றும் ஒரு பெரும் பாரம் நீங்கியது போலிருந்தது. "அப்படியே செய்யலாம்" என்று களிப்புடன் கூறினாள்.

விலாஸ் :—ஆனால், அநேக காரணங்களின் நிமித்தம் மந்திரத்துக்கு இப்பொழுது போகமுடியாது. நீங்கள் சம்மதிப்பீர்களாகில் இவ்வீட்டிலேயே......................

விஜயா :—ரொம்ப சரி. இலை, குலை, பூ முதலியவைகளினால் வீட்டைக் கொஞ்சம் அலங்கரித்துவிட்டால் மிக நலமாயிருக்கும். உங்கள் வீட்டுத் தோட்டத்தில்தான் நிறையப் புஷ்பங்கள் இருக்கின்றனவே; வாழையும் அதிகமாயிருக்கிறது. நாளைக் காலையிலேயே எல்லாம் அனுப்புமாறு தோட்டக்காரனுக்குக் கட்டளை யிட்டுவிட்டால், யாவும் சரியாகிவிடும்; நான் சொல்வது என்ன?

விலாஸ்:—சரி, எல்லா ஏற்பாடுகளையும் நானே செய்துவிடுகிறேன்.

விஜயா : பஜனையோடு ஏதாவது ஒரு விருந்தும் ஏற்பாடு பண்ணினால்.............

விலாஸும் இதற்கு ஒப்புக்கொண்டு பிரார்த்தனைக்குப் பிறகு ஒரு விருந்து ஏற்பாடு செய்யுமாறு குமாஸ்தாவிடத்தில் சொல்வதாகக் கூறினான். இது மாதிரி இன்னும் சில சாதாரண விஷயங்களைப் பேசிமுடித்துக்கொண்டு விலாஸ்

போய்விட்டான். அநேக தினங்களுக்கப்புறம், இன்று விஜயா சந்தோஷமாகவும் உல்லாசமாகவும் இருந்தாள். ஆனால் விலாஸ் முன்னைவிட இப்பொழுது அதிகமாக மெலிந்தும் பலஹீனமாயும் இருப்பதைக் கண்டு வருந்தினாள். அவனுடைய சுபாவமே இப்பொழுது மாறியிருப்பதைக் கண்டதும், திடீரென்று அவள் தன்னையும் அறியாமல் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டு ராஸ்விஹாரிஅன்றுசொன்ன விஷயங்களை மௌனமாக மனத்தில் சிந்தித்துப் பார்க்கலானாள்.

விலாஸ் விஹாரி தன்னுடைய பூர்ண ஹிருதயத்தினாலும் அவளைக் காதலிக்கிறான் என்கிற விஷயம், சொல்லாலும், குறிப்பாலும், எல்லா விதங்களினாலும் அவளுக்கு நன்கு விளக்கப்பட்டது; ஆயினும் ஒரு நாளேனும் அல்லது ஒரு நாழிகையேனும், அவளுடைய அந்தக்கரணத்தில் அக்காதல் இடம் பெறவில்லை. சாயந்திர வேளையில், கனத்த இருளின் மத்தியில், அவள் தனியே உட்கார்ந்திருக்கும் பொழுதெல்லாம், அவளுடைய கற்பனை மார்க்கத்தின் வழியாக, அடிமேல் அடி வைத்து, மெள்ள மெள்ள அவள் பக்கத்தில் வந்து உட்காருகிறவன் விலாஸ் அல்ல; வேறோர் ஆடவனே ஆகும். சோம்பல் அதிகரிக்கும் மத்தியான்ன வேளையில், புத்தகம் வாசிப்பதிலோ, தையல் தைப்பதிலோ மனஞ் செல்லாத பொழுது, அவள் இலேசாகக் கண்ணயர்கிறாள்; அந்தச் சமயம் அவளுடைய மனத்தில் மெள்ள மெள்ள வரையப்படும் ஒரு கற்பனைச் சித்திரத்தில் விலாஸுக்குக் கொஞ்சமேனும் இடம் கிடைப்பதில்லை. ஆனால், யார் அவளுடைய உள்ளம் முழுவதையும் கொள்ளைகொள்கிறானோ, அவனால், உலக யாத்திரையின் கரடுமுரடான பாதையில் அவளுக்கு எவ்விதமான உதவியும் செய்யமுடியாது என்பதையும் அவளறிவாள்.

விலாஸ் சென்ற பிறகு, விஜயா அவன் செய்த குற்றத்தைப்பற்றிப் புனராலோசனை செய்ய ஆரம்பித்தாள். வெளிக்கு விலாஸினுடைய சுபாவம் எப்படித் தோன்று கிறதோ, அப்படி அது உண்மையில் இல்லை யென்றும், வாஸ்தவத்தில் அவன் அவ்வளவு ஈனசுபாவம் வாய்ந்தவனல்லவென்றும் நினைத்தாள். பொறாமை என்னும் மனோ வியாதியினால் பீடிக்கப்பட்டவர்கள், உலகத்தில் அநேகமாய் விலாஸைப் போலவேதான் நடந்துகொள்வார்கள். விலாஸ் அவளைக் காதலிக்கிறான்; ஆகையினால்தான் அவன் இவ்வளவு கேவலமாக நடந்துகொள்கிறான் என்று நினைத்த பொழுது, அவளால் அவனை மன்னியாமல் இருக்கமுடியவில்லை.

அதிகாலையிலேயே வேலைக்காரர்களுடன் விலாஸ் வந்து வீட்டை அலங்கரிக்கும் வேலையில் மும்முரமாயிருக்கிறான் என்று விஜயா காலையில் எழுந்ததும் கேள்விப்பட்டாள். அவசர அவசரமாக முகத்தைக் கழுவிக்கொண்டு கீழே இறங்கிச் சென்று, "என்னை ஏன் தாங்கள் கூப்பிடவில்லை?" என்று கேட்டாள்.

விலாஸ் :—வீணில் ஏன் தொந்தரவு செய்யவேண்டு மென்று நினைத்தேன்.

விஜயா :—(புன்னகையுடன்) இந்தச் சாதாரண வேலையில்கூட என்னால் உதவி செய்யமுடியாதா? அப்படி என்ன நான் ஒன்றுக்கும் உதவாதவளா? எனக்கு நீங்கள் ஏதாவது வேலை கொடுக்கத்தான் வேண்டும்.

வெகுநாட்களுக்கு அப்புறம், இன்று விலாஸின் முகத்தில் உவகை தோன்றியது. "வேலையில் நாங்கள் ஏதாவது தவறு செய்யாமல், நீங்கள் மேற்பார்த்துக்கொண்டிருக்கலாம்" என்றான்.

"நல்லது" என்று சொல்லி விஜயா சிரித்துக் கொண்டே ஒரு நாற்காலியிற் போய் உட்கார்ந்தாள். சிறிது நேரத்திற்குப் பின்பு, "விருந்தைப்பற்றிய ஏற்பாடு எம்மட்டில் இருக்கிறது?" என்று கேட்டாள்.

விலாஸ்:— எல்லாம் நடந்துகொண்டிருக்கிறது. அதைப்பற்றித் தங்களுக்குக் கவலை வேண்டாம்.

விஜயா:—நான் அங்கே சென்று அதைக் கொஞ்சம் பார்த்துவிட்டு வருகிறேனே.

"நல்லது" என்று சொல்லிவிட்டு விலாஸ் தன் வேலையைக் கவனிக்கலானான்.

எட்டு மணிக்குள் எல்லாம் தயாராகிவிட்டது. இதற்கிடையில் முந்திய தினத்தைப்போல் அநேக காரியங்களில் விஜயா, விலாஸின் அபிப்பிராயத்தைக் கேட்பதும், அவனுடைய உதவியை நாடுவதுமாயிருந்தாள். சங்கோசம் என்பதன் நாமதேயங்கூட இல்லை. அவர்களிருவருக்கும் இருந்த மனஸ்தாபம் எப்பொழுது மறைந்தது? அவர்களுடைய சம்பாஷணையில் இத்தகைய சகஜபாவம் எப்படி உண்டாகியது என்பதுகூட அவர்களுக்குத் தெரியவில்லை.

"என்னை உபயோகமற்றவள் என்று நினைத்து என்னை நீங்கள் தள்ளிவைத்தீர்கள்; ஆனால் உங்களுடைய வேலையில் ஒரு குற்றத்தைக் காட்டி, நான் உண்மையில் உபயோகமற்றவள் அல்ல என்பதை ஸ்தாபிக்கிறேன் பாருங்கள்" என்று விஜயா சிரித்துக்கொண்டே சொன்னாள்.

விலாஸ்:—நான் உங்களை உபயோகமற்றவர் என்று ஒருபோதும் நினைக்கவில்லையே; ஆனால் அக்குற்றம் என்ன? சொல்லுங்களேன்.

விஜயா:—இந்த விருந்திற்கு வரக்கூடியவர்கள் நாம் பத்துப் பன்னிரண்டு பேர்களே இருக்கிறோம்; ஆனால் சமையல் சாமான்களைப் பார்த்தால் இருபது இருபத்தைந்து

பேர்களுக்குப் போதும்போல் இருக்கிறதே! அது குற்ற மல்லவா?

விலாஸ் :—நீங்கள் நினைப்பது தவறு. அப்பா தம் இஷ்ட மித்திரர் சிலரை அழைத்திருக்கிறார். எத்தனை பேர், யார், யார் என்பது எனக்கு நன்றாய்த் தெரியவில்லை.

விஜயா :—(ஆச்சரியத்துடன்) ஆனால் என்னிடத்தில் அவர் ஒன்றும் சொல்லவில்லையே!

விலாஸ் :—உங்களிடத்தில் சொல்லியிருப்பார் என்று நினைத்தேன்.

விஜயா :—இல்லையே!

விலாஸ் :—கடிதமூலம் உங்களுக்குத் தெரிவிப்பதாகச் சொன்னாரே. பின்னால் மறந்துவிட்டார் போலும்!

விஜயா வேறொன்றும் கேட்கவில்லை; ஆனால் அவளுடைய மனத்திலிருந்த குதூகலம் இப்பொழுது மறைந்து விட்டது.

அரைமணி நேரத்திற்குப்பின் ராஸ்விஹாரி அங்கே வந்துசேர்ந்தார். ஒன்பது மணி சுமாருக்கு அவர் அழைத்திருந்த நண்பர்களும் ஒவ்வொருவராய் வர ஆரம்பித்தார்கள். அவர்கள் அனைவரும் பிரம்மசமாஜிகள் அல்ல; எல்லா விதமான கொள்கைக்காரர்களும் அதில் இருந்தார்கள். ஆனால் அவர்கள் யாவரும், அந்தக் கிராமம் அல்லது சுற்றுப் புறமுள்ள கிராமங்களைச் சேர்ந்தவர்கள். ராஸ்விஹாரியினுடைய அழைப்பை மீறமுடியாமல், அவர்கள் வந்தவர்களென்று தோற்றியது.

ராஸ்விஹாரி எல்லோரையும் மிக்க மரியாதையுடன் உபசரித்தார். சிறுபிராயம் முதல், விஜயா கல்கத்தாவிலேயே வசித்து வந்தவள்; ஆகையினால் அவர்களில் அநேகருடன் அவளுக்குப் பரிச்சயங் கிடையாது. ராஸ்விஹாரி அவர்களை விஜயாவுக்குப் பழக்கம் செய்வித்தார்; பேச்சோடு பேச்

சாய் விஜயா சீக்கிரத்திலேயே தம் மருமகள் ஆகப்போகிருள் என்று சொல்வதற்கும் மறக்கவில்லை. விஜயா அவர்கள் அனைவரையும் அன்புடன் வரவேற்று உட்காரும்படி வேண்டிக்கொண்டாள். இம்மாதிரி அவள் விருந்தினரை உபசரித்துக் கொண்டிருக்கும்போது, தயால் பாபு சிறிது தூரத்தில் வந்துகொண்டிருப்பது தெரிந்தது. இன்று அவர் தனியாக வரவில்லை; ஓர் அழகிய இளம்பெண் அவருடன்கூட வந்தாள். அவள் விஜயாவுக்குச் சிறிது மூத்தவளாயிருப்பாள். அவள் தம் சகோதரியின் மகள் என்று தயால் பாபு சொன்னர். அவளுடைய பெயர் நளினி; கல்கத்தாவில் பி.ஏ., படித்துக்கொண்டிருக்கிருள். கோடைக்கால விடுமுறை இன்னும் ஆரம்பிக்கவில்லை; ஆயினும் மாமி வியாதியாயிருப்பதை அறிந்ததும், அவளுக்கு அங்கே இருக்கப் பிடிக்கவில்லை. ரஜா எடுத்துக்கொண்டு வந்துவிட்டாள். கோடைக்கால விடுமுறை முழுவதும் இங்கேயே இருப்பதாகத் தீர்மானித்திருக்கிருள்.

நளினியை விஜயா கல்கத்தா சமாஜத்தில் பார்த்திருக்கிருள்; ஆனல் அவளோடு பேசியதில்லை. அன்று விருந்துக்கு வந்திருந்த அவ்வளவு பெரிய ஜனக் கூட்டத்தில், நளினி ஒருத்திதான் விஜயாவுக்கு அந்தரங்க சிநேகிதை போல் தோன்றினுள். விஜயா தன் இரு கைகளையும் நீட்டி அவளை மார்புறத் தழுவித் தன்னறைக்கு அழைத்துக் கொண்டுபோய் உட்காரவைத்தாள். சிறிது நேரத்திற்குள் இருவருக்கும் நெருங்கிய நட்பு உண்டாகிவிட்டது.

ஒன்பதரை மணிக்குப் பிரார்த்தனை ஆரம்பிப்பதாயிருந்தது. அதுவரையும் எல்லோரும் வெளித்திண்ணையில் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள். திடீரென்று ராஸ் விஹாரி உரத்த குரலில் யாரையோ வரவேற்கும் சப்தம் கேட்டது. "வா தம்பி! வா! உன்னல் எவ்வளவு காரியம்

தாமதமாகி விட்டது; உனக்கு வருவதற்கு அவகாசம் கிடைக்குமோ என்னவோ என்று எனக்குச் சந்தேக மாகவே இருந்தது" என்ருர்.

யாரை இம்மாதிரி வரவேற்கிருர் என்று அறிய விஜயா எட்டிப் பார்த்தபொழுது, முன்னல் நரேந்திரன் நின்று கொண்டிருப்பதைக் கண்டாள். விஜயாவினல் தன் கண்களே நம்பமுடியவில்லை. நரேந்திரனே ராஸ்விஹாரி அழைத்திருப்பா ரென்று அவள் கனவிலும் நினைக்கவில்லை. நளினியும் அவனைக் கண்டதும் குதூகலத்துடன், "நரேந்திர பாபுவா!" என்று அதிசயித்தாள்.

சிறிது நேரத்திற்குப்பின் விலாஸ் விஹாரியும், நரேந் திரனே வரவேற்கும் சப்தம் கேட்டது. இரண்டொரு விஞடி களுக்கு அப்புறம் விலாஸையும், நரேந்திரனையும் கூட்டிக் கொண்டு ராஸ்விஹாரி, வராந்தாவில் விஜயாவின் அறைக்கு முன்னல் வந்து நின்ருர். அவர்களோடு இன்னும் அநேக விருந்தாளிகளும் இருந்தார்கள்.

உடனே ராஸ்விஹாரி அவ்விரு வாலிபர்களேயும் பார்த்துக் கம்பீரமான குரலில் சொல்லலுற்ருர்: "விலாஸ்! வனமாலி போய்விட்டார்; ஜகதீசரும் போய்விட்டார்; நானும் போகவேண்டிய காலம் நெருங்கிவிட்டது. இவ்வுலகத்தில் நாங்கள் மூவரும் உயிர் ஒன்றும், உடல் வேருகவும் இருந்தோம். அத்தகைய நட்பு இப்பொழுது எங்கே இருக்கிறது? இக்காலத்துப் பிள்ளைகளுக்கு இதெல் லாம் விளங்கவே விளங்காது. புது வருஷப் பிறப்பாகிய இப்புனித தினத்தன்று, நான் உங்களே வேண்டிக்கொள்வது என்னவென்ருல், உங்களிருவருக்குமுள்ள மனத்தாங்கலி ஞல், இக்கிழவனுடைய வாழ்க்கையில் எஞ்சியிருக்கும் கொஞ்ச நாட்களேயும் துக்கமயமாக்கி விடாதீர்கள் என்பதே."

இக்கடைசி வார்த்தைகளைச் சொல்லும் பொழுது, அடக்க முடியாத் துக்கத்தினால் அவருடைய நாக் குழறுவது போல் தோன்றியது. இதைக் கண்டதும் நரேந்திரனால் சகிக்க முடியவில்லை. விலாஸினுடைய இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு, "விலாஸ் பாபு! நான் தங்களுக்கு இழைத்த அபராதம் அனைத்தையும் மன்னித்துவிடுங்கள்" என்று வேண்டினான்.

"நான்தான் தங்களுக்கு அபராதம் இழைத்துவிட்டேன்; மன்னிப்புக் கேட்கக் கடமைப்பட்டவன் நானேயாகும். அண்ணா! என்னை மன்னிக்க மாட்டீர்களா?" என்று சொல்லி விலாஸ் நரேந்திரனை மார்புறத் தழுவினான்.

ராஸ் விஹாரி கண்களை மூடிக்கொண்டு மிருதுவான குரலில், "ஹே! சர்வ சக்திமான், பரம பிதா, பரமேசுவரா, உன்னுடைய இக்கிருபைக்காகவும் கருணைக்காகவும் உன் திருவடிகளில் நான் கோடி கோடி நமஸ்காரஞ் செய்கிறேன்" என்று சொல்லி இருகைகளையும் கூப்பி நமஸ்கரித்தார். பின்பு அங்கவஸ்திரத்தின் நுனியினால் கண்களைத் துடைத்துக்கொண்டு, "நீங்கள் இருவரும் க்ஷேமமாய் வாழ வேண்டுமென, இச்சுபதினத்தன்று நான் உங்களை ஆசீர்வதிக்கிறேன். கனவான்களே! நீங்களும் அவ்விதமே ஆசிர்வதியுங்கள்" என்றார்.

இவ்விதம் சொல்லி ராஸ் விஹாரி விருந்தாளிகளின் பக்கம் திரும்பினார். தயாளைத் தவிர வேறு ஒருவருக்கும் இதனுடைய மர்மம் தெரியாது. ஆகையினால் அவர்களனைவரும் திடுக்கிட்டு விழித்தார்கள். இதைக் கண்டதும் ராஸ் விஹாரிக்கு நொடிப்பொழுதில் விஷயம் விளங்கிவிட்டது. உடனே அவர்களைப் பார்த்துச் சற்றுப் புன்சிரிப்புடன், "'ரம்பம் போகும்பொழுதும் அறுக்கிறது; வரும்பொழுதும் அறுக்கிறது' என்று பெண்கள் சொல்லும் பழமொழி

உண்மைதான். (நரேந்திரனையும் விலாஸையுங் காட்டி) இவனும் என் மகன்தான், அவனும் என் மகன்தான்; வலது கை காயப்பட்டால் எங்ஙனம் வலிக்குமோ, அதுபோல் இடதுகை காயப்பட்டாலும் வலிக்குமல்லவா? ஆனால் உங்களுடைய கிருபையினால் இன்று எனக்கு ஒரு சுபதினம்! என் துக்கங்களும், கவலைகளும் இன்றோடு ஒழிந்துவிட்டன. என்னுடைய ஆனந்தத்தை நான் எவ்வாறு உங்களுக்குச் சொல்வேன்" என்றார்.

உள் ரகஸ்யம் ஒருவருக்கும் விளங்காதபோதிலும், மரியாதையைக் காப்பாற்றிக் கொள்வதற்காக எல்லோரும் தலையாட்டினார்கள். ராஸ் விஹாரி மீண்டும் ஒருமுறை அங்கவஸ்திரத்தினால் தம் கண்களைத் துடைத்துக்கொண்டு, பக்கத்திலிருந்த ஒரு நாற்காலியில் போய்ப் பேசாமல் உட்கார்ந்தார். அச்சமயம் அவருடைய கம்பீரமான முகத்தைப் பார்த்த அனைவரும், வார்த்தைகளால் வர்ணிக்க முடியாத ஒருவிதமான திவ்யஅன்பு அவருடைய ஹிருதயம் முழுதும் நிரம்பி யிருக்கிறதென்றும், இனிமேல் அங்கே வார்த்தைகளுக்கு இடமே இல்லையென்றும் எண்ணலானார்கள்.

உடனே தயால் பாபு வெண்ணிறமான தம் தாடியைத் தடவிக்கொண்டே எழுந்திருந்து, "இரு பரஸ்பர விரோதிகளின் உள்ளங்கள் ஒன்றுசேருமிடத்தில் பகவானுக்கு ஆசனம் விரிக்கப்படுகிறது. ஆகையினால், இன்று இவ்விடத்தில் பரமாத்மா எழுந்தருளியிருக்கிறார் என்பதற்கு எள்ளளவேனும் சந்தேகமில்லை" என்றார். அதன்பின் வருஷப் பிறப்பைப்பற்றி அவர் ஓர் அழகான பிரசங்கஞ் செய்தார். கபடமற்ற உள்ளத்துடனும், அந்தரங்க பக்தியுடனும் பேசியதனால் அவருடைய பிரசங்கம் வெகு அழகாயிருந்தது. கேட்போர் உள்ளங்களை அது கவர்ந்தது. ஆதலால் எல்லோருடைய கண்களிலும் பக்தியினாலும், ஆனந்தத்தினாலும்

கண்ணீர் ததும்பியது. ராஸ்விஹாரி மாலேமாலேயாகக் கண்ணீர் வடித்தார்! பிரார்த்தனை முடிந்தபின்பும் அவர் அப்படியே அசையாது உட்கார்ந்திருந்தார். அவருக்கு உணர்விருக்கிறதா இல்லையா என்பதுகூட வெகுநேரம் வரை ஒருவருக்கும் தெரியாமலிருந்தது! விஜயாவுடைய ஹிருதயத்தின் நிலையையும் ஒருவராலும் அறிய முடியவில்லை.

பிரார்த்தனை முடியும்வரை, நிலம் நோக்கிய பார்வையுடன் அவள் கற்சிலேபோல் அசையாது உட்கார்ந்திருந்தாள். கடைசியில் தலே நிமிர்ந்தபொழுது அவளுடைய முகம் இரத்தப் பசையற்று வெளுப்புற்றிருந்தது.

ராஸ் விஹாரி மெதுவாய்க் கண்களைத் திறந்தார்; பின் எழுந்து நின்று, "இன்று தயால் பாபு சொன்ன மஹா வாக்கியம் எத்தகைய சிறந்த உண்மை! ஒத்த ஹிருதயங்கள் இரண்டு சந்திக்குமிடத்தில் கருணாநிதியாகிய பரமாத்மா எழுந்தருளுகிருர்! ஆஹா! இவ்வுண்மையை இப்பொழுது என் அந்தக்கரணத்தில் பிரத்தியக்ஷமாகக் கண்டு நான் தன்யனுனேன்!" என்று சொல்லித் தயாலின் பாதங்களைத் தொட்டு வணங்கி, நாத் தடுமாற்றத்துடன், "தயால் பாபு! இதெல்லாம் தங்களுடைய புண்ணியத்தினுலும், ஆசீர்வாதத்தினுலும் எங்களுக்குக் கிடைத்த பாக்கியம்!" என்ருர்.

தயால் பாபுவின் கண்களில் கண்ணீர் ததும்பியது. அவரால் ஒன்றும் பேசமுடியவில்லை. மௌனமாக நின்றுகொண்டிருந்தார். பக்கத்து அறையில் சாப்பாட்டிற்கு வேண்டிய ஏற்பாடுகளெல்லாம் நடந்துகொண்டிருந்தன. விலாஸ் குறிப்பினுல் தன் தந்தைக்கு அதை உணர்த்தினுன். ஆனுல் ராஸ்விஹாரி அதைக் கவனியாதவர்போல், வந்திருந்த விருந்தாளிகளை நோக்கி, "இன்று தங்களிடத்தில் இன்னும் ஒரு வேண்டுகோள். அண்ணு வனமாலி, இன்று உயிரோ

டிருப்பின், தம் மகளுடைய கலியாணத்தைப்பற்றிய சுப சமாசாரத்தை, அவரே உங்களுக்குத் தெரிவித்திருப்பார். நான் சொல்லவேண்டிய அவசியம் நேர்ந்திராது. ஆனால் துர்ப்பாக்கிய வசத்தால், அவர் இப்போது இல்லாத தால், அப்பொறுப்பு என் தலையின்மீதே விழுந்திருக்கிறது. மாப்பிள்ளைக்கும் பெண்ணுக்கும் இப்பொழுது நானே பிதாவாயிருக்கிறேன். இம்மாதப் பௌர்ணிமையன்று இச்சுப முகூர்த்தத்தை வைப்பதாக நான் நிச்சயித்திருக்கிறேன். அது யாதொரு விக்கினமுமின்றி இனிது நிறைவேறவேண்டுமென்று நீங்களெல்லாம் ஆசீர்வதிக்கவேண்டும்" என்று சொல்லி ராஸ் விஹாரி தம் ஜேபினின்றும் தங்க வளையல் ஜோடி ஒன்றை வெளியில் எடுத்தார். தயால் பாபுவினிடத்தில் அவற்றைக் கொடுத்து விஜயாவை ஆசீர்வதித்து அவள் கைகளில் அணியுமாறு வேண்டிக்கொண்டார். தயால் பாபுவும் அவற்றைக் கையில் எடுத்துக்கொண்டு விஜயாவினிடத்தில் சென்று, "இச்சுப காரியத்தின் நிமித்தம் உனக்குச் சர்வமங்களமும் உண்டாகட்டும். மகளே கொண்டுவா, உனது கைகளைக் கொஞ்சம் நீட்டு அம்மா" என்றார்.

ஆனால் கீழ் நோக்கிய பார்வையுடன் கற்சிலைபோல் உட்கார்ந்திருந்த விஜயா கொஞ்சமேனும் அசையவில்லை. தயால் பாபு மீண்டும் ஒருமுறை வேண்டிக்கொண்டார். ஆனால் விஜயா முன்போலவே உட்கார்ந்திருந்தாள்.

பக்கத்திலிருந்த நளினி மாமாவினுடைய பரிதாபகரமான நிலையைக் கண்டதும், சிரித்துக்கொண்டே விஜயாவினுடைய இரண்டு கைகளையும் தானே மேலே தூக்கிக் கொடுத்தாள். விஜயாவை ஆசீர்வதித்துக்கொண்டே, அவ்விரு வளையல்களையும், தயால் பாபு அவளுடைய கைகளில் போட்டார். ஓர் ஆதரவற்ற அபலையின் கைகளில்

பலாத்காரமாகத் தாம் விலங்குகள் மாட்டிவிட்டதை அவரென்ன அறிவார் பாவம்!

விஜயாவினுடைய உண்மையான மனோநிலை ஒருவருக்கும் தெரியாது. ஆகையினால் அதைப் பெண்களுக்கு இயற்கையாக உண்டான நாணம் என்று நினைத்து, அனைவரும் சந்தோஷமாய் அவரவர்களுக்குத் தெரிந்த முறையில் வதூவரர்களை ஆசீர்வதிக்க ஆரம்பித்தார்கள். விருந்து முடிந்ததும் ஒவ்வொருவராக அனைவரும் விடைபெற்றுக் கொண்டு செல்லலானார்கள். அச்சமயம் அதிதிகளுடைய மரியாதையைக் காப்பாற்றுவதற்காக, விஜயா எத்தகைய கஷ்டத்துடன் தன் மனக்கிலேசங்களை எல்லாம் அடக்கிக் கொண்டு புன்னகை பொலியும் முகத்துடன் அவர்களுக்கு விடை கொடுத்து அனுப்பினாள் என்பதை, உள்ளும் புறமும் உணரவல்ல எம்பெருமானே அறிவார்.

போஜனம் முடிந்தபின், ஒரு கிராம்பை வாயில் போட்ட வண்ணம், ராஸ் விஹாரி சிரித்துக்கொண்டே விஜயாவிடம் வந்து, "நான் சென்று வருகிறேன், மகளே! என்னைப்போன்ற கிழவர்களுக்கு வெயில் சற்றுக் கடுமையாகிவிட்டால் வீடு செல்வது சிரமமாயிருக்கும்" என்று சொல்லிப் பின்னும் ஒரு முறை அவளை ஆசீர்வதித்துக் குடையைப் பிடித்துக்கொண்டு வெளியேறினார்.

எல்லோரும் போய்விட்டார்கள்; விஜயாவும், நளினியும் மாத்திரம் வெளி வராந்தாவில் ஓர் ஓரத்தில் நின்று பேசிக்கொண்டிருந்தார்கள்.

விஜயா:—உன்னைக் கண்டதும் இன்று எனக்கு எவ்வளவு சந்தோஷமாயிருக்கிறது! கல்கத்தாவிலிருந்து வந்ததிலிருந்து நான் இங்கே தனியாகவே வசிக்கிறேன். சந்தோஷமாய்ப் பேசிக் காலங்கழிப்பதற்கு ஒருவருமில்லை.

உனக்கு அவகாசம் இருக்கும்பொழுதெல்லாம் தயை செய்து இங்கே வந்தால் நலம்.

நளினி வருவதற்கு ஒப்புக்கொண்டாள். உடனே விஜயா, "உன் மாமியைப் பார்ப்பதற்காக நானும் உன்னோடு வரலாமென்று இருந்தேன். ஆனால் வெயிலைப் பார்த்தால் பயமாயிருக்கிறது. தயால் பாபு கச்சேரியில் இருப்பார். அவரைக் கூப்பிட்டு விடட்டுமா" என்று சொல்லி வேலைக்காரனைத் தேடவாரம்பித்தாள்.

'அவர் இப்பொழுது வீட்டுக்கு வரமாட்டாரே. கச்சேரி வேலை முடிந்தபிறகு மாலையில்தான் வீட்டிற்கு வருவார்" என்று நளினி சொன்னாள்.

இதைக் கேட்டதும் விஜயா மிகுந்த வெட்கத்துடன், "முதலிலேயே இதை என்னிடத்தில் ஏன் சொல்லவில்லை? நான் கன்னையாசிங்கைக் கூப்பிடுகிறேன்; அவனாவது உன்னை...." என்று சொல்லிக்கொண்டே அவனைத் தேட ஆரம்பித்தாள்.

நளினி :—ஒன்றும் வேண்டாம்; நான் நரேந்திரபாபுவுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறேன். அவர் மாமாவைப் பார்க்கப் போயிருக்கிறார். இப்பொழுது வந்துவிடுவார்.

விஜயா :—(ஆச்சரியத்துடன்) உனக்கு அவரை முன்பே தெரியுமா?

நளினி :—இல்லை; முந்தாநாள் நான் இவ்வூருக்கு வந்தபோது ஸ்டேஷனில் அவரைச் சந்தித்தேன். மாமா ஸ்டேஷனுக்கு வரமுடியாததால், அவரை அனுப்பியிருந்தார். அவரே என்னை வீட்டிற்கு அழைத்துக்கொண்டு போனார். அவ்வளவுதான்.

விஜயா :—ஓஹோ! அப்படியா?

நளினி :—நரேந்திர பாபு எவ்வளவு நல்ல மனிதர் என்பதை நீங்களும் அறிந்திருப்பீர்களல்லவா? இரண்டு

நாள் பழக்கத்திலேயே எத்தகைய ஆத்ம நண்பராய்விட்டார்! இன்று எங்கள் வீட்டிலேயே ஸ்நானுதிகளை முடித்துச் சற்று இளைப்பாறிவிட்டு மாலை கல்கத்தா செல்வார். என் மாமி அவரைத் தம் சொந்த புத்திரன்போல் நேசிக்கிறார்!

விஜயா :—ஆம். மிகவும் நல்ல மனிதர்தாம்.

நளினி :—இன்று இங்கு நடந்தவைகளை நான் பார்த்திராவிட்டால், நரேந்திர பாபுவுக்குங்கூட யாருடனுவது மனஸ்தாபம் இருக்கும் என்பதை நான் நம்பியிருக்கவே மாட்டேன். விலாஸ் பாபுவோடு, அவர் இன்று சமாதானமடைந்துவிட்டதைப்பற்றி எனக்கு மிக்கசந்தோஷம். விலாஸ் பாபுவினுடைய தகப்பனுரும் எவ்வளவு நல்ல மனுஷராயிருக்கிறார்! நம்முடைய சமாஜத்து அங்கத்தினர்கள் அனைவரும் அவரைப் பின்பற்றுவார்களாயின் எவ்வளவு நலமாயிருக்கும்!

சிறிது தூரத்தில், நரேந்திரன் தொப்பியைக் கையில் எடுத்துக்கொண்டு வெகு வேகமாய் வருவது தென்பட்டது. அதைக் கண்டதும் விஜயா, “அதோ, அங்கு வருகிறார்” என்றாள்.

நரேந்திரன் சமீபத்தில் வந்து விஜயாவை நோக்கி, “பேஷ்! அதற்குள் இருவருக்கும் நெருங்கிய நட்பு உண்டாகிவிட்டது போலிருக்கிறதே!............இன்று காலையிலிருந்து இதுவரை என்னுடைய நேரம் சந்தோஷமாகவே கழிந்தது. இதிலிருந்து இவ்வருடம் முழுவதும் சந்தோஷமாகவே கழியும் என்று நினைக்கிறேன். ஆனால் தங்களுடைய முகம் ஏன் வாடியிருப்பதுபோல் தோன்றுகிறது?” என்று கேட்டான்.

விஜயா :—ஒரு நாளில் இக்கேள்வியை எத்தனை தரம் கேட்பது?

நரேந் :—(சிரித்துக்கொண்டே) முன்னால் ஒரு தரம் கேட்டிருக்கிறேன். அவ்வளவுதானே ? அதனால் என்ன கெடுதி நேர்ந்துவிட்டது ? இப்படி ஏன், தாங்கள் நொடிப் பொழுதில் கோபித்துக்கொள்கிறீர்கள் ? இதுதான் தங்களிடத்திலுள்ள ஒரு பெருங் குற்றம்.

இவ்விதம் சொல்லி நரேந்திரன் சிரிக்க ஆரம்பித்தான். விஜயாவினாலும் சிரிப்பை அடக்கமுடியவில்லை ; "எல்லோரும் தங்களைப்போலவே குற்றமற்றவர்களா யிருக்கமுடியுமா ? கோபமூட்டுவதையே சுபாவமாகக் கொண்ட நாராயணனைப்போலுள்ள மனிதர்கள் தங்களைப்போன்ற சாந்தமூர்த்திகளைக்கூட இக்குற்றத்திற்கு ஆளாக்கிவிடுகிறார்கள் !" என்றாள்.

நாராயணன் பெயரைக் கேட்டதும் நரேந்திரன் இன்னும் அதிகமாகச் சிரித்தான் ; "எதையும் தாங்கள் லகுவில் மறக்கமாட்டீர்களோ ? யாராவது தெரியாமல் ஒரு குற்றம் செய்துவிட்டால், அதை மன்னிக்கும் வழக்கமே கிடையாது போலும் ! நாராயணனைப் போன்ற மனிதர்கள் இன்னும் யார் யார் ? நாராயணன் ஒருவன், அப்புறம் தாங்கள், அவ்வளவுதானே ?" என்று கேட்டான்.

விஜயா :—அன்று ஸ்டேஷனிலிருந்த ஜனங்களைக் கேட்டால் அது தெரியும்.

நரேந் :—அப்படியானால் உலகம் என்னை அவ்வாறு மதிக்கிறது ?

விஜயா :—உலகம் மதிக்காவிட்டாலும் நாங்கள் அப்படித்தான் மதிக்கிறோம்.

நரேந் :—அதற்காகத் தங்களுக்கு வந்தனம் ! நல்லது, உங்களைப்பற்றி உலகம் என்ன நினைக்கிறது என்று சொல்லுங்கள் பார்ப்போம்.

இவ்விதம் சொல்லி நரேந்திரன் நகைத்தான்.

விஜயாவினுடைய முகம் திடீரென்று சிவந்தது. ஆனால் அவள் சிரித்துக்கொண்டே, "தன்னைப் பற்றித் தானே புகழ்ந்துகொள்ளக் கூடாது; அது பாவம். ஆகையினால் என்னைப்பற்றி ஜனங்கள் என்ன நினைக்கிறார்கள் என்று நீங்களே சொல்லிவிடுங்கள்........ஆனால் அதைப்பற்றி இப்பொழுது அவசரம் ஒன்றுமில்லை; சாப்பிட்டுவிட்டுச் சொல்லலாம். வெகு நேரமாய்விட்டது. நீங்கள் இங்கேயே சாப்பிட்டுவிட்டுச் செல்லவேண்டும்" என்று சொல்லி நளினியின் முகத்தைப் பார்த்தாள்.

நளினி:—மாமி எனக்காகக் காத்துக்கொண்டிருப்பார்.

விஜயா:—நான் ஒரு வேலைக்காரன் வசம் சொல்லியனுப்பி விடுகிறேன்.

நளினி:—நான் கட்டாயம் போகவேண்டும். மாமி வியாதியாய் இருக்கிறார். மத்தியான நேரம், அவர் பக்கத்தில் யாராவது ஓர் ஆள் இருக்கவேண்டும்.

அவள் சொல்லியது நியாயந்தான்; ஆகையினால் அவளை விஜயா அதிகம் வற்புறுத்தவில்லை. விஜயாவின் முகத்தைப் பார்த்ததும் நளினி என்ன நினைத்தாளோ தெரியவில்லை. திடீரென்று, "நரேந்திர பாபு! நீங்கள் வேண்டுமானால் இங்கேயே சாப்பிட்டுவிட்டு வாருங்கள். நான் போய் மாமியிடத்தில் சொல்லிவிடுகிறேன். போகும்போது அவரை ஒருமுறை பார்த்துவிட்டுப் போனால் போதும்" என்றாள்.

"இக்கடும் வெயிலில் உங்களைத் தனியே போகவிடுவதற்கு என்னைக் கொஞ்சமேனும் கருணை இல்லாதவன் என்று நினைத்தீர்கள்?" என்று சொல்லிச் சிரித்துக்கொண்டே நரேந்திரன் விஜயாவை நோக்கி, "உங்கள் வீட்டில்தான் எனக்கு ஒரு நாள் ராஜபோஜனம் கிடைக்கப்போகிறதே. இன்று சாப்பிடாததையெல்லாம் சேர்த்து அன்று சாப்பிட்டுக் கொள்கிறேன். நமஸ்காரம். (நளினியைப் பார்த்து) இனி

மேல் தாமதம் செய்யவேண்டாம், புறப்படுங்கள் " என்று சொல்லித் தொப்பியை எடுத்துத் தலையின்மீது வைத்தான்.

நளினி வராந்தாவினின்றும் இறங்கி நரேந்திரன் சமீபத்தில் வந்தாள். இவைகளை எல்லாம் ஒளிந்து நின்று ஒரு மனிதன் பார்த்துக்கொண்டிருப்பதை, அவர்களில் ஒருவரும் கவனிக்கவில்லை. நரேந்திரன் சிறிது தூரம் சென்று திடீரென்று திரும்பிவந்து சிரித்துக்கொண்டே, " நல்லது. தங்களிடத்தில் ஒரு வேண்டுகோள். இத்தனை துக்கங்களுக்கும் காரணமாயிருக்கும் அக்கருவியை இச்சுபதினத்தன்று தாங்கள் எனக்கு இனாம் அளித்து விடாதீர்கள்! நாளை யாவது, நாளைநின்றுவது அவ்விருநூறு ரூபாயைத் தங்களுக்கு அனுப்பிவிடுகிறேன் " என்றான்.

விஜயா அதிகோபத்துடன், " பணம் வாங்கிக்கொண்டு ஒருவருக்கு ஒருபொருளைக் கொடுப்பதை நாங்கள் ' இனாம் ' என்று சொல்வதில்லை. அப்படிக் கூறுவது உங்கள் வழக்கம் போலும்! ஆனால் எங்களுக்கு வேறுவிதமான சிக்ஷை கொடுத்திருக்கிறார்கள். ஆகையினால் இச்சுபதினத்தன்று நான் அதை விற்கவிரும்பவில்லை " என்றாள்.

இக்கடுஞ் சொற்களைக் கேட்டு நரேந்திரன் பிரமித்தான். விஜயாவினுடைய உள்ளத்தின் ஆழத்தை அறிவது அவனுக்கு முன்னமேயே மிகக் கடினமாயிருந்தது. அத்துடன், இன்று விஜயாவின் ஹிருதயத்தில் எரிந்துகொண்டிருந்த அக்கினியின் ஜ்வாலை, காரணமில்லாது இப்பொழுது வெளியேறியதும், நரேந்திரனுக்கு அவளை அறிவது இன்னும் கஷ்டமாகிவிட்டது. அவன் க்ஷணநேரம் விஜயாவின் முகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான். பின்பு அதிக துக்கத்துடன், " நான் என்னுடைய எளிய நிலையை மறக்கவில்லை; அதை மற்றவர்களிடமிருந்து மறைப்பதற்கு முயன்றதுமில்லை. (நளினியைக் காட்டி) நான் இவர்களிடத்தில்

கூட என் கதை முழுவதையும் சொல்லியிருக்கிறேன். என் தந்தையார் அதிகக் கஷ்டப்பட்டு இறந்ததும், அவர் இறந்த பின், வீடுவாசல், நிலம், புலம் எல்லாம் கடனைத் தீர்ப்பதில் போய்விட்டதும், மற்றெல்லாமும் ஒன்றுகூட மறைக்காமல் சொல்லியிருக்கிறேன். (நளினியைப் பார்த்து) நிஜந்தானே? உங்களிடத்தில் சொல்லியிருக்கிறேன் அல்லவா?" என்று கேட்டான்.

நளினி மிகுந்த நாணத்துடன், "ஆம்" என்று ஒப்புக் கொண்டாள். விஜயாவின் மனம் அத்தியந்த துக்கத்தினுலும், லஜ்ஜையினுலும் வேதனை அடைந்தது. அவளுடைய நாவினின்றும் ஒரு வார்த்தையேனும் எழவில்லை. இருவரையும் பார்த்துக்கொண்டு அப்படியே பேசாமல் இருந்து விட்டாள்.

விஜயாவின் மனோவேதனையைக் கண்ட நரேந்திரன் மீண்டும் சொல்லலுற்றான்: "என்னுடைய வார்த்தைகளினால் தங்களுக்கு அடிக்கடி கோபம் வந்துவிடுகிறது. நான் என்னுடைய நிலைமையை மறந்து, தங்களோடு சரி சமமாக இருக்க விரும்புவதாகத் தாங்கள் நினைத்துக்கொள்கிறீர்கள் போலும். என்னுடைய பேச்சுகளிலோ, அல்லது செய்கைகளிலோ, அப்படி ஏதாவது தோன்றினாலும், அதைத் தயை செய்து மன்னித்துவிடுங்கள். அது என்னை யறியாமல் வந்து விடுகிறது."

இவ்விதம் சொல்லி அவன் சென்றுவிட்டான்.

# இருபத்திரண்டாம் அத்தியாயம்

## பழைய இரகசியம்

வழி முழுவதும் இருவரும் அதைப்பற்றியே பேசிக் கொண்டு சென்றார்கள்.

நளினி :—என்ன இறும் கொடுப்பதைப்பற்றிச் சொன்னீர்கள் ?

நரேந் :—அதெல்லாம் வேறொருநாள் சொல்லுகிறேன். இன்று என்னை மன்னித்துவிடுங்கள்.

அம்பூங்கிற் பாலத்தண்டை வந்ததும் நரேந்திரன் திடீரென்று நின்று, "இன்று என்னை நீங்கள் மன்னிக்க வேண்டும்-நான் செல்கிறேன்" என்றான். நளினி ஆச்சரிய முற்று அவனை ஏறிட்டுப் பார்த்தாள். நரேந்திரன் மீண்டும், "நான் செய்வது சரியல்ல என்பதை அறிவேன்; ஆயினும் இன்று என்னை மன்னிக்கத்தான் வேண்டும். இன்றைக்கு என்னால் வரமுடியாது. இன்னொருநாள் வந்து தங்கள் மாமியைப் பார்க்கிறேன்" என்றான்.

நரேந்திரனுடைய தீர்மானத்தில் திடீரென்று உண்டான இம்மாறுதலைக் கண்டதும் நளினி மிகுந்த ஆச்சரிய முற்றாள். ஆனால் அவனை அதிகமாக வற்புறுத்தாமல், "நீங்கள் இன்னும் சாப்பிடக்கூடவில்லையே! நல்லது, நீங்கள் எப்பொழுது வருவீர்கள்?" என்று கேட்டாள்.

"நாளை நின்று வருகிறேன்" என்று சொல்லி நரேந்திரன் வந்த வழியே திரும்பி ரயில்வே ஸ்டேஷனை நோக்கி வேகமாய் நடக்கலானான். இரண்டொரு நிமிஷங்களுக்குள் மைதானத்தைக் கடந்திருப்பான்; அதற்குள் ஒரு சிறுவன்

கையை அசைத்துக்கொண்டு, வாயு வேகமாய்த் தன்னை நோக்கி ஓடிவருவதைக் கண்டான். அவன் தன்னை நிற்குமாறு கையசைக்கிறான்போலும் என்று நினைத்து நரேந்திரன் நின்றான். க்ஷண நேரத்தில் சதீசன் வந்து, இளைத்துக் கொண்டே, " அம்மா உங்களைக் கூப்பிட்டார்கள் ; வாருங்கள் " என்றான்.

நரேந் :—என்னையா ?

சதீஷ் :—ஆம். ஜல்தி வாருங்கள்.

நரேந்:—நீ சரியாய்க் கேட்டிருக்கமாட்டாய் ; என்னைக் கூப்பிட்டிருக்க மாட்டார்கள்.

சதீஷ்:—(வெகு வேகமாய்த் தலையை ஆட்டிக்கொண்டு, ஏமாத்திறீங்க. உங்களைத்தான் கூப்பிட்டார்கள். உங்கள் தலையிலேதானே தொரை தொப்பியிருக்கு ! வாருங்கள்.

நரேந்:—உன்னிடத்தில் அம்மா என்ன சொன்னார்கள்?

சதீஷ் :—மாடியிலிருந்து அம்மா ஓட்டமாய் இறங்கி வந்து என்னைக் கூப்பிட்டு, ' சதீஷ், ஓட்டமாய் ஓடு. ஓடிப் போய்ப் பாபுவைப் பிடித்து இழுத்துக்கொண்டு வா. தலையிலே தொரை தொப்பியிருக்குதே, அவர். ஓடு, ஓட்டமாய் ஓடு. ஒனக்கு நல்ல பட்டமும், கயிறும் வாங்கித் தருகிறேன் ' என்றார்கள். வாருங்கள், நேரமாகிறது !

சிறுவனுடைய ஆத்திரத்தின் காரணம் என்னவென்பது நரேந்திரனுக்கு இப்பொழுதுதான் விளங்கியது. பாவம்! பட்டத்தின்மீதுள்ள ஆசையினால் இக்கடும் வெயிலில், எஞ்ஜின் மாதிரி இவ்வளவு வேகமாய் ஓடிவந்திருக்கிறான். ஆகையினால் நரேந்திரன் அவனுடன் சென்றாலொழிய விடமாட்டான். பட்டத்திற்கும் கயிற்றுக்கும் உண்டான விலையைத் தானே அவனுக்குக் கொடுத்துத் திருப்பி அனுப்பிவிடலாமா என்றுகூட நரேந்திரன் நினைத்தான். ஆனால் விஜயா இன்று இங்ஙனம் கூப்பிட்டுவிடுவதற்குக்

காரணமென்ன என்று அறிய அவன் மிகவும் ஆவலாயிருந்தான். தான் போவது சரியா தவரு என்று தீர்மானிப்பதற்குக் கொஞ்ச நேரமாயிற்று; கடைசியில் அவனுல் ஒன்றும் நிச்சயஞ் செய்யமுடியவில்லே.

ஆயினும் அவனுடைய கால்கள் விஜயாவின் வீட்டை நோக்கியே அவனே இழுத்தன. தன்னேக் கூப்பிட்டுவிட்டதற்கு என்ன காரணமாயிருக்கலாம் என்று வழிமுழுவதும் யோசித்துக்கொண்டே சென்ருன். முற்றத்தில் நுழைந்ததும், விஜயா அவன் முன்னுல் வந்து நின்ருள். கண்ணீர் ததும்பும் கண்களுடன், நரேந்திரன் முகத்தைப் பார்த்துக்கொண்டு, "குளிக்காமல், சாப்பிடாமல், இத்தகைய கடும் வெயிலில் நீங்கள் இப்படிப் போவது நன்ருயிருக்கிறதா? நான்தான் பொல்லாதவள் - துஷ்டை - கோபக்காரி; ஆனுல், நீங்கள் இப்படியெல்லாம் செய்யலாமாக்கும்!" என்ருள்.

நரேந்திரன் ஆச்சரியத்துடன், "நீங்கள் பொல்லாதவர்கள், கோபக்காரி என்று தங்களிடத்தில் யார் சொன்னது?" என்று கேட்டான்.

விஜயாவின் உதடுகள் துடித்தன. "நீங்கள்தாம் அப்படிச் சொன்னீர்கள்! நளினியையும் வைத்துக்கொண்டு ஏன் நீங்கள் என்னே இவ்வாறு அவமானஞ் செய்யவேண்டும்? அவமானம் செய்ததும் காணுது என்று என்னேத் தண்டிப்பதற்கு இம்மத்தியான வெயிலில் குளிக்காமல், சாப்பிடாமல் போய்விட்டீர்கள்! நான் உங்களுக்கு என்ன அபராதம் இழைத்துவிட்டேன்?" என்று சொல்லும்போதே விஜயாவின் கண்களினின்றும் கண்ணீர் வடிந்தது. அதை மறைப்பதற்குச் சட்டென்று முகத்தை ஜன்னலின் பக்கந் திருப்பினுள்.

நரேந்திரன் அவளே நோக்கிப் பிரமித்து நின்ருன். தன்மீது சாட்டப்பட்ட குற்றத்திற்கு என்ன பதில் சொல்

வது என்பதே அவனுக்குத் தெரியவில்லை. இதற்கெல்லாம் காரணம் என்னவென்பதும் அவனுக்கு விளங்கவில்லை.

ஸ்நானத்திற்குத் தண்ணீர் எடுத்துவைத்திருப்பதாக வேலைக்காரன் வந்து சொன்னான்.

"இன்னும் தாமதம் செய்யாதீர்கள்; போய்க் குளித்து விட்டு வந்து சாப்பிடுங்கள்" என்றாள் விஜயா.

நரேந்திரன் ஸ்நானத்தை முடித்துக்கொண்டு சாப்பிட உட்கார்ந்தான். விஜயா, கையில் ஒரு விசிறியை எடுத்துக்கொண்டு, அவனுக்கு வெகு சமீபத்தில் வந்து உட்கார்ந்தவுடன், அவனுடைய சரீரம் முழுவதும் ஒரு மின்னல் பாய்ந்ததுபோல் இருந்தது. விசுறுவதற்கு அவள் தயாராயிருப்பதைக் கண்டதும் நரேந்திரன் மிகுந்த சங்கோசத்துடன், "வேண்டாம், வேண்டாம்; அதற்கு அவசியமில்லை; விசிறியைப் பேசாமல் வைத்துவிடுங்கள்" என்றான்.

விஜயா :—(சிரித்துக்கொண்டு) உங்களுக்கு அது அவசியமில்லாமல் இருக்கலாம்; ஆனால் ஸ்திரீகள் கொஞ்சநேரமாவது சும்மாவிருக்கக்கூடாது என்று அப்பா அடிக்கடி சொல்வது வழக்கம்; ஆகையினால் எனக்கு அது அவசியமே.

நரேந் :—நீங்களும் இன்னும் சாப்பிடவில்லையே!

விஜயா :—இல்லை; புருஷர்கள் சாப்பிடுவதற்கு முன் ஸ்திரீகள் சாப்பிடக்கூடாது.

நரேந் :—பிரம்மசமாஜிகளா யிருந்தாலும் உங்கள் பழக்க வழக்கங்களெல்லாம் எங்களைப் போலல்லவா இருக்கின்றன!

எல்லாப் பிரம்மசமாஜிகள் வீட்டிலும் இவ்விதம் நடப்பதில்லை; ஆனால் அவளுடைய தந்தையார் மட்டும் சனாதன ஹிந்துக்களுடைய புராதன பழக்க வழக்கங்களைத் தம் வீட்டில் அனுசரித்து வந்தார்.

விஜயா :—இதில் ஆச்சரியப்படுவதற்கு என்ன இருக்கிறது? பிரம்மசமாஜிகளாகிய நாங்கள் சீமையிலிருந்து வந்து இறங்கவில்லையே!

“அம்மா, கணக்குகளை எடுத்துக்கொண்டு, குமாஸ்தா வந்திருக்கிறார். அவைகளை வைத்துவிட்டுப் போகச் சொல்லட்டுமா ?” என்று வேலைக்காரன் வந்து கேட்டான்.

விஜயா :—ஆம் ; இன்று அவைகளைப் பார்க்க எனக்கு நேரமிராது ; நாளைக்குப் பார்க்கிறேன் என்று சொல்.

வேலைக்காரன் சென்ற பின்பு நரேந்திரன் விஜயாவை நோக்கி, “எல்லாவற்றைக் காட்டிலும், இதுதான் எனக்கு மிகுந்த சந்தோஷ மளிக்கிறது” என்றான்.

விஜயா :—எது ?

நரேந் :—வேலைக்காரர்கள் உங்களை ‘அம்மா’ என்று கூப்பிடுவதுதான். (சிரித்துக்கொண்டு) நீங்கள் பிரம்ம சமாஜ ஸ்திரீ ; நன்கு கற்றவர்கள் ; அதனுடன் பெருஞ் செல்வத்திற்கும் அதிபதி. நான் வைத்தியம் செய்வதற்காக இப்பொழுது அநேக தனவந்தர்களுடைய வீடுகளுக்குச் சென்றுகொண்டிருக்கிறேன். அங்கே அவர்களுடைய வேலைக்காரர்களெல்லாம் அந்த ஸ்திரீகளை, ‘எஜமானி” என்று அழைக்கிறார்கள்.

இவ்விதம் சொல்லி நரேந்திரன் சிரிக்கலானான். விஜயாவும் சிரித்தாள். நரேந்திரன் மீண்டும் சொல்லலானான் : “வேலைக்காரர்கள் தங்களை ‘அம்மா’ என்று சொல்லி அழைப்பதைக் காட்டிலும் ‘எஜமானி’ என்று அழைப்பது அதிக மதிப்பாகவா இருக்கிறது? முதல் முதல் நான் இதை ஒரு வீட்டில் கேட்டபொழுது, ‘எஜமானி’ என்று யாரை அழைக்கிறான் என்பதே எனக்கு விளங்கவில்லை. நான் அவ்வேலைக்காரனைக் கேட்டபொழுது அவன் என்ன சொன்னான் தெரியுமா ? ‘டாக்டர் பாபு (நீங்களே

சொல்லுங்கள்). நான் என்ன செய்யட்டும், ஒரு புதிய வேலைக்காரன் ஒருநாள், அம்மா என்று கூப்பிட்டுவிட்டான். அவ்வளவுதான். எஜமானி அம்மாளுக்குக் கோபம் பொறுக்க முடியவில்லை. பாவம்! அவன் சம்பளத்தில் ஒரு ரூபாய் குறைத்துவிட்டார்கள். வேலை போகாமலிருந்தது அவன் செய்த புண்ணியம் என்றுதான் சொல்லவேண்டும்' என்றான். நல்லது, நீங்களும் இம்மாதிரி பைத்தியக்காரத் தனத்தை அநேக வீடுகளில் பார்த்திருப்பீர்களல்லவா?"

விஜயா சிரித்துக்கொண்டே தலையசைத்தாள்.

நரேந் :—அந்த எஜமானிகளுடைய குழந்தைகளெல்லாம் அவர்களை, 'அம்மா' என்று கூப்பிடுகிறார்களா அல்லது அவர்களும், 'எஜமானி' என்றே அழைக்கிறார்களா என்பதை நான் பார்க்கவேண்டும்!

இவ்விதம் சொல்லி நரேந்திரன் சிரித்தான்.

விஜயா :—(புன்னகையுடன்) சாப்பிட்டுவிட்டு அப்புறம் நாள் முழுவதும் ஊர் வம்பு அளந்துகொண்டிருங்கள். எனக்கு ஓர் ஆக்ஷேபனையும் இல்லை! நீங்கள் செய்வதைப் பார்த்தால், இன்று நான் பட்டினிதான் போலிருக்கிறது.

உடனே நரேந்திரன் அவசர அவசரமாய் நாலைந்து கவளம் சாப்பிட்டான். பின்பு மீண்டும் சாப்பாட்டை மறந்துவிட்டு, "நானும் நாலைந்து வருஷங்கள் சீமையில் இருந்திருக்கிறேன். ஆனால் இம்மாதிரி எஜமானிகளை......." என்று பேச்சைத் தொடங்கினான்.

விஜயா சுட்டு விரலைக்காட்டி அவனைப் பயமுறுத்தும் பாவனையுடன், "இன்னுமா அந்த ஊர் வம்பு!" என்றாள்.

"இனிமேல் இல்லை" என்று சொல்லி நரேந்திரன் மீண்டும் சாப்பிட ஆரம்பித்தான். ஆனால் சிறிது நேரத்தில் திடீரென்று, "போதும்; இனிமேல் என்னால் சாப்பிட முடியாது" என்று எழுந்தான்.

விஜயா :—பேஷ்! நீங்கள் கொஞ்சங்கூடச் சாப்பிட வில்லையே! எல்லாம் வைத்தது வைத்தபடியே இருக்கிறதே. இப்பொழுது எழுந்திருக்கக்கூடாது. ஊர் வம்பு அளந்து கொண்டாவது சாப்பிட்டுவிடுங்கள். நான் ஒன்றும் சொல்ல வில்லை.

நரேந்திரனுக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை. "இவ்வளவு சாப்பிட்ட பிறகுங்கூட ஒன்றும் சாப்பிட வில்லையென்று நீங்கள் சொல்லுகிறீர்கள்; கல்கத்தாவில் நான் தினந்தோறும் எவ்வளவு சாப்பிடுகிறேன் என்று பார்த்தால், மிகவும் ஆச்சரியப்படுவீர்கள். இந்த இரண்டு மூன்று மாதங்களிலேயே நான் எவ்வளவு மெலிந்துவிட் டேன் என்பது தங்களுக்குத் தெரியவில்லையா? எனக்கு ஓர் அற்புதமான சமையற்காரன் கிடைத்திருக்கிறான். காலை ஆறு மணிக்கே அவசர அவசரமாய்ச் சமையல் செய்து விட்டுப் புண்ணியவாளன் எங்கேதான் போய்விடுகிறானோ தெரியவில்லை. நான் வீட்டுக்கு வருவதற்கு, ஒருநாள் இரண்டு மணியாகிறது; ஒரு நாள் நான்கு மணியாகிறது; ஒவ்வொரு நாளைக்கு ஐந்து மணிகூட ஆகிவிடுகிறது. எந்நேரம் வந்தா லும் வியர்த்து விறுவிறுத்துப்போன சோற்றையும், பருப் பையுமே சாப்பிடவேண்டி யிருக்கிறது. ஒவ்வொரு நாள், பூனை பாலைக் குடித்துவிடுகிறது. சில தினங்களில் காக்கைக ளெல்லாம் சமையலறைக்குள் வந்து சாதம், பருப்பு எல்லா வற்றையும் கொத்தித் தின்று கீழே இரைத்துவிட்டுப் போய் விடுகின்றன. அதைப் பார்க்கும்போதே, சாப்பிடுவதற்கு மனம் வருவதில்லை. மாதத்தில் பாதி நாட்கள் அநேகமாய்ப் பட்டினிதான்."

கோபத்தினால் விஜயாவின் முகம் சிவந்தது; "அம் மாதிரித் தடியன்களை உடனே வேலையினின்றும் நீக்கிவிட்டா லென்ன? இத்தனை சம்பளம் வாங்கியும், வயிற்றுக்குக்

கூடச் சாப்பாடு சரியாய்க் கிடைக்காவிட்டால், நீங்கள் வேலை பார்ப்பதனால் என்ன பிரயோஜனம்?" என்று கேட்டாள்.

நரேந் :—நீங்கள் சொல்வதும் ஒரு வகையில் சரிதான். ஒருநாள் பெட்டியினின்றும் அறுநூறு ரூபாய் நோட்டை யார் எடுத்தார்களோ தெரியவில்லை. பின் ஒரு நாள் நானே நூறு ரூபாய் நோட்டை எங்கோ தொலைத்துவிட்டேன். ஜாக்கிரதை யில்லாதவர்களுக்கு எங்கே போனாலும் தொந்தரவுதானே! துக்கங்களையும், கஷ்டங்களையும் சகித்துச் சகித்து எனக்கு அப்பியாசமாகி விட்டது. ஆகையினால் இதற்கெல்லாம் இப்பொழுது நான் வருந்துவதில்லை. ஆனால் அதிகப் பசியெடுக்கும் பொழுது, பசிப்பிணியை மட்டுந்தான் சகிக்கமுடியவில்லை.

விஜயா பேசாமல் உட்கார்ந்து கேட்டுக்கொண்டிருந்தாள். நரேந்திரன் மீண்டும் சொல்லலுற்றான்: "உண்மையில், ஒருவனிடத்தில் வேலை செய்வதற்கே எனக்குப் பிடிப்பதில்லை. எனக்கு அவசியமான பொருள்கள் மிகக்கொஞ்சம். தங்களைப்போல ஒரு புண்ணியவதி எனக்கு இரண்டு வேளையும் வயிறு நிறையச் சோறு போட்டால், நான் என் வேலையைச் செய்துகொண்டு சந்தோஷமா யிருப்பேன். எனக்கு வேறு ஒன்றுமே அவசியமில்லை. அம்மாதிரி புண்ணியவாளர்கள் இக்காலத்தில் எங்கிருக்கிறார்கள்?" என்று சொல்லி உரத்துச் சிரிக்க ஆரம்பித்தான். விஜயா முன்போலவே பேசாமல் உட்கார்ந்திருந்தாள். நரேந்திரன் மீண்டும், "ஆனால் உங்களுடைய தந்தையார் இப்பொழுது உயிரோடிருந்தால், இவ்விஷயத்தில் எனக்கு நிச்சயமாய் உதவி செய்வார். இம்மாதிரி தர்ம விஷயங்களில் அவருக்கு எப்பொழுதும் வெகு பிரியம்" என்றார்.

விஜயா :—அது எப்படி தங்களுக்குத் தெரியும்? அவரை நீங்கள் பார்த்ததுகூட இல்லையே! எப்பொழுதாவது பார்த்திருக்கிறீர்களா?

நரேந் .—இல்லை. நானும் அவரைப் பார்த்ததில்லை; அவரும் என்னைப் பார்த்திருக்கமாட்டார். ஆனால் அவருக்கு என்மீது வெகு பிரியம். என்னைச் சீமைக்கு அனுப்பியது யாரென்று உங்களுக்குத் தெரியுமா? அவர்தாம். அதிருக்கட்டும். என் கடனைப்பற்றி அவர் தங்களிடத்தில் ஏதாவது சொன்னாரா?

விஜயா :—எதற்காக நீங்கள் அதையெல்லாம் கேட்கிறீர்கள்? அதைச் சொல்லுங்கள். அப்பொழுதுதான் உங்கள் கேள்விக்குப் பதிலளிப்பேன்.

நரேந் :—போனால் போகிறது. அதையெல்லாம் இப்பொழுது அறிந்து என்ன பிரயோஜனம்?

விஜயா :—இல்லை, சொல்லுங்கள். நான் அறிய விரும்புகிறேன்.

நரேந் :—நடந்ததெல்லாம் நடந்துவிட்டது. இனிமேல் அதைப்பற்றித் தாங்கள் அறிந்து என்ன பிரயோஜனம்?

விஜயா :—(பிடிவாதமாய்) இல்லை; அது முடியாது. தாங்கள் கட்டாயம் சொல்லவேண்டும்.

அவளுடைய பிடிவாதத்தையும், ஆத்திரத்தையும் கண்டு நரேந்திரன் நகைத்தான்.

"இப்பொழுது அதைச் சொல்லுவதனால் பிரயோஜனம் இல்லாததோடு மட்டுமல்ல; சொல்வதற்கு எனக்கு வெட்கமாயுமிருக்கிறது. நான் உங்கள் மனத்தைப் புண்படுத்துவதற்காகவே இவற்றையெல்லாம் சொல்லுகிறேன் என்று...."

விஜயா, பொறுமை யிழந்து, நடுவிலேயே குறுக்கிட்டு, "நான் உங்கள் காலில் விழுந்து கெஞ்சுகிறேன், சொல்லுங்கள்" என்றாள்.

நரேந் :—இப்பொழுது என்ன அவசரம்? சாப்பிட்டு முடிந்தபின் சொல்கிறேன்.

விஜயா :—இல்லை, இப்பொழுதே சொல்லவேண்டும்.

நரேந் :—சரி, சொல்லுகிறேன்; ஆனால், முதலில் உங்களிடத்தில் ஒரு விஷயம் கேட்கவேண்டும்: எங்கள் வீட்டைப்பற்றி அப்பா உங்களிடத்தில ஒன்றும் சொல்லவில்லையா?

விஜயா பொறுமை யிழந்து துடித்துக்கொண்டிருந்தாள். நரேந்திரன் புன்னகையுடன் சொல்லலுற்றான்: "சரி கோபித்துக்கொள்ளாதீர்கள்; நான் சொல்லிவிடுகிறேன். வனமாலி பாபுவே என்னைச் சீமைக்கு அனுப்பினார் என்று என் தந்தையார் முன்னமேயே சொல்லியிருக்கிறார்! மூன்று நாட்களுக்கு முன்பு, தயால் பாபு என்னிடம் பழைய கடிதங்களடங்கிய கட்டு ஒன்றைக் கொடுத்தார். என் வீட்டில் ஒரு பழைய மேஜை 'டிராய'ரில் அது இருந்ததாம். என் தகப்பனாருக்குச் சொந்தமான கடிதங்களாகையால், அவர் அதை என் கையிலேயே கொடுத்தார். அதை அவிழ்த்துப் பார்த்தபொழுது, அவைகளில் இரண்டு கடிதங்கள், தங்கள் தகப்பனாரால் என் தகப்பனாருக்கு எழுதப்பட்டவைகளா யிருந்தன. கடன் அதிகரிக்கவே, இறுதியில் என் தகப்பனார் குதிரைப் பந்தயங்களுக்குச் செல்லவாரம்பித்தார் என்பது உங்களுக்குந் தெரிந்திருக்கலாம். அவைகளில் ஜயித்தாவது கடனைத் தீர்த்துவிடலாம் என்று நினைத்தார்போலும்! ஒரு கடிதத்தின் ஆரம்பத்தில் அதைப்பற்றித்தான் குறிப்பிட்டிருக்கிறது. அவருக்குப் புத்திமதி கூறிக் கடைசியில் கடிதத்தின் கீழே, 'வீட்டைப்பற்றி உனக்கு ஒரு கவலையும் வேண்டாம். நரேந்திரன் எனக்கும் புத்திரன்தான். ஆகையினால் அதை அவனுக்கு

நான் இனமாகக் கொடுக்கிறேன்' என்று உங்கள் அப்பா எழுதியிருக்கிறார்.

விஜயா :—அதற்கப்புறம் என்ன எழுதியிருக்கிறார்?

நரேந் :—அதற்கப்புறம் அநேக விஷயங்களைப்பற்றி எழுதியிருக்கிறார். ஆம், இக்கடிதம் வெகு நாட்களுக்கு முன்பு எழுதப்பட்டது. பின்னால் ஒருவேளை, அவ்வெண்ணம் மாறியிருக்கலாம்; ஆகையினால்தான், அதைப் பற்றித் தங்களிடத்தில் ஒன்றும் சொல்லவில்லைபோலும்!

பிதாவின் அந்தியகால வேண்டுகோள் விஜயாவின் ஹிருதயத்தில் முன்னமேயே நன்கு பதிந்திருந்தது. இப்பொழுது நரேந்திரன் அதை ஞாபகமூட்டவே, தன்னையும் அறியாமல் அவள் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டாள்; "அப்படியானால் தாங்கள் அவ்வீட்டைப்பற்றித் தாவா செய்வீர்கள் என்று சொல்லுங்கள்" என்றுகூறிச் சிரித்தாள்.

நரேந்திரனும் சிரித்தான். "கட்டாயம் தாவா செய்வேன்; அதற்குத் தங்களையே சாக்ஷியாய்ப் போடப்போகிறேன். நீங்கள் பொய் சொல்லமாட்டீர்களே!" என்றான்.

விஜயா :—(தலையை ஆட்டிக்கொண்டு) என்னை எதற்காகச் சாக்ஷியாய்ப் போடப்போகிறீர்கள்?

நரேந் :—இல்லையானால் என் கேஸ் எப்படி ஜயிக்கும்?

விஜயா :—(கம்பீர பாவனையுடன்) நீதிஸ்தலத்திற்குப் போகவேண்டிய அவசியம் என்ன நேர்ந்தது? தந்தையாரின் ஆக்ஞையைவிடப் பெரிய தீர்ப்பு ஒன்று இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அவ்வீட்டை நானே உங்களுக்குக் கொடுத்துவிடுகிறேன்.

நரேந் :—அக்கடிதத்தைப் பாராமலேயே, வீட்டை எனக்குத் திரும்பக் கொடுத்துவிடுவீர்களல்லவா?

விஜயா :—அது முடியாது. கடிதத்தை நான் அவசியம் பார்க்கவேண்டும். அதில் தாங்கள் சொல்வதுபோல்

எழுதியிருந்தால், நான் அவருடைய ஆக்ஞையை எவ்விதத்திலும் மீறமாட்டேன்.

நரேந் :—ஆனால் கடைசிவரைக்கும் அவர் அதே தீர்மானத்துடனேயே இருந்தார் என்பதற்கு என்ன பிரமாணம் இருக்கிறது ?

விஜயா :—அவருடைய தீர்மானம் பின்னால் மாறி விட்டது என்பதற்கும் பிரமாணம் இல்லையல்லவா ?

நரேந் :—வீட்டைப் பெற்றுக்கொள்ள நான் மறுத்து விட்டால் ?

விஜயா :—அது தங்களுடைய இஷ்டம். நீங்கள் மறுத்தால் உங்களுடைய சிற்றப்பா பிள்ளைக்குக் கொடுத்து விடுகிறேன். அவர் பெற்றுக்கொள்ள மறுக்கமாட்டார் அல்லவா ?

நரேந் :—நான் பெற்றுக்கொண்டாலும், கொள்ளா விட்டாலும், நீங்கள் அதைக் கொடுத்தே விடுவீர்கள் ; அப்படியா ?

விஜயா :—அப்பா ஒருவருக்குக் கொடுத்த பொருளை, நான் பறித்துக்கொள்ள விரும்பவில்லை. சத்தியமாய்ச் சொல்கிறேன்.

விஜயாவின் உறுதியான தீர்மானத்தைக் கண்டு, நரேந்திரன் ஆச்சரிய முற்றான். “ தாங்கள் அவ்வீட்டை ஒரு நல்ல காரியத்திற்காகத் தானம் செய்துவிட்டீர்கள். நானும் அது எனக்கு வேண்டாமென்று சொல்லுகிறேன். அப்படியிருக்கத் தாங்கள் அதைக் கட்டாயமாகக் கொடுப்பதன் அர்த்தம் என்ன ? மேலும், அதைத் திரும்பப்பெற்று நான் என்ன செய்யப் போகிறேன் ? எனக்கோ மனைவி மக்கள் இல்லை ; தனி ஆள். எங்காவது வேலைசெய்து பிழைத்துக்கொள்வேன். இப்பொழுது இருக்கிறபடியே இருக்கட்டும். மேலும் இன்னொரு விஷயம்

இதற்கு விலாஸ் பாபுவின் சம்மதத்தைப் பெறத் தங்களால் ஒருகாலும் முடியாது.

இக்கடைசி வார்த்தைகளைக் கேட்டதும், விஜயாவுக்குக் கோபம் பொறுக்க முடியவில்லை ; "என்னுடைய பொருளைக் கொடுப்பதற்கு மற்றொருவர் சம்மதத்தை நான் ஏன் கேட்க வேண்டும்? நீங்கள் இன்னொன்று செய்யலாமல்லவா ? உங்களுக்கு வீடு அவசியமில்லாவிட்டால், அதன் விலையையாவது என்னிடமிருந்து ரொக்கமாகப் பெற்றுக்கொள்ளுங்கள். அவ்விதம் செய்வதால், ஒருவரிடத்தில் வேலை பார்க்க வேண்டிய தொல்லையும் தங்களுக்கு நீங்கும். சுயேச்சையாக நீங்களே ஏதாவது தொழிலை ஆரம்பிக்கலாமே ? இதற்காவது சம்மதியுங்கள், நரேந்திர பாபு!" என்றாள்.

இப்பரிதாபகரமான வேண்டுகோள் நரேந்திரனுடைய உள்ளத்தில் அம்புபோல் தைத்தது. விஜயா கீழே குனிந்து கொண்டிருந்ததனால், நரேந்திரனால் அவளுடைய முகத்தைப் பார்க்க முடியவில்லை ; என்றாலும் இது வெறும் பாசாங் கல்லவென்பது அவனுக்கு நிச்சயமாகத் தெரிந்தது. தந்தையார் பட்ட கடனுக்காகத் தனயனைத் தெருவில் அலைய விடுவதில் அவளுக்குக் கொஞ்சமேனும் இஷ்டமில்லை ; மிகுந்த துக்கப்படுகிறாள் ; ஏதாவது ஒரு போலிச் சாக்குச் சொல்லி அவ்வீட்டைத் தனக்குத் திருப்பிக் கொடுத்துவிட யத்தனிக் கிறாள் என்பது நரேந்திரனுக்குத் தெளிவாய் விளங்கி விட்டது. ஆனால் விஜயாவுக்கு அத்தகைய கருணை இருந்த போதிலும், அவன் எப்படி அதை ஏற்றுக்கொள்ள முடியும்? அவ்வீட்டின்மீது இப்பொழுது அவனுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? அவளிடமிருந்து, அதை அவன் யாசகம் போல் ஏற்றுக்கொள்வதா? இன்னொரு விஷயம்: கோபத்தில் இப்பொழுது அவள் விலாஸைப்பற்றி என்ன சொன்னாலும், கடைசி வரைக்கும் அவனை எதிர்த்துத் தன் தீர்மானத்தை

நிறைவேற்றும் சக்தி அவளுக்கு இல்லை என்பது நரேந்திர னுக்கு நன்றாகத் தெரியும். ஆகவே இதனால் விஜயாவுக்குத் துன்பமும், கவலையுந்தான் அதிகரிக்குமே யொழிய, வேறு ஒரு பிரயோஜனமும் உண்டாகாதென்று அவன் எண்ணினன்.

நரேந் :—உங்கள் மனத்திலிருப்பதை நான் அறிந்து கொண்டேன். ஏதாவது ஒரு சாக்குச் சொல்லி என்னைப் போன்ற ஏழைகளுக்கு உதவிசெய்ய விரும்புகிறீர்கள்.

முன்னொருமுறை நரேந்திரன் இதே மாதிரி சொல்லி யிருக்கிறன். மீண்டும் அவன் இம்மாதிரி சொல்லவே,விஜயா சொல்லொணாத் துயருற்றாள்; "இதைக் கேட்கும்பொழுது, எனக்கு எவ்வளவு கஷ்டமாயிருக்கிறதென்பது தங்களுக் குத் தெரியுமா ?" என்றாள் அவள்.

நரேந்திரன் ஒன்றும் பதில் சொல்லாமல் சிரித்தான்.

விஜயா :—நான்தான் ஆதியிலிருந்தே என் உள்ளத்தி லிருப்பதைத் தங்களுக்குச் சொல்லிக்கொண்டு வருகிறேன். உங்கள் மனத்தில் பரிசுத்தமில்லாததனால் அதை நம்பமாட் டேன் என்கிறீர்கள். நீங்கள் ஏழையாக இருந்தால் என்ன ? கோடீசுவரராயிருந்தால் என்ன? அதைப்பற்றி எனக்கென்ன கவலை ? நான் தந்தையாரின் ஆக்ஞையை நிறைவேற்றுவதற் காகவே, தங்களுக்கு வீட்டைத் திருப்பிக்கொடுக்க விரும்பு கிறேன்.

நரேந் :—சரி, தந்தையாரின் ஆக்ஞையைப் பூர்த்திசெய் யப் போவதாகத் தாங்கள் பிரமாதமாய்ப் பிரதிக்ஞை செய் கிறீர்கள் ; ஆனல் அப்படிச் செய்வதாயிருந்தால் இன்னும் என்ன என்ன திருப்பிக் கொடுக்கவேண்டி நேரிடும் என்பது தங்களுக்குத் தெரியுமா ? அவ்வீடு ஒன்றுதான். என்று நினையாதீர்கள்.

விஜயா :—ரொம்ப நல்லது; உங்கள் சொத்து முழுவதையும் பெற்றுக்கொள்ளுங்கள். அவ்வளவுதானே?

நரேந்திரன் சிரித்துக்கொண்டே தலையாட்டினன்; "அந்த வீடும், சில ஏக்கர் நிலமும் மட்டுமல்ல; இன்னும் எவ்வளவோ இருக்கிறது" என்ருன்.

விஜயா :—இன்னும் என்ன என்ன உங்களுக்கு அப்பா கொடுத்திருக்கிருர்.

நரேந் :—அவருடைய கடிதம் என்னிடத்தில்தான் இருக்கிறது. எனக்கு வீடுமட்டும் கொடுத்ததோடு அவர் நிற்கவில்லை. உங்களுக்கு முன்னல் நீங்கள் என்ன என்ன பார்க்கிறீர்களோ, அத்தனையும் எனக்குக் கொடுத்திருக்கிருர். இந்த வீடு, இவ்வறை, இம்மேஜை, நாற்காலி, கண்ணுடி முதலியவைகள், இவ்வீட்டிலுள்ள வேலைக்காரிகள், கச்சேரியிலுள்ள குமாஸ்தாக்கள், அப்புறம் அவர்களுடைய எஜமானி — இத்தனையும் எனக்குக் கொடுத்திருக்கிருர். தந்தையாரின் ஆக்ஞை, தந்தையாரின் ஆக்ஞை என்கிறீர்களே, எங்கே இப்பொழுது இத்தனையும் கொடுங்கள் பார்ப்போம்.

விஜயாவின் சரீரம் முழுவதும் மின்சாரசக்தி பாய்ந்ததுபோலிருந்தது. ஒரு பதிலும் சொல்லாமல் கற்சிலைபோல் பேசாது தலைகுனிந்து உட்கார்ந்திருந்தாள்.

"இத்தனையும் உன்னல் கொடுக்க முடியுமா? ஒருமுறை விலாஸ் பாபுவைத் தனியே அழைத்து யோசனை கேட்டுப் பார்" என்று நரேந்திரன் சொல்லி உரத்துச் சிரிக்க ஆரம்பித்தான்.

ஆனல் விஜயா தலை நிமிர்ந்ததும், அவனுடைய சிரிப்பெல்லாம் பறந்துவிட்டது. அவளுடைய முகத்தில் ஒரு துளி ரத்தமேனும் இல்லை. அதைக் கண்டதும் நரேந்திரன் திடுக்கிட்டு, "உங்களுக்கு என்ன பைத்

தியம் பிடித்துவிட்டதா ? நான் நிஜமாகவே இவை அத்தனைக்கும் தாவா செய்யப்போகிறேன் என்று நினைத்தீர்கள் போலும்! அப்படிச் செய்தாலும் எனக்கு அவை கிடைக்குமா? நான் அங்ஙனம் செய்வேனாயின்,என்னைப் பைத்தியக்கார ஆஸ்பத்திரியில்தான் கொண்டுபோய் அடைப்பார்கள்!" என்றான்.

விஜயா இவ்வார்த்தைகள் ஒன்றையும் கவனியாதவள் போல், "எங்கே, அக்கடிதத்தைப் பார்ப்போம்" என்றாள்.

நரேந் :—(ஆச்சரியத்துடன்) நான் என்ன கடிதத்தை ஜேபியில் போட்டுக்கொண்டா அலைகிறேன்? மேலும் அதைப் பார்ப்பதினால் உங்களுக்கென்ன லாபம் ?

விஜயா :—அதைப்பற்றி உங்களுக்கு ஒரு கவலையும் வேண்டாம். வேலைக்காரன் வசம் அவ்விரண்டு கடிதங்களையும் கொடுத்தனுப்புங்கள். அவன் இப்பொழுது உங்களோடு கல்கத்தா வருவான்.

நரேந் :—அதற்கு இவ்வளவு அவசரமா ?

விஜயா :—ஆம்.

# இருபத்துமூன்றும் அத்தியாயம்

## கடைசித் தந்திரம்

அன்றிரவு முழுவதும் விஜயாவுக்குத் தூக்கமில்லை. காலை வெகு நேரத்திற்கு அப்புறம் எழுந்து கீழே வந்த பொழுது, ஒரு கிழக் குமாஸ்தா ஜமீன் கணக்குகளுடன் முற்றத்தில் தனக்காகக் காத்துக்கொண் டிருப்பதைக் கண்டாள். "அம்மா, இந்தக் கணக்குகளையெல்லாம் இன்று நீங்கள் பரிசோதித்துக் கையெழுத்திட வேண்டும்" என்று அவர் வினயத்துடன் கூறினர்.

இரண்டு மணி நேரங் கழித்து அவரை வரும்படி சொல்லிவிட்டு, அக்கணக்குகளை எடுத்துக்கொண்டு மாடிக் குச் சென்று ஜன்னலுக்குப் பக்கத்தில் ஒரு நாற்காலியைப் போட்டு உட்கார்ந்தாள். ஆனல் அவளுடைய கவனம் அன்று கணக்குகளிலே செல்லவில்லை; அவள் கண்கள் ஜன்னலுக்கு வெளியே இங்குமங்கும் சென்றன. தோப் பின் ஒரு மூலையில், ஒரு மரத்தடியில் ராஸ் விஹாரி சதீசனை ஏதோ கேட்டுக்கொண்டிருப்பது திடீரென்று அவளுடைய கண்களுக்குத் தென்பட்டது. சுட்டு விரலினல் சில சம யம் கீழேயுள்ள முற்றத்தைக் காண்பிப்பதும், சில சமயம் மேல் மாடியைக் காண்பிப்பதுமா யிருந்தார். இருவரும் என்ன பேசுகிருர்கள் என்பது கொஞ்சங்கூடக் கேளாவிட் டாலும், கிழவருடைய முகக் குறிகளினின்றும், விஜயா எல்லா மர்மங்களையும் அறிந்துகொண்டாள்.

சிறிது நேரத்திற்குப் பின் கிழவர் சிறுவனை விட்டு விட்டுக் கச்சேரியை நோக்கிச் சென்றுவிட்டார். சதீசன்

வீட்டை நோக்கி வந்துகொண்டிருந்தான். விஜயா ஜன்னலி னின்றும் அவனைக் கையலைத்துக் கூப்பிட்டு, "உன்னிடத் தில் பாபு என்ன கேட்டுக்கொண்டிருந்தார்?" என்றாள்.

சதீஷ் :—குமாஸ்தாவிடத்தில் காசு வாங்கிக்கொண்டு நான் பட்டமும் கயிறும் வாங்கப் போய்விட்டேனல்லவா? டாக்டர் பாபு சாப்பிட்டுக் கொண்டிருந்தபொழுது நான் இங்கிருந்தேனா?

விஜயா :—இல்லை.

சதீஷ் :—என்ன என்ன பேச்சு நடந்தது, அவ்வளவை யும் சொல், இல்லையானால் உன்னைச் சிப்பாயினிடத்தில் பிடித்துக்கொடுத்து, சவுக்கினால் அடிக்கச் சொல்வேன் என்று பெரிய பாபு சொல்கிறார், அம்மா. எனக்கு என் னம்மா தெரியும்? தெரியாதல்லவா? 'பாபுஜி, இந்தப் புது வேலைக்காரன் உங்களிடத்தில் பொய்யும் புளுகும் சொல்லி யிருக்கிறான்; அம்மா என்னிடத்தில், அடே சதீஷ்! ஓட்ட மாய் ஓடி டாக்டர் பாபுவைக் கூட்டிக்கொண்டு வா, நான் உனக்கு நல்ல பட்டமும் கயிறும் வாங்கித் தருகிறேன் என்று சொன்னார்கள். ஆகையினால் நான் ஓடினேன். அதற்குமேல் எனக்கு ஒன்றும் தெரியாது' என்றேன். ஆனால் பெரிய பாபுவிடத்தில் இதைச் சொல்லாதிங்க, அம்மா! உங்களிடத்தில் சொல்லக் கூடாதென்று அவர் சொல்லியிருக்கிறார்!

சதீசனை அனுப்பிவிட்டு, மீண்டும் விஜயா நாற்காலியில் வந்து உட்கார்ந்து, கணக்குப் புஸ்தகங்களைத் திறந்தாள். ஆனால் அதிலுள்ள எழுத்துக்களில் ஒன்றேனும் அவள் கண் களுக்குத் தெரியவில்லை. இரவு முழுதும் விழித்திருந்ததனால் முன்னமேயே சிவந்திருந்த கண்கள், இப்பொழுது அளவு கடந்த கோபத்தினால் நெருப்புத் துண்டுகள்போல் எரிய ஆரம்பித்தன.

இப்படியிருக்கையில் கைத்தடியைத் தரையில் 'கட் கட்' என்று ஊன்றிக்கொண்டு, ராஸ் விஹாரியே சிறிது நேரத்தில் வீட்டிற்குள் நுழைந்தார். விஜயாவின் கவனத்தைத் தம் பக்கம் இழுப்பதற்குச் சற்று இருமி, ஒரு நாற்காலியை இழுத்து அதன்மீது உட்கார்ந்தார்.

"வாருங்கள்" என்று தன் மனத்திலுள்ள கோபத்தையெல்லாம் அடக்கிக்கொண்டு விஜயா சொன்னாள்.

அவளுடைய கண்களைக்கண்டதும் ராஸ் விஹாரி மிகவும் திடுக்கிட்டவர்போல், "மகளே, உன் கண்கள் ஏனம்மா இவ்வளவு சிவந்திருக்கின்றன? ஏதாவது ஜுரம் - கிரம் அடிக்கிறதா?" என்று கேட்டார்.

விஜயா :—இல்லை.

ராஸ் :—நீ 'இல்லை' என்று சொன்னவுடன் நான் நம்பிவிடுவேனா? கண்கள் இவ்வளவு சிவப்பேறி இருப்பதற்கு ஏதாவது காரணம் இருக்கவேண்டும். இரவு, நல்ல தூக்கம் இருந்திராது; அல்லது...... ....

விஜயா :—அப்படி ஒன்றுமில்லை, சிற்றப்பா.

ராஸ் :—பின் இம்மாதிரி கண்கள் சிவப்பதற்குக் காரணம் என்ன?

அவரோடு வாதாடிக்கொண்டிருக்கத் தனக்கு நேரமில்லை என்று விஜயா பேசாமல் தன் வேலையைக் கவனிக்க ஆரம்பித்தாள். இதைக் கண்டதும் ராஸ் விஹாரி ஆச்சரியமுற்று, சிறிது நேரம் சும்மாவிருந்தபின் சொல்லலானார்: "மகளே, பழைய தஸ்தாவேஜிகளையெல்லாம் ஒருமுறை பார்க்கவேண்டியிருக்கிறது. கோஷ்பாடா எல்லை சம்பந்தமாகச் சௌதுரிகள் வழக்குத் தொடரப்போகிறார்களாமே, கேள்விப்பட்டாயா?

ஜமீன் சம்பந்தப்பட்ட முக்கியமான தஸ்தாவேஜிகளையெல்லாம், வனமாலி பாபு தம்மிடத்திலேயே வைத்துக்

கொள்வது வழக்கம். ஒன்று, அத்தஸ்தாவேஜிகளுக்கு அடிக்கடி அவசியம் ஏற்படுவதில்லை; இரண்டாவதாக, மற்றொருவர் கைக்குப் போனால் அவை தொலைந்துவிடுமென்ற பயம். இத்தகைய காரணங்களினால், அவைகளை வனமாலி பாபு தம் பெட்டியினின்றும் வெளியேற்றுவதே கிடையாது. கல்கத்தாவிலிருந்து கிராமத்திற்கு வந்தபொழுது, விஜயாவும் அந்தக் காகிதங்களையெல்லாம் தன்னுடனேயே எடுத்துக் கொண்டுவந்து, இரும்புப் பெட்டியில் பூட்டிவைத்திருந்தாள்.

"அவர்கள் வழக்குத் தொடரப்போகிறார்கள் என்று தங்களிடம் யார் சொன்னது?" என்று விஜயா கேட்டாள்.

ராஸ்:—(சிரித்துக்கொண்டு) இதெல்லாம் ஒருவர் சொல்லியா தெரியவேண்டும், மகளே? எனக்குத்தான் கம்பியில்லாத் தந்தி வந்துவிடுமே! இதுகூடத் தெரியாவிட்டால், இவ்வளவு பெரிய ஜமீனை இதுவரையில் மேற்பார்த்துக் கொண்டிருக்க முடியுமா?

விஜயா:—இப்பொழுது எவ்வளவு நிலத்திற்குத் தாவா செய்கிறார்கள்?

ராஸ்:—(மனத்துக்குள் கணக்குப் போட்டுப் பார்த்து) குறைந்த பக்ஷம் இரண்டு ஏக்கர் நிலமாகும்.

விஜயா:—அவ்வளவுதானே! எடுத்துக் கொண்டு போகட்டுமே! கேவலம் இரண்டு ஏக்கர் நிலத்திற்காக, அவர்களோடு எதிர் வழக்காடி ஆயிரக் கணக்கில் ரூபாயைப் பாழாக்க எனக்கு இஷ்டமில்லை.

இதைக் கேட்டதும் ராஸ் விஹாரி திகிலடைந்தார்; "மகளே, நீ எல்லாம் அறிந்தவளாயிருந்தும் இப்படிப் பேசலாமா? இன்று இரண்டு ஏக்கர் நிலமாகையால் விட்டுக் கொடுத்து விட்டாய்; நாளைக்கு இருநூறு ஏக்கர் நிலத்திற்குத் தாவா செய்வார்கள்; அப்பொழுது என்ன செய்யப் போகிறாய்?" என்று கேட்டார்.

விஜயா :—அவ்விதம் அவர்கள் செய்யும்பொழுது பார்த்துக்கொள்வோம். அற்ப விஷயங்களுக்காகக் கோர்ட்டுக்குச் சென்று பணத்தை வீணுக்க நான் சம்மதிக்க மாட்டேன்.

ராஸ் :—இது ஒருகாலும் முடியாது மகளே; ஒரு காலும்முடியாது. உன் தகப்பனுர் எல்லாப் பாரத்தையும் என் மீதுபோட்டுவிட்டுப்போயிருக்கிறுர். நான் உயிரோடிருக்கும் வரையில் இரண்டு ஏக்கரென்றுல் அதிகம். இரண்டு அங்குல நிலங்கூட, எதிர் வழக்காடாமல் விட்டுக் கொடுக்கமாட்டேன்! தவிர, இன்னும் அநேக காரணங்கள் இருக்கின்றன; அவைகளுக்காகப் பழைய தஸ்தாவேஜிகளை நான் அவசியம் பார்க்கவேண்டும். சிறிது கஷ்டத்தைப் பாராமல், பெட்டியை எடுத்துக்கொண்டு வா, அம்மா.

விஜயா எழுந்திருப்பதாய்த் தெரியவில்லை; "இன்னும் என்ன காரணம் இருக்கிறது?" என்று கேட்டாள்.

ராஸ் :—இருக்கிறது மகளே; அதையெல்லாம் நினைத்தவுடனே உன்னிடத்தில் சொல்லிவிட முடியுமா?

கணக்குகளையெல்லாம் எடுத்துக்கொண்டு போவதற்காகக் கிழக்குமாஸ்தா அச்சமயம் அறைக்குள் நுழைந்தார். "இப்பொழுது அவைகளைப் பார்ப்பதற்கு முடியவில்லை; சாயந்திரம் வந்து எடுத்துக்கொண்டு போங்கள்" என்றுள் விஜயா.

"நல்லது" என்று சொல்லிக் குமாஸ்தா திரும்பினுர். அதற்குள் விஜயா அவரைக் கூப்பிட்டு, "கச்சேரியில் புது வேலைக்காரன் ஒருவன் வந்திருக்கிறுனே, வந்து எத்தனை மாதங்களாகின்றன?" என்று கேட்டாள்.

குமாஸ்தா :—சுமார் மூன்று மாதங்களிருக்கும்.

விஜயா :—நல்லது, எத்தனை மாதமானுலும் சரி, இப்பொழுது அவன் நமக்கு அவசியமில்லை. இந்த மாதம் முடிவ

தற்கு இன்னும் 15, 20 நாட்களிருக்கின்றன. இம்மாதத்திற்குப் பூராச் சம்பளத்தையும் கொடுத்து, அவனை இன்றே அனுப்பிவிடுங்கள். தெரிகிறதா ?

குமாஸ்தா ஆச்சரியத்துடன், விஜயாவின் முகத்தைப் பார்த்தார். அவன் என்ன குற்றம் செய்தான் என்று கேட்க வாயெடுத்தார்; ஆனால் தைரியம் வரவில்லை.

விஜயாவுக்கு விளங்கிவிட்டது; "விசேஷ குற்றம் ஒன்றுமில்லை; ஆனால் அவ்வளவு நல்லவனாக அவன் எனக்குத் தெரியவில்லை. ஆகையினால்தான் அவனை வேலையினின்றும் நீக்குகிறேன். ஆனால் பூராச்சம்பளத்தையும் கொடுத்துவிடுங்கள்" என்றாள்.

நொடிப்பொழுது ராஸ் விஹாரியின் முகம் சிவந்தது. ஆனால் அடுத்த நிமிஷமே அதைச் சமாளித்துக்கொண்டு, "குற்றமில்லாமல், ஒருவனுடைய ஜீவனத்தைக் கெடுப்பது நன்றாயிருக்கிறதா ?" என்று கேட்டார்.

விஜயா இதற்கு ஒரு பதிலும் சொல்லாமல் பேசாமலிருப்பதைக் கண்டதும் குமாஸ்தா, "அப்படியானால், அவனை........" என்றார்.

"ஆம், இன்றே அனுப்பிவிடுங்கள்" என்று சொல்லிவிட்டு, விஜயா மீண்டும் கணக்குகளைப் பார்க்க ஆரம்பித்தாள். குமாஸ்தா சென்றுவிட்டார். ராஸ் விஹாரி நாலைந்து நிமிஷங்கள் வரையில் பேசாமல் உட்கார்ந்திருந்தார். பின்பு, மீண்டும் தம் பழைய பேச்சை எடுத்தார்; "சற்று எழுந்திராமல் காரியம் நடவாது, மகளே ! பழைய தஸ்தாவேஜிகளையெல்லாம் ஆதியிலிருந்து அந்தம் வரைக்கும் நான் இன்றே படித்தாகவேண்டும்" என்றார்.

விஜயா :—ஏன் ?

ராஸ் :—முக்கிய காரணம் இருக்கிறது என்று முன்னமே சொன்னேனே, அம்மா ! மீண்டும் அதே கேள்வி

யைத் திரும்பத் திரும்பக் கேட்டால் நான் என்ன சொல்வது?

விஜயா :—முக்கிய காரணம் இருக்கிறது என்று சொல்லுகிறீர்களே யொழிய அது என்னவென்று சொல்ல மாட்டேன் என்கிறீர்கள்?

ராஸ் :—காரணம் சொன்னால் ஒழிய நீ எழுந்திருக்க மாட்டாயா? அப்படியானால் என்மீது உனக்கு நம்பிக்கை இல்லையா?

விஜயா இதற்கு ஒன்றும் பதில் சொல்லாமல், கணக்கு களைப் பார்த்துக் கொண்டிருந்தாள். இதைக் கண்டதும் கிழவருக்குக் கோபம் பொறுக்கமுடியவில்லை. கையிலுள்ள தடியினால் தரையை ஓங்கிக் குத்தி, "என்ன காரணத்தினால் நீ இவ்வாறு என்னை அவமானப் படுத்துகிறாய், விஜயா? என்மீது உனக்கு நம்பிக்கை இல்லையா?" என்றார்.

விஜயா :—நீங்களும் என்னை நம்பமாட்டேன் என் கிறீர்களல்லவா! என்னுடைய பணத்தைக் கொண்டே எனக்கு ஒற்று வைத்தால், என் மனம் எவ்வளவு புண்படும் என்பது தங்களைப்போன்ற அனுபவசாலிகளுக்குத் தெரி யாதா? என் ஜமீன் சம்பந்தமான முக்கிய தஸ்தாவேஜிகளைத் தாங்கள் கைப்பற்ற எண்ணுவதன் நோக்கம் என்னவா யிருக்குமோ என்று நான் சந்தேகிப்பது நியாயந்தானே? அது எப்படித் தங்களை அவமானப் படுத்துவதாகும்?

ராஸ்விஹாரி பிரமித்துப் போனார். ஆடம்பரத்துடனும், செல்வத்துடனும் கல்கத்தாவில் இதுவரை சொகுசாக வளர்ந்துவந்த ஒரு சிறு பெண், தம்முடைய ஜாலங்களையும் தந்திரங்களையும் இவ்வளவு எளிதில் அறிந்துகொள்வாள் என்று அவர் கனவிலும் நினைக்கவில்லை.

ராஸ் விஹாரி வெகுநேரம் வரைக்கும் பேசாமல் உட்கார்ந்திருந்துவிட்டு, மீண்டும் ஒருமுறை யுத்தத்திற்குத்

தயாரானர். சிறிதேனும் கருணையில்லாமல், தம் கடைசி அஸ்திரத்தை எடுத்துச் சகாயமற்ற அவ்வபலையின்மீது தொடுத்தார்; "வனமாலியினுடைய மரியாதையைக் காப்பாற்றுவதற்காகவே, நான் இக்காரியம் செய்ய முற்பட்டேன். நண்பருடைய மகளாயிற்றே என்பதனுல்தான் இவ்வளவு தூரம் உன் விஷயத்தில் கவலை யெடுத்துக்கொண்டேன். முன்பின் தெரியாத ஒரு போக்கிரிப் பயலைச் சிறுவனைவிட்டுக் கூப்பிட்டுக் கொண்டு வந்து, சாப்பாடு போட்டு, நாள் முழுவதும் அவனோடு இருந்தாயே, அதன் அர்த்தம் என்ன? அது மட்டுமா? அன்று பாதி ராத்திரி வரைக்கும் அவனோடு கொஞ்சிக் குலாவினதோடு திருப்தி யடையாமல், அன்றிரவு அவனைக் கல்கத்தா திரும்பிச் செல்லவும் விடவில்லை; ஏதோ சாக்குச் சொல்லி இங்கேயே தங்கிவிட்டுச் செல்லும்படி அவனை வேண்டிக்கொண்டாய். ஊரெல்லாம் இதே பேச்சு! எங்களுக்கு வெளியேறுவதற்கும் வெட்கமாயிருக்கிறது!" என்றார்.

சிறிது நேரம் வரை ராஸ் விஹாரி, விஜயாவின் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தார். "மகளே, இதெல்லாம் நன்றாயிருக்கிறதா? உன்னை நல்வழிப்படுத்துவது என் கடமையல்லவா?" என்று கேட்டார்.

விஜயா முன்போலவே மௌனமா யிருப்பதைக் கண்டதும் ராஸ் விஹாரி மீண்டும், "பேசாமலிருப்பதால் காரியம் நடவாது மகளே! கட்டாயம் நீ இதற்குப் பதில் சொல்லவேண்டும்" என்றார்.

பின்னும் விஜயா பேசாமலிருந்தாள். உடனே ராஸ் விஹாரி தரையின்மீது தடியினுல் ஓங்கி அடித்து, "மௌனம் சாதிப்பதில் பிரயோஜனமில்லை மகளே. பதில் சொல்லியே தீரவேண்டும்" என்றார்.

இவ்வளவு நேரத்திற் கப்புறம், விஜயா தலைநிமிர்ந்தாள்; "தாங்கள் என்மீது இம்மாதிரி வீண்பழி சுமத்தினால், நான் என்ன பதில் சொல்வது?" என்று விஜயா மிக்க அமைதியுடனும் சாந்தத்துடனும் கேட்டாள்.

ராஸ்:—இதைப் பொய்யென்று சொல்லி என்னை ஏமாற்றப் பார்க்கிறாயா?

விஜயா:—சிற்றப்பா, நான் உங்களை ஏமாற்றப் பார்க்கவில்லை. என்மீது சாட்டப்படும் இப்பழி யாதோர் ஆதாரவு மற்றது என்றுமட்டும் சொல்ல விரும்புகிறேன். தங்களுக்கும் அது தெரியாததல்ல.

விஜயா இம்மாதிரி பதிலளிப்பாள் என்று ராஸ் விஹாரி கனவிலும் நினைக்கவில்லை. என்ன பதில் சொல்வதென்று தெரியாமல், "நான் உன்மீது வீண்பழியா சுமத்துகிறேன்?" என்று கேட்டார்.

விஜயா:—அதைப்பற்றி இப்பொழுது உங்களோடு தர்க்கஞ் செய்ய என்னால் முடியாது. தஸ்தாவேஜிகளைப் பற்றிய விஷயம் அப்படியே இருக்கட்டும். வழக்குத்தொடர வேண்டிய அவசியம் ஏற்படும்பொழுது, நான் உங்களைக் கூப்பிட்டு விடுகிறேன்.

இவ்விதம் சொல்லி விஜயா எழுந்து வீட்டிற்குள் போய்விட்டாள்.



# இருபத்து நான்காம் அத்தியாயம்

## தந்தையாரின் கடிதம்

இக்கிழ வேடனுடைய வலையினின்றும் தப்புவதற்காக, மறுநாட் காலையிலேயே எந்த விதத்திலாவது கல்கத்தாவிற்கு ஓடிவிடவேண்டுமென்று விஜயா முதலில் நினைத்தாள். ஆனால் பின்பு நன்றாக யோசித்துப் பார்த்ததில், அவ்விதம் செய்வதனால் யாதொரு பிரயோஜனமும் இல்லாமற் போவதோடு, தனக்குக் கெட்ட பெயரும் வரும் என்று அவளுக்குத் தோற்றியது. கல்கத்தா சமாஜத்தில் அவள் எப்படித் தன் முகத்தைக் காண்பிப்பாள்? கிராமத்திலுங்கூட அவளுக்குத் தன்னறையைவிட்டு வெளியேறுவது கஷ்டமாகிவிட்டது! ராஸ்விஹாரி அவளைத் தம் வசமாக்குவதற்காகவே இப்போலி அபவாதத்தைச் சிருஷ்டித்திருக்கிறார் என்றும், பூரா நம்பிக்கையும் இழந்தால் ஒழிய அதை வெளியில் பரவவிடமாட்டார் என்பதும் அவளுக்கு நிச்சயமாய்த் தெரிந்துவிட்டன. ஆயினும் இரண்டு தினங்களுக்கப்புறம், ஒரு கணக்குப் புத்தகத்தில் கையெழுத்து வாங்குவதற்காக, விஜயாவை ஒரு குமாஸ்தா பார்க்கவந்தபொழுது, உடம்புக்கு சௌகரியமில்லை என்பதாக, வேலைக்காரன் மூலம் அக்கணக்கை மாடிக்குக் கொண்டுவரச் சொல்லிக் கையெழுத்திட்டு அனுப்பிவிட்டாள். ராஸ்விஹாரிக்கும் தனக்கும் நடந்த பேச்சு, ஒருவேளை குமாஸ்தாக்கள் காதுக்குங்கூட எட்டியிருக்கும் என நினைத்து அவர்களிடம் முகத்தைக் காண்பிப்பதற்கும் விஜயா வெட்கப்பட்டாள்.

அவளுடைய பிதா எழுதிய கடிதங்களை எடுத்துக் கொண்டு நரேந்திரனே நேரில் வரமாட்டானு என்று அவள் ஏங்கினுள். ஆனுல் ஐந்தாறு தினங்களுக்குப் பிறகு அக்கடிதங்கள் தபால் மூலமாக வந்துசேர்ந்தன. நரேந்திரன் நேரில் வரவில்லை. ஏன் வரவில்லை என்பதையறிய அவளுக்கு வெகு நேரமாகவில்லை. ராஸ் விஹாரி இவ்விஷயத்தை நரேந்திரனுக்கும் எப்படியாவது தெரிவித்து வீட்டிற்கு அவனை வரவொட்டாமல் செய்துவிட்டாரோ என்றுகூட அவள் அஞ்சலானுள். இரண்டு கடிதங்களையும் கையில் எடுத்துக்கொண்டு விஜயா யோசிக்க ஆரம்பித்தாள். இந்த அபவாதத்திற்கு அஞ்சி, நரேந்திரன் அவளுடைய வீட்டிற்கு வராமலிருப்பானுகில், அவள் தனியே எவருடைய உதவியுமின்றி, அத்தனை அவமானத்தையும் எப்படி சகித்துக்கொண்டிருக்க முடியும்?

இவ்விதம் அவள் கற்சிலைபோல் உட்கார்ந்துகொண்டு என்ன என்ன நினைத்தாளோ தெரியாது. வெகு நேரத்திற்கப்புறம் அவள் எழுந்து நின்று, தன் பிதாவின் இரண்டு கடிதங்களையும் கண்களில் ஒற்றிக்கொண்டு, அழவாரம்பித்தாள். கண்ணீர் மாலை மாலையாக வடிந்தது. அநேக தடவை கண்களைத் துடைத்துக்கொண்டு, அவள் அக்கடிதங்களைப் படிக்கயத்தனித்தாள். ஆனுல் ஒவ்வொரு தடவையும் கண்ணீர் வந்து மறைத்ததனுல் படிக்கமுடியவில்லை. கடைசியில் அதிக முயற்சியின்மேல், அவள் அக்கடிதங்களைப் படித்து முடித்தபொழுது, அவளுடைய பிதா, நரேந்திரனை அவளுக்குத் தகுந்த கணவனுக்குவதற்காகவே சீமைக்கு அனுப்பிப் படிக்க வைத்திருக்கிருர் என்பது அவளுக்குத் தெளிவாய் விளங்கியது. இவ்விஷயம் யாருக்குத் தெரிந்தாலும், தெரியாவிட்டாலும், ராஸ் விஹாரிக்கு நன்ருய்த் தெரியுமென்பதும் அவளுக்கு நன்கு புலனுயிற்று.

ஐந்தாறு தினங்கள் கழிந்தபின், ஒருநாள் காலை அவள் எழுந்து பார்த்தபொழுது கொத்தர்களும் கூலியாட்களும் வீட்டில் நிறைந்திருக்கக்கண்டாள். அவர்கள் வீட்டை 'ரிப்பேர்' செய்துகொண்டும், வெள்ளையடித்துக்கொண்டும் இருந்தார்கள். அதன் காரணம் என்னவாயிருக்கலாம் என்று யோசித்தபொழுது அவளுடைய உள்ளம் திகிலடைந்தது. பௌர்ணமி (விவாக தினம்) வருவதற்கு இன்னும் ஏழு நாட்களே இருந்தன.

நாள் முழுவதும் வெகு மும்முரமாய் வேலை நடந்துகொண்டிருந்தது. அவ்வேலையெல்லாம் யாருடைய உத்தரவின் பேரில் நடந்துகொண்டிருக்கிறது ? அவளிடம் அதைப் பற்றி ஏன் ஒரு வார்த்தையேனும் கேட்கவில்லை என்று யாரையாவது கூப்பிட்டு விசாரிப்பதற்குத் தைரியமில்லை.

வெகு நாட்களுக்கப்புறம், இன்று விஜயா, கன்னையா சிங்கைக் கூட்டிக்கொண்டு நதிக்கரையில் உலாவச் சென்றாள். வழியில் தயால்பாபு அவளைச் சந்தித்து, "உன்னைத் தான் நான் தேடிக்கொண்டு வருகிறேன், அம்மா "என்றார்.

விஜயா ஆச்சரியமுற்று, "என்ன காரணம்?" என்று கேட்டாள்.

தயால் :—மகளே, இனி நாட்கள் அதிகமில்லை ; அழைப்புப் பத்திரம் அச்சடித்து உன்னுடைய பந்து மித்திரர்களுக்கெல்லாம் காலத்தில் அனுப்பவேண்டுமல்லவா? அவர்களுடைய பெயர், விலாசமெல்லாம் அறிந்துகொள்வதற்காகவே வந்தேன்.

விஜயா :—அழைப்புப் பத்திரம் என் பெயரில் தானே அடிக்கப்போகிறீர்கள் ?

இந்த விவாகத்தினால் விஜயாவுக்கு ஒரு சுகமும் ஏற்படப்போவதில்லை என்பதைத் தயால் பாபுவும் நன்கு அறிவார். ஆகையினால் மிக்க வருத்தத்துடன் சொல்ல

ஹற்றூர் : "இல்லை அம்மா, உன் பெயரில் ஏன் அடிக்க வேண்டும்? பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் ராஸ் விஹாரி பாபுவே முக்கியஸ்தரா யிருப்பதால், அவருடைய பெயரி லேயே அடிப்பதாகத் தீர்மானித்திருக்கிறது."

விஜயா:—யார் அவ்விதம் தீர்மானித்தது? ராஸ் விஹாரி பாபுவா?

தயால்:—ஆம், அவர்தாம்.

விஜயா:—(சற்றுக் கோபமாக) அப்படியானால் யார் யாருக்கு அழைப்பு அனுப்புவதென்பதையும் அவரே தீர்மானித்துக்கொள்ளட்டும். எனக்குப் பந்துமித்திரர்கள் ஒருவரும் இல்லை!

பாவம்! தயால் பாபு இதற்கு என்ன பதில் சொல்லு வார்? பேசாமல் அவளோடு நடந்துகொண்டே சென்றார். திடீரென்று விஜயா, "நரேந்திர பாபுவினிடத்தில் நீங்கள் சில கடிதங்கள் கொடுத்தீர்களே; அவைகளைப் படித்துப் பார்த்தீர்களா?" என்று கேட்டாள்.

தயால்:—இல்லை, விஜயா, இன்னொருவர் கடிதங்களை நான் ஏன் படிக்கிறேன்? ஜகதீசருடைய பெயர் மேலே எழுதியிருப்பதைக் கண்டதும், அவைகளை அவருடைய மகனிடத்தில் கொடுப்பதே உசிதமென்று நினைத்துக் கொடுத்துவிட்டேன். உன்னை ஒரு வார்த்தை கேட்கலாமா என்றுகூட நினைத்தேன்; ஏன் அதனால் ஏதாவது தோஷம் ஏற்பட்டுவிட்டதா?

அவருடைய அச்சத்தைக் கண்டதும் விஜயா மிக்க அன்புடன், "அவருடைய பிதாவுக்குச் சொந்தமானவை களை அவரிடத்தில் நீங்கள் கொடுத்தது சரிதான். நல்லது, அவரும் அது விஷயத்தைப்பற்றி உங்களிடத்தில் ஒன்றும் சொல்லவில்லையா?" என்று கேட்டாள்.

தயால் :—இல்லை, ஒன்றும் சொல்லவில்லையே. ஆனால் தெரியவேண்டியது அவசியமாய் இருந்தால், நாளையே அவரிடத்தில் கேட்டு உனக்குச் சொல்லுகிறேன்.

விஜயா :—(ஆச்சரியத்துடன்) நாளையே உங்களால் எப்படிச் சொல்லமுடியும்?

தயால் :—எப்படியாவது உனக்குச் சொன்னால் சரி தானே? தினந்தோறும் அவர் எங்கள் வீட்டிற்கு வந்து போய்க்கொண்டுதா னிருக்கிறார்.

விஜயா :—ஏன், உங்களுடைய மனைவிக்கு வியாதி அதிகரித்துவிட்டதா? அதைப்பற்றி நீங்கள் என்னிடத்தில் ஒன்றும் சொல்லவில்லையே!

தயால் :—(சிரித்துக்கொண்டு) இல்லை, இல்லை. நரேந்திர பாபுவினுடைய மருந்தினாலும், ஈசுவரனுடைய கிருபையினாலும், அவள் இப்பொழுது சௌக்கியமாயிருக்கிறாள்.

இவ்விதம் சொல்லித் தயால் பாபு இரண்டு கைகளையும் கூப்பி, மிகுந்த பக்தி சிரத்தையுடன் கடவுளை நமஸ்கரித்தார்.

விஜயா சந்தேகமுற்று, "பின் ஏன் அவர் தினந்தோறும் வருகிறார்?" என்று கேட்டாள்.

தயால் :—விசேஷ காரணம் ஒன்றுமில்லை. ஆனால் சொந்த ஊரின்மீதுள்ள அன்பு லகுவில் போகுமா, மகளே! மேலும், இப்பொழுது கல்கத்தாவில் வேலை அதிகமிராது. அங்கே பந்துமித்திரர்களும் யாருமில்லை. ஆகையினால், சாயந்திர வேளைகளை, அவர் எங்கள் வீட்டிற்கு வந்து கழிக்கிறார். என் வீட்டுக்காரி. அவரைத் தன் மகன் போலவே பாவிக்கிறாள். - நல்லது, பேசிக்கொண்டே நாம் இவ்வளவு தூரம் வந்துவிட்டோம், இன்று என் வீட்டிற்கு வந்துவிட்டுப் போயேன்?

"போகலாம்" என்று சொல்லி விஜயா சமாஜ மந்திரத்தை நோக்கிச் செல்ல ஆரம்பித்தாள்.

தயால் :—இத்தகைய களங்கமற்ற உள்ளமும், நற்குணமும் வாய்ந்த வாலிபனை, நான் இதுவரை எங்குமே கண்டதில்லை. பி. ஏ., பாஸ் பண்ணிய பின்பு, நளினி டாக்டர் பரீக்ஷைக்குப் படிக்கவேண்டுமென்று விரும்புகிறாள். நரேந்திர பாபுவும் அவளுக்கு வேண்டிய உதவி செய்வதாகச் சொல்லியிருக்கிறார். இந்நன்றியை எங்கள் ஜன்மம் முழுவதும் நாங்கள் மறக்கமாட்டோம்.

விஜயா திகிலடைந்தாள். மாலை நேரத்தைக் கழிப்பதற்குக் கல்கத்தாவிலிருந்து தினந்தோறும் இவ்வளவு தூரம் வரவேண்டிய அவசியமென்ன? இச்சந்தேகம் அவளுடைய உள்ளத்தை உறுத்தியது. தயால் அவளுடைய முகத்தைப் பார்த்ததும், "நீ களைத்துவிட்டதுபோல் தோன்றுகிறதம்மா! உன்னால் இன்று நடக்கமுடியாது; அதிகக் கஷ்டப்படவேண்டாம்" என்றார்.

விஜயா :—அதொன்றுமில்லை, தாங்கள் செல்லுங்கள்.

அவளுடைய நடையின் வேகம் கொஞ்சம் கொஞ்சமாய்க் குறைய ஆரம்பித்தது. அதனால்தான் அவள் களைத்துவிட்டாளோ என்று தயால் பாபு சந்தேகித்தார்.

தயால் :—நரேந்திர பாபுவினுடைய உதவியினால், நளினி இதற்குள் அநேக வைத்தியப் புத்தகங்களைப் படித்துவிட்டாள். இருவரும் அதில் மிகவும் உற்சாகமா யிருக்கிறார்கள்.

வெகு நேரம் வரைக்கும் பேசாமல் நடந்துகொண்டு வந்தவள் இப்பொழுது மிகவும் மெல்லிய குரலில், "தங்களுக்கு அதில் வேறு ஏதேனும் சந்தேகம் உண்டாகவில்லையா?" என்று கேட்டாள்.

தயால் :—என்ன சந்தேகம், மகளே?

இக்கேள்விக்கு விஜயாவினால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. அவளுடைய ஹிருதயம் வெடித்துவிடும்போ

விருந்தது. அக்கொடிய மனோவேதனையைச் சகித்துக் கொண்டு, "நளினி சம்பந்தப்பட்ட மட்டில், அவருடைய மனோபாவனை என்னவென்பதைத் தெளிவாகச் சொல்லி விடுவது நலமென்று நினைக்கிறேன்" என்றாள்.

தயால்:—நீ சொல்வது சரிதான், மகளே. ஆனால் என்னுடைய அபிப்பிராயம் என்னவென்றால், அவர்களிடையே இன்னும் நல்ல பரிசயம் ஏற்படவேண்டுமென்பதே. அதற்கிடையில் நாம் திடீரென்று ஒன்றும் சொல்வதற்கில்லை.

மற்றவர்கள் உள்ளத்திலும் இச்சந்தேகம் தோன்றி விட்டது என்பதை விஜயா அறிந்துகொண்டாள்; "ஆனால் இத்தகைய கால தாமதத்தினால், நளினிக்கு ஏதாவது நிந்தை ஏற்படுமல்லவா? அவரைப்பற்றி ஒரு கவலையும் இல்லை. ஆனால் அவளுக்கு........" என்றாள்.

சங்கோசத்தினால் விஜயாவுக்கு மேலே சொல்ல முடியவில்லை. ஆனால் தயால் பாபு இவ்விஷயத்தைப்பற்றி முன்பே தீர யோசிக்கவில்லை போலும்; அவர், "அது உண்மைதான். ஆனால் எங்களுக்கு நரேந்திரன்மீது பூரண நம்பிக்கை இருக்கிறது. அவரால் யாருக்காவது நிந்தையோ அபவாதமோ ஏற்படக் கூடுமென்று நாங்கள் கனவிலும் நினைக்கவில்லை" என்றார்.

இதற்குள் அவர்கள் வீட்டிற்கு வந்துவிட்டார்கள். சூரியன் மேற்றிசையில் மறைந்து கொண்டிருந்தான்; எங்கும் இருள் சூழ்ந்துகொண்டிருந்தது. ஒரு மேஜையின் பக்கத்தில் இரண்டு நாற்காலிகளில் எதிரெதிரே உட்கார்ந்து கொண்டு நரேந்திரனும், நளினியும் ஏதோ மெதுவாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். முன்னால் ஒரு புஸ்தகம் விரித்துக் கிடந்தது. இருட்டில் எழுத்துக்கள் தெரியாததனால், படிப்பதை நிறுத்திவிட்டு, அப்புத்தக விஷயமாக ஏதோ பேசிக்

கொண்டிருந்தார்கள் போலும். நளினி வாசலை நோக்கி உட்கார்ந்திருந்தாள்; ஆகையினால் அவள்தான் விஜயாவை முதலில் பார்த்து இனிமையான குரலில் வரவேற்றாள். விஜயாவினுடைய முகம் கொடிய வேதனையினால் ஒளியிழந்திருந்தது. சாயந்திர வேளையின் அம்மங்கிய வெளிச்சத்தில் நளினிக்கு அது தெரியவில்லை. நரேந்திரன் திடீரென்று நாற்காலியினின்றும் எழுந்து, அவளுக்கு அஞ்சலி செய்து, "தங்களுக்கு உடம்பு சௌகரியமாயிருக்கிறதல்லவா?" என்று கேட்டான்.

விஜயா அவனுடைய நமஸ்காரத்திற்குப் பிரதி நமஸ்காரம் செய்யவும் இல்லை; அவனுடைய கேள்விக்குப் பதில் சொல்லவும் இல்லை. அவனைப் பாராதவள்போல் நளினியை நோக்கி, "ஏன் அம்மா, அப்புறம் ஒருநாள்கூட என் வீட்டிற்கு வரவில்லையே?" என்றாள்.

நரேந்திரன் அவள் முன்னால் வந்து சிரித்துக்கொண்டே, "என்னை உங்களுக்கு அடையாளங்கூடத் தெரியவில்லைபோலும்!" என்றான்.

"அடையாளம் தெரிந்தவர்களோடெல்லாம் பேசவேண்டும் என்று என்ன அவசியம் இருக்கிறது?" என்று கடுகடுத்த முகத்துடன் சொல்லிவிட்டு, "உங்கள் மாமியைப் பார்த்துவிட்டு வருவோம்" என்று நளினியை இழுத்துக்கொண்டு விஜயா மாடிக்குச் சென்றாள். இரண்டு மூன்று படிகள் ஏறியதும் நளினி திரும்பி, "நரேந்திர பாபு, தேநீர் பருகாமல் ஓடிவிடாதீர்கள்" என்று உரத்துக் கூவினாள்.

நரேந்திரன் ஒன்றும் பதில் சொல்லவில்லை. தனக்கு நேர்ந்த அவமானத்தைச் சகிக்கமாட்டாமல், அசைவற்று அப்படியே நின்றுவிட்டான். தயால் பாபுவும் அதற்காக இரங்குபவர்போல் அவன் பக்கத்தில் மௌனமாய் நின்றுகொண்டிருந்தார். அவள் தன்னை வெளியில் இவ்வளவு உதாசீனமாகப் பேசினாலும், உள்ளுக்குள் அன்பு

இல்லாமல் இல்லை என்கிற எண்ணம் நரேந்திரன் மனத்தில் எப்படியோ பதிந்துவிட்டது.

சிறிது நேரத்திற்குப் பின்பு தேநீர் பருக நரேந்திரனைத் தயால் பாபு மாடிக்கு அழைத்தார். ஆனால் அவன் இன்று அவருடைய வேண்டுகோளையும் மறுத்துக் கீழேயே இருந்துவிட்டான். அவர் தன்னைத் தனியே விட்டு மாடிக்குச் செல்லத் தயங்குகிறார் என்று கண்டதும், நரேந்திரன் சிரித்துக்கொண்டு, "எனக்காகத் தயங்கவேண்டாம், தயால் பாபு. தாங்கள் சீக்கிரம் மேலே சென்று தங்கள் அதிதிக்கு ஏற்ற உபசாரத்தைச் செய்யுங்கள்" என்றான்.

தயால் :—அப்படியானால் நீங்கள் சிறிது நேரம் உட்கார்ந்திருப்பீர்களா ?

வேலைக்காரன் விளக்கேற்றிக் கொண்டுவந்து மேஜையின்மீது வைத்தான். திறந்துகிடந்த புத்தகத்தை நரேந்திரன் தன் பக்கம் இழுத்துக்கொண்டு, "ஆகட்டும், உட்கார்ந்திருக்கிறேன்" என்றான்.

சுமார் அரை மணி நேரத்திற்குள் மூவரும் கீழே இறங்கி வந்தார்கள். புத்தகத்தை மூடி வைத்துவிட்டு நரேந்திரன் எழுந்து நின்றான்.

"தங்களுக்கு இங்கே தேநீர் கொண்டு வரும்படி சொல்லியிருக்கிறேன், நரேந்திர பாபு" என்றாள் நளினி.

விஜயா நரேந்திரனோடு ஒரு வார்த்தையேனும் பேசவில்லை; அவன் பக்கங்கூடத் திரும்பிப் பார்க்கவில்லை. சிறிது நேரத்திற்குப் பின்பு அவள் வீட்டிற்குப் புறப்பட்டாள். கன்னையா சிங் வெளியில் உட்கார்ந்திருந்தான். விஜயாவைக் கண்டதும், அவன் தடியை எடுத்துக்கொண்டு எழுந்து நின்றான். ஆகாயம் நிர்மலமாயிருந்தது. மேகத்தின் நாமதேயங்கூட இல்லை. பிறைச் சந்திரன் பிரகாசித்துக் கொண்டிருந்தான். தரையில் முளைத்திருந்த புல் முதற்

கொண்டு வெகு தூரத்திலிருக்கும் ஆகாயம், மைதானம், கிராமம், நதி, நதியிலுள்ள நீர் முதலிய யாவும், சந்திர வெளிச்சத்தில் மிக ரம்மியமாய்த் தோன்றின. ஆனால் ஒன்றுக்கும் மற்றொன்றுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை யென்று அவளுக்குப் புலப்பட்டது. அவைகள் தூக்க மயக்கத்தி லிருந்தபொழுது, யாரோ ஒருவன், அவைகளை அச்சுதந்திர உலகத்தினின்றும், பலாத்காரமாகத் தூக்கிக் கொண்டுவந்து, இங்குமங்கும் அலைத்துக் கடைசியில் எறிந்துவிட்டான் போலும்! தூக்கம் தெளிந்து, விழித்துப் பார்க்கும்பொழுது, அவை தாம் முன்பின் தெரியாத ஓரிடத்தில் இருப்பதைக் கண்டு ஒன்றையொன்று வியந்து நோக்குகின்றன!

நடந்து செல்லும்பொழுதே விஜயாவின் கண்களினின்றும் கண்ணீர் மாலை மாலையாக வடிந்தது. "இக் கொடுமையை என்னால் இனிச் சகிக்கமுடியாது" என்று அவள் அடிக்கடி தனக்குள் சொல்லிக்கொண்டாள்.

வீட்டிற்குள் வந்ததும் ராஸ் விஹாரி பாபு அவளுக்காக வெகு நேரமாய்க் காத்துக் கொண்டிருக்கிறார் என்ற செய்தி அவளுக்குத் தெரிந்தது. ஆனால் அவள் அதைச் சற்றேனும் பொருட்படுத்தாமல் தன்னறைக்குச் சென்றுவிட்டாள். எவ்வளவு காலதாமதமானாலும் அவ் வசகாய சூரர் தன்னைப் பாராமல் போகமாட்டார் என்பதும் அவளுக்கு நன்கு தெரியும்.

சிறிது நேரத்திற்குப் பின்பு சதீசன் வந்து பெரிய பாபு வருவதாகச் சொன்னான். அவன் சொல்லி முடிப்பதற்குள் ராஸ் விஹாரியும் உள்ளே நுழைந்தார்.

விஜயா :—வாருங்கள்.

ஒரு நாற்காலியில் உட்கார்ந்துகொண்டு ராஸ் விஹாரி பேச ஆரம்பித்தார் : "இத்தனை வேலைக்காரர்கள் இருக்கிறார்

களே, யாராவது ஒரு விளக்குக் கொண்டுபோகக்கூடாதா, என்று இப்பொழுதுதான் இவர்களிடத்தில் சொல்லிக்கொண்டிருந்தேன்! தயால் பாபுவுக்காவது இது தெரிந்திருக்க வேண்டாமா? என்னதான் சந்திர வெளிச்சமிருந்தாலும், விளக்கில்லாமல் இரவில் சிறு பெண்ணை அனுப்பலாமா?"

இவ்விதம் சொல்லி அவர் ஒரு நீண்ட பெருமூச்சு விட்டார். ஆனால் விஜயா ஒன்றும் பேசவில்லை. உடனே ராஸ் விஹாரி சற்று இருமிக்கொண்டே ஜேபியினின்றும் ஒரு காகிதத்தை எடுத்தார்; "செய்ய வேண்டியதெல்லாம் நானே செய்துவிட்டேன். நீ உன்னுடைய பெயரை மட்டும் இதில் எழுதினால் போதும். இதை நாளையே அனுப்பிவிட வேண்டும், மகளே!" என்றார்.

இவ்விதம் சொல்லி அக்காகிதத்தை விஜயாவின் கையில் கொடுத்தார். அதை ஒரு முறை பார்த்தவுடனேயே, அது பிரம்ம விவாகச் சட்டத்தின்படி, அவர்கள் அனுப்பவேண்டிய மனு என்று அறிந்துகொண்டாள். அச்செழுத்துக்களாலும், நடுநடுவே கையெழுத்துக்களாலும் நிறைந்த அம்மனுவை ஆதியிலிருந்து அந்தம் வரைக்கும் இரண்டு மூன்று தடவை படித்துவிட்டுக் கடைசியில் விஜயா தலைநிமிர்ந்தாள். அதைப் படித்துக்கொண்டிருக்கும்பொழுதே, அவளுடைய ஹிருதயத்தில் ஒரு பெரிய மாறுதல் உண்டாகிவிட்டது. இவ்வளவு நேரமும் அவள் சகித்த கொடிய மனோவேதனையானது இப்பொழுது உலகத்தின்மீதே ஒரு வெறுப்பாக வெளிக்கிளம்பியது. உலகத்திலுள்ள மனிதர்களெல்லாம் ஒரே மாதிரி, ஒரே ரகம் என்று அவளுக்குத் தோன்றியது. ராஸ் விஹாரியானாலும், தயால் பாபுவானாலும், விலாஸனாலும், நரேந்திரனானாலும், யாராயினும் சரி, எல்லோரும் ஒரே மாதிரி. அவர்களில் கொஞ்சமேனும் வித்தியாசமில்லை. அறிவிலும், செல்வத்திலுமுள்ள தாரதம்மியங்களினால்

சிறிது வித்தியாசம் இருப்பதுபோல் வெளிக்குத் தோன்று கிறது; அவ்வளவுதான். ஸ்திரீகளை ஏமாற்றுவதிலும், அவர்களுக்குத் துரோகம் செய்வதிலும் அவர்கள் அனைவரும் கைதேர்ந்த பேர்வழிகள்தாம்.

இன்று தயால் பாபுவின் நடத்தைதான் அவளுக்கு மிகுந்த மனோ வேதனையை உண்டாக்கியது. தனது உள்ளத்தின் ரகசியங்களையெல்லாம் தயால் பாபு அறிந்திருக்கிறார் என்கிற எண்ணம் விஜயாவின் மனத்தில் எப்படிப் பதிந்ததோ தெரியவில்லை. அவைகளை அறிந்திருந்தும், விஷயங்கள் இம்மாதிரி நடக்கும்போது,பேசாமல் பார்த்துக்கொண் டிருந்தாரல்லவா? தயால் பாபுவுக்காக விஜயா என்ன என்ன செய்திருக்கிறாள்! அவரை நம்பினாள், நேசித்தாள், தனக்கு மிக வேண்டியவராகவும் மதித்தாள். அவருக்கு என்ன என்ன நன்மைகள் செய்தாள்! ஆனால் அவர் தம்முடைய சகோதரி புத்திரியின் க்ஷேமத்தை நாடி, விஜயா செய்த உபகாரங்கள் அனைத்தையும் மறந்து விட்டார்! எல்லாம் அறிந்திருந்தும், அவர் இம்மாதிரி அவளுக்குத் துரோகம் நினைத்துவிட்டார். உண்மையில் இப்பொழுது ராஸ்விஹாரிக்கும், தயால் பாபுவுக்கும் என்ன வித்தியாசம் இருக்கிறது? ஆம், நரேந்திரன் எப்பேர்ப்பட் டவன்? அவனைப்பற்றி மனத்தில் நினைக்கவுங் கூட இப்பொழுது அவளுக்கு விருப்பமில்லை.

அவளுடைய மனத்தில் இப்பொழுது ஒரே எண்ணந் தான் மீண்டும் மீண்டும் தோன்றியது. அதாவது உலகத்தி லுள்ள மனிதர்கள் எல்லோருமே சமமானால், விலாஸை மட்டும் துவேஷ திருஷ்டியுடன் பார்ப்பதற்கு அவளுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? இவர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கையில், பாவம்! அவன் எவ்வளவோ நல்லவனாக

வல்லவா தோற்றுகிறுன்! அவன் என்ன அபராதம் இழைத்திருக்கிறுன்? அவன் இழைத்த அபராதம் எல்லாம், விஜயாவை அவன் மனப்பூர்வமாக காதலிக்கிறுன் என்பது ஒன்றுதானே!

சிறிது நேரம் பேசாமலிருந்து, மீண்டும் தனக்குள் யோசிக்க ஆரம்பித்தாள். விலாஸினுடைய காதல் உண்மையானது; ஆகையினுல்தான் அக்காதலுக்கு உண்டாகும் இடையூறுகளை அவனுல் பொறுமையுடன் சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. நரேந்திரன்மீது அவன் கொண்ட பொருமைக்கும் கோபத்திற்கும் காரணம், அவள்மீது அவன் கொண்ட அபரிமிதமான காதல் அல்லவா? அவன் செய்த குற்றம் எல்லாம் இதுதானே? இதற்காக அவனைத் தண்டிப்பதற்கு அவளுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது? அவளுக்கு இன்னும் ஒரு விஷயம் ஞாபகம் வந்தது. லௌகிக விஷயங்களில் நரேந்திரனைக் காட்டிலும், விலாஸ் எவ்வளவோ திறமை வாய்ந்தவன்.

விஜயா மௌனமாக உட்கார்ந்திருப்பதைக் கண்டதும், ராஸ் விஹாரி மிகுந்த சஞ்சலமுற்றுர். "மகளே, மைக்கூடு பேனு இங்கிருக்கின்றனவா? கீழிருந்து கொண்டு வரச் சொல்லட்டுமா?" என்றுர்.

விஜயா திடுக்கிட்டு அவரைப் பார்த்தாள். "நல்லது, சிற்றப்பா! நான் உங்களை ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். எத்தகைய பெருங்குற்றமாயிருந்தாலும், பணத்திற்கு முன்னுல் அது மறைந்துவிடுகிறது என்பது தங்கள் கொள்கையா?" என்றுள்.

ராஸ் விஹாரிக்கு இக்கேள்வியின் அர்த்தம் நன்கு விளங்கவில்லை. அவர் பரபரப்புடன், "ஏன் ஏன்? மகளே" என்று கேட்டார்.

விஜயா :—அப்படி யில்லாவிட்டால், நான் மன்னிக்க முடியாத பெருங்குற்றம் செய்திருந்தும், என்னை ஏற்றுக் கொள்ள ஏன் விரும்புகிறீர்கள் ?

ராஸ் விஹாரி வெட்கித் தலைகுனிந்தார் ; "அது அத்தனையும் பொய். உனது ஜன்ம விரோதிகூட உன்மீது அத்தகைய பழி சுமத்தமுடியாது" என்றார்.

விஜயா :—சத்துருவுங்கூட அவ்விதம் செய்யமாட்டான் என்பது எனக்குத் தெரியும். ஆனால் நான் கேட்பது என்னவென்றால், விலாஸ் பாபு இப்பொழுது என்னை ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்கிறாரா என்பதே.

ராஸ் :—விலாஸா ? உன்னை ஏற்றுக்கொள்ளச் சம்மதிக்கமாட்டானா ? விலாஸா ? - நல்லது - (உரத்த குரலில்) விலாஸ் ! ஏ விலாஸ் !

பக்கத்திலேயே விலாஸ் எங்கோ நின்றுகொண்டிருந்தான். கூப்பிட்டதும் உள்ளே வந்து நின்றான். "இவள் சொல்வதைக் கேள், விலாஸ் ! விஜயா சொல்லுகிறாள் - நீ அவளை ஏற்றுக்கொள்ளமாட்டாயாம் - கொஞ்சம் கேளப்பா அவள் சொல்லுகிறதை !" என்றார்.

விலாஸ் ஒன்றும் தெரியாமல் விழித்தான். உடனே விஜயா பேச ஆரம்பித்தாள். "வேலைக்காரர்கள் சொல்வதை நம்பி, அன்று சிற்றப்பா என்மீது ஒரு பெரும் பழியைச் சுமத்தினார். நான் நரேந்திரனுடன் ஏகாந்தமாய் இரவு வெகுநேரம் வரைக்கும் சிரித்து விளையாடினதுடன் திருப்தியடையாமல், ரயில் போய்விட்டது என்று பொய்ச் சாக்குச் சொல்லி நரேந்திரனை இரவு இங்கேயே தங்கிவிட்டுப் போகச் சொன்னேனாம் ; அவரும் இரவு தங்கிவிட்டுக் காலையில் கல்கத்தா சென்றாராம். இது சம்பந்தமாய்த் தங்கள்........"

அவன் சொல்லி முடிப்பதற்குள் ராஸ் விஹாரி உரத்த குரலில், "ஒருகாலும் இல்லை; ஒருகாலும் இல்லை; இது சுத்தப் பொய்! சுத்த அசம்பாவிதம்!" என்று கத்தினார்.

விலாஸ் :—இதைப்பற்றி நான் ஒன்றும் கேள்விப்படவில்லையே!

ராஸ்விஹாரி மீண்டும் கத்த ஆரம்பித்தார். "நீ எப்படிக் கேள்விப்பட்டிருப்பாய் விலாஸ்! இதுதான் சுத்தப் பொய்யாயிற்றே! நான் அந்தப் போக்கிரி வேலைக்காரப் பயலை.... அந்தத் திருட்டுப் பயல் சதீசனை எவ்வாறு தண்டிக்கிறேன், பார். உம்...."

விலாஸ் :—உலகத்து ஜனங்கள் அனைவரும் இதற்கு சாக்ஷி சொன்னாலும், நான் இதை ஒருபோதும் நம்பமாட்டேன்.

விஜயா :—ஏன் நம்ப மாட்டீர்கள்? என்னுடைய பணத்திற்காகவா?

விலாஸினுடைய கண்களில் தீப்பொறி பறந்தது; ஆனால் அவனுடைய வார்த்தைகளில் கொஞ்சமேனும் ஆவேசமோ, படபடப்போ தெரியவில்லை. வெகு அமைதியுடன், "இல்லை; உன்னுடைய பணத்தின்மீதோ, ஜமீன் மீதோ எங்களுக்கு எள்ளளவும் ஆசை கிடையாது" என்று சொன்னான்.

சிறிது நேரம் அறை முழுவதும் நிசப்தமாயிருந்தது. அந்நிசப்தத்தில், இக்கோர சம்பவம் உண்மையான உருவத்தில் அம்மூவருக்கும் காட்சி யளித்தது. நியாய அநியாயம், மான அவமானம் ஒன்றையும் பொருட்படுத்தாமல், கடை வீதியின் மத்தியில், ஒரு வியாபாரப் பொருளைப்பற்றி இருவர் பேரம் செய்வதுபோல் தோன்றியது. யாதொரு சகாயமுமற்ற ஒரு பெண்ணைத் தங்கள் கை

வசப்படுத்துவதற்காக அவ்விருவரும் பகீரதப் பிரயத்தனம் செய்துகொண்டிருந்தார்கள்.

இதில் ஆச்சரியம் என்னவென்றால், ராஸ் விஹாரி தம் முதுமையையும், பெருந்தன்மையையுங்கூட மறந்து விட்டு, குதிப்பதும் கூப்பாடு போடுவதாயுமிருந்தார். சிறிது நேரத்திற்குப்பின் விலாஸினுடைய சாந்தத்தையும் அமைதியையும் கண்டு, அவரே வெட்கிப் போனார். பெரிய வீட்டுப் பெண் ஒருத்தி, புருஷர்களோடு மரியாதையில்லாமல் இம்மாதிரி வாதவிதண்டாவாதம் செய்வாளா என்று யோசித்துப் பார்த்தபொழுது, விஜயாவும் நாணித் தலை குனிந்தாள்.

அறையிலுள்ள நிசப்தத்தைக் கலைத்து விலாஸ் மீண்டும் பேசலானார்; "இதோ பார்: விஜயா, அப்பா என்ன சொன்னாலும் சரி, என்ன செய்தாலும் சரி, அவர் சொல்வதும், செய்வதும் நமக்கு விளங்கினாலும் சரி, விளங்காவிட்டாலும் சரி; நான் உன்னைக் காதலிக்கிறேன் என்பது மட்டும் உண்மை. நான் மீண்டும் உன்னிடத்தில் சொல்லுகிறேன். உன்னுடைய சொத்தின்மீது எனக்கு லவலேசமும் பிரியமில்லை. நான் உன்னைத்தான் நேசிக்கிறேன்."

கண்ணீர்நிறைந்த அவளுடைய கண்களினால் விலாஸின் முகத்தை மிக்க அன்புடன் ஒரு முறை பார்த்து, "இது உண்மைதானா?" என்று கேட்டாள்.

விலாஸ் முன்னால் சென்று, விஜயாவின் இடது கையைப் பிடித்துத் தன் கையில் வைத்துக்கொண்டு, "என் மனப் பூர்வமாக உனக்குச் சொல்லுகிறேன்; இது உண்மையே" என்றான்.

சிறிது நேரம் இருவரும் அப்படியே நின்றுகொண்டிருந்தார்கள். பின்பு மெள்ள மெள்ளத் தன் கையை விடுவித்துக்கொண்டு மேஜையண்டை வந்து, பேனாவைக் கையில்

எடுத்தாள். அவளுடைய மனம் க்ஷண நேரம் சலனமுற்றதா, இல்லையா என்று எவராலும் சொல்ல முடியாது. அவள் உடனே காகிதத்தில் பெரிய பெரிய எழுத்துக்களில், தன் பெயரை எழுதிக் கீழே கையொப்பமும் இட்டு, ராஸ் விஹாரியிடம் அதைக் கொண்டுவந்து கொடுத்தாள்.

ராஸ் விஹாரி அதை மடித்து ஜேபியில் வைத்துக்கொண்டு எழுந்து நின்று, வனமாலியை நினைத்துப் பெரிதும் வருந்திக் கண்ணீர் வடித்து, எல்லாம்வல்ல ஈசனுடைய கல்யாண குணங்களை வாயார வாழ்த்தி நமஸ்கரித்து, "இரவு வெகு நேரமாகிவிட்டது, மகளே" என்று சொல்லிக்கொண்டே வெளியே கிளம்பினார்.

தந்தையார் சென்றவுடன் கம்பீரத்துடன் விலாஸ் மீண்டும் சொல்லலுற்றான்: "என்னை நீ காதலிக்கவில்லை என்பதை நான் அறிவேன். ஆனால் சாதாரண மனிதர்களைப்போல், நான் காதலையே எல்லாவற்றிற்கும் மேலாக மதிப்பேனாகில், 'ஏ விஜயா, நீ யாரைக் காதலிக்கிறாயோ, அவனையே கலியாணம் செய்துகொள்' என்று சந்தோஷத்துடன் கூறியிருப்பேன். அத்தகைய உதார குணமும், பெருந்தன்மையும், தியாகமும் என்னிடத்தில் இருக்கின்றன! பிதாவினிடத்தில் நான் இவ்வளவு நாளும் கற்றுக்கொண்ட பாடம் வீண்போகவில்லை! (சிறிது நேரம் பேசாமலிருந்து) ஆனால் நிறத்தையும், உருவத்தையும், தசையையும் கண்டு மயங்கி மனிதர்கள், 'காதல், காதல்' என்று அடித்துக்கொள்கிறார்களே, அதுதானா உண்மைப் பிரம்ம சமாஜிகளின் வாழ்க்கை லக்ஷியம்? இல்லை, ஒருகாலும் இல்லை! பிரம்ம சமாஜிகளின் லக்ஷ்யம் சத்தியமும், அந்தச் சத்திய மார்க்கத்தின் மூலம் முக்தியடைவதுமே யாகும்! பரப்ரம்மத்தின் திவ்ய சரணங்களில் நாம் நம்மை ஆத்ம

சமர்ப்பணம் செய்யவேண்டும்! அச்சத்தியத்தை நீ ஒரு நாள் என்னிடம் பார்ப்பாய்; நிச்சயமாய்ப் பார்ப்பாய்!"

விஜயா நிமிர்ந்து பார்த்தாள்; என்ன சொல்லவேண்டுமென்று நினைத்தாளோ, தெரியவில்லை. அவளுடைய உதடுகள் இலேசாய் அசைந்ததோடு நின்றுவிட்டன. அவள் ஒன்றும் பேசவில்லை. இரு கைகளையுங் கூப்பி அவனை நமஸ்கரித்து விட்டுப் பக்கத்திலுள்ள வாசலின் வழியாக வேகமாய் வீட்டிற்குள் ஓடிவிட்டாள்.

# இருபத்தைந்தாம் அத்தியாயம்

## கருத்து அறிதல்

நிச்சயமான ஒரு முடிவுக்கு வரும்வரை விஜயாவின் மனம் பயங்கரமான சந்தேகத் தீயில் அகப்பட்டு உழன்று கொண்டிருந்தது. இன்று காலை கண் விழித்ததும், அவளுடைய மனம் மிக்கஅமைதியாயிருப்பதுபோல் அவளுக்குத் தோன்றியது. அவள் மனத்தில் சஞ்சலமோ, சலனமோ சிறிதேனும் இல்லை. ஆகாயத்தில் காலை இளஞ்சூரியனின் செங்கிரணங்கள் மேகங்களை ஊடுருவிப் பாய்ந்து பூமியின்மீது விழுந்துகொண்டிருந்தன. படுக்கையைவிட்டு எழுந்திருக்கலாமா, வேண்டாமா என்று யோசித்துக்கொண்டிருந்தாள். இத்தனை நாளும் எழுந்திருப்பதற்குச் சிறிது தாமதமானாலும் தன்னை மிகவும் நொந்துகொள்வாள்; ஆனால் இன்று ஏனோ, அத்தகைய எண்ணமே அவளுடைய மனத்தில் தோன்றவில்லை. ஓரிரண்டு நாழிகை தாமதித்து எழுந்திருந்தால், என்ன பிரமாதவேலை கெட்டுப் போய்விடுகிறது? வீட்டிலோ வேலைக்காரர்களுக்குக் குறைவில்லை. ஜமீன் வேலைகளெல்லாம் தாமே நடந்துகொண்டிருக்கின்றன. அவளுடைய வாழ்க்கை முழுவதும் இப்படியே சொகுசிலும் சுகத்திலும் கழிந்தாலும் ஒன்றும் பாதகமில்லை. அதைவிட அவளுக்கு வேறென்ன வேண்டும்? ஜன்னல் வழியாக வெளியே தோப்பின்மீது அவளுடைய பார்வை சென்றது. அதிலுள்ள மரஞ்செடி கொடிகள் கூட, இன்று முன்னைவிட அதிகப் பசுமையாகத் தோன்றின. அவைகளின் இலைகளெல்லாம் இன்று ஒரு கம்பீர

மான தோற்றத்தை அளித்தன. சண்டை, சச்சரவு, தர்க்க விதர்க்கம், குழப்பம், கொந்தளிப்பு - எல்லாம் இவ்வுலகத்தில் எங்குமே இல்லாமல் மறைந்து விட்டனவென்று தோன்றியது. ஒரே இரவில் இவ்வுலகம் முழுவதும் முனிவர்களுடைய தபோவனம்போ லாகிவிட்டது.

கொடிய மனோவேதனையினால் உண்டாகிய ஓர் மயக்கத்தை, மனோசாந்தி என்று நினைத்துக்கொண்டு, பக்ஷவாதத்தினால் பீடிக்கப்பட்ட ஒரு ரோகியைப்போல் விஜயா வெகுநேரம் வரைக்கும் படுக்கையில் படுத்துக் கிடந்தாள். சதீசனுடைய தாய் வந்து கதவைத் தட்ட ஆரம்பித்தாள். அதிகாலையிலேயே எழுந்திருப்பவள் இன்று இவ்வளவு நேரமாகியும் ஏன் எழுந்திருக்கவில்லை என்று நினைத்து, விஜயா கதவைத் திறக்கும் வரைக்கும் அவள் கூப்பிட்டுக்கொண்டே இருந்தாள்.

காலைக் கடன்களை முடித்துக்கொண்டு, விஜயா கீழே இறங்கி வந்துகொண்டிருக்கும்பொழுது, கொத்தர்களுடைய வேலையை ராஸ் விஹாரியே நேரில் வந்து மேற்பார்த்துக் கொண்டிருப்பதாகக் கேள்விப்பட்டாள். விவாக தினம் நெருங்கிவிட்டது. இன்னும் இரண்டு நாட்களே இருக்கின்றன. அதற்குள் வீடு முழுவதையும் பழுது பார்த்து, வெள்ளை யடித்து, அதைப் புது வீடுபோல் ஆக்கிவிட வேண்டும்.

நேற்றிரவு அத்தனை வாதவிவாதத்திற்கு அப்புறம் முடிவு செய்யப்பட்ட தீர்மானம் சரியா, தவறா, நல்லதா, தீயதா என்கிற பிரச்னையே இனி அவளுடைய மனத்தில் தோன்றாது என்று விஜயா சிறிது நேரத்திற்கு முன்பு நினைத்துக்கொண்டிருந்தாள். கடவுளுடைய இச்சையின் பிரகாரம் எல்லாம் நன்மைக்காகவே அவ்வாறு முடிந்திருக்கிறது. அதில் கொஞ்சமேனும் சந்தேகத்திற்கு இடமில்லை என்று விஜயா

நம்பிக்கொண்டிருந்தாள். ஆனால் இப்பொழுது திடீரென்று அவளுடைய மனத்தில் ஒரு மாறுதல் உண்டாகியது. ராஸ் விஹாரி கீழே இருக்கிறார்; கீழே இறங்கியதும் அவரைப் பார்க்கவேண்டி நேரிடும். அதை நினைத்தபொழுதே அவளுடைய சரீரம் முழுவதும் நடுங்கியது. உடனே அவள் திரும்பி மீண்டும் மாடிக்குச் சென்று வெகுநேரம்வரை வராந்தாவில் உலாவிக்கொண்டிருந்தாள். ஆனால் இன்னும் நேரம் போன பாடில்லை; உடனே தன் பால்ய சிநேகிதர்களைப்பற்றி நினைக்க ஆரம்பித்தாள். அவர்களைப் பார்த்து வெகு நாட்களாகிவிட்டன; கடிதப் போக்குவரத்துகூட நின்றுவிட்டது. இன்று அவர்களுக்கெல்லாம் கடிதம் எழுதுவதாகத் தீர்மானித்துத் தன் புஸ்தகாலயத்திற்குள் நுழைந்தாள். அவளுடைய மனத்தில் எத்தகைய வேதனை, எத்தகைய வியாகூலம் நிறைந்திருந்ததென்பது அவளுக்கே தெரியவில்லை. அவள் கவனம் முழுவதும் கடிதம் எழுதுவதில் செல்ல ஆரம்பித்தது. அவளை அறியாமல், அவளுடைய கண்களினின்றும் கண்ணீர் தாரை தாரையாக ஓடிற்று. இப்படி வெகுநேரம் கழிந்தது.

"அம்மா, ஒரு மணியாச்சு. இன்னும் குளிக்கவல்லியா?" என்று சதீசனுடைய தாயார் வந்து கேட்டாள்.

கடிகாரத்தைப் பார்த்துவிட்டு, விஜயா மீண்டும் எழுத ஆரம்பித்தாள். அதற்குள் வேலைக்காரி, மெல்லிய குரலில், "டாக்டர் பாபு வருகிறார்" என்று சொல்லிவிட்டு அவசர அவசரமாக அங்கிருந்து போய்விட்டாள். விஜயா திடுக்கிட்டுப் பார்த்தபொழுது, நரேந்திரன் சதீசனுடன் வந்து கொண்டிருந்தான்.

இதற்கு முன்னால் பல தடவை நரேந்திரன் மாடிக்கு வந்திருக்கிறான்; ஆனால் இம்மாதிரி முன்னறிக்கையில்லாமல் திடீரென்று வந்ததே இல்லை. அவனுடைய முகம்

வாட்டமுற்றிருந்தது. தலைமயிர் சீவப்படவில்லை. "அன்று தாங்கள் என்னோடு ஏன் பேச மறுத்தீர்கள்?" என்று அவன் கேட்டுக்கொண்டே, ஒரு நாற்காலியின்மீது உட்கார்ந்த பொழுது, அவனுடைய முகத்திலும் குரலிலும் இருந்த மாறுதலைக்கண்டு விஜயா திடுக்கிட்டாள். அவள் என்ன பதில் சொல்வாள்? சகிக்க முடியாத துக்கத்தினால் பைத்தியம் பிடித்தவள்போல் உட்கார்ந்துவிட்டாள். "ஏன் இப்படியிருக்கிறீர்கள், நரேந்திர பாபு? உடம்பு சௌகரியமில்லையா?" என்று அத்தியந்த துக்கத்துடன் கேட்டாள்.

நரேந் :—இப்பொழுது உடம்புக்கு ஒன்றுமில்லை. சௌகரியமாயிருக்கிறேன். சாதாரண ஜுரந்தான் அடித்துக் கொண்டிருந்தது; ஆனால் அது என்னை இவ்வளவு பலஹீனமாக்கிவிட்டது. இங்கே வருவதற்குக்கூட முடியவில்லை. அதிருக்கட்டும்; நான் தங்களுக்கு என்ன அபராதம் இழைத்துவிட்டேன் என்று நீங்கள் என்னோடு பேசமறுத்தீர்கள்?"

சதீசன் நின்றுகொண்டிருந்தான். விஜயா அவனைப் பார்த்து, "அடே சதீஷ்! உங்கம்மாளிடத்தில் போய்ச் சாப்பிட ஏதாவது கொண்டுவரச் சொல்" என்றாள். பின்பு நரேந்திரனைப் பார்த்து, "தாங்கள் காலையிலிருந்து ஒன்றுமே சாப்பிடவில்லை போலிருக்கிறது" என்றாள்.

நரேந் :—இல்லை; அதைப்பற்றி இப்பொழுது அவசரம் ஒன்றுமில்லை.

விஜயா :—உங்களுக்கு அவசரமில்லாமல் இருக்கலாம்; ஆனால் எனக்கு.........

இவ்விதம் சொல்லி விஜயாவும் கீழே சென்றாள். சிறிது நேரத்திற்குப் பின்பு, தாலத்தில் அன்னமும் ஒரு கிண்ணம் நிறையச் சூடான பாலும் எடுத்துக்கொண்டு வந்து பேசாமல்

நரேந்திரனுக்கு முன்பு வைத்தாள். நரேந்திரன் சாப்பிட்டுக் கொண்டே சொல்லலுற்றான்: "உங்கள் வீட்டில் எனக்கு இவ்வளவு உபசாரம் செய்கிறீர்கள்; ஆனால் மற்றவர்கள் வீட்டில் என்னைப் பார்த்தால் உங்களுக்கு அடையாளங் கூடத் தெரியாமல் போய்விடுகிறது! இவைகளை யெல்லாம் காணும்பொழுது எனக்கு வெகு ஆச்சரியமாயிருக்கிறது. அன்று உங்கள் நடத்தையைக் கண்டதும், இனி நீங்கள் எனக்குப் பேட்டியே கொடுக்கமாட்டீர்கள் என்று நினைத்து, முன் எச்சரிக்கையில்லாமலே திடீரென்று மாடிக்கு வந்தேன். ஆனால் இங்கே............"

விஜயா ஒன்றும் பேசவில்லை. நரேந்திரனும் கொஞ்ச நேரம் பேசாமலிருந்து பின் சொல்லலுற்றான்: "ஜுரம் வெகு சாதாரணமானதுதான்; அதனால் ஏற்பட்ட பல ஹீனத்தைப் பார்த்தாலோ, எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது.இனிமேல் சமீபத்தில் உங்களையெல்லாம் காண்பதற்குச் சந்தர்ப்பம் இராது என்று நினைக்கிறேன். அதனால்தான் இன்று இத்தனை தூரம் வந்தேன்."

விஜயா முன்போலவே பேசாதிருந்தாள். நரேந்திரன் சொல்லியது அவளுக்குச் சரியாக விளங்கவில்லைபோலும்.

. "நான் என் வேலையை விட்டுவிட்டேன் என்பது உங்களுக்கெல்லாம் தெரியாதென்று நினைக்கிறேன். (ஜேபியினின்றும் திருமண அழைப்புப்பத்திரம் ஒன்றை எடுத்துக் காட்டி) தங்களுடைய கலியாணத்தைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்காது. அன்று காலையில்தான், நான் யாத்திரை செய்யும் கப்பல், கராச்சித் துறைமுகத்தை விட்டுப் புறப்படும்" என்று நரேந்திரன் சொன்னான்.

விஜயா:—(திகிலடைந்து) கராச்சியிலிருந்தா! தாங்கள் எங்கே போகிறீர்கள்?

நரேந் :—தென்னப்பிரிக்காவுக்கு. பஞ்சாபிலுங்கூட ஒரு வேலை கிடைத்தது; ஆனால் வேலைபார்ப்பது என்று எப்பொழுது தீர்மானித்துவிட்டோமோ, அப்பொழுது அதிகச் சம்பளம் கிடைக்கிற இடத்தையே தேர்ந்தெடுப்பது நலமல்லவா? எனக்குப் பஞ்சாப் என்றால் என்ன, தென்னப்பிரிக்கா வென்றால் என்ன, அல்லது கேப்காலனி என்றால் தான் என்ன? எல்லாம் ஒன்றுதான். நான் சொல்வது சரிதானே? இனிமேல் நாம் ஒருவரை ஒருவர் சந்திக்க முடியாதென்று நினைக்கிறேன்.

அக்கடைசி வாக்கியம் விஜயாவின் காதில் விழவே இல்லைபோலும். அவள் கேள்விமேல் கேள்வி கேட்க ஆரம்பித்தாள்: "நளினி சம்மதித்தாளா? அவள் சம்மதித்தாலும், தாங்கள் இவ்வளவு சீக்கிரம் எப்படிப் போக முடியும்? நீங்கள் சொல்வது எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! அவர்களிடத்தில் எல்லாவற்றையும் வெளியிட்டுச் சொல்லி விட்டீர்களா? இவ்வளவு தூரம் போவதற்கு எவ்விதம் சம்மதித்தாள்?

நரேந் :—(சிரித்துக்கொண்டே) பொறுங்கள், பொறுங்கள். இன்னும் இவ்விஷயத்தை யெல்லாம் ஒருவரிடமும் சொல்லவில்லை; ஆனால்........

நரேந்திரன் சொல்லி முடிக்கும்வரை விஜயாவால் பொறுத்திருக்க முடியவில்லை. அவளுக்குக் கோபம் பொங்கியது; "அது ஒருகாலும் முடியாது. பெண்களையெல்லாம் நீங்கள் பெட்டி, அல்லது படுக்கைக்குச் சமமாக நினைத்திருக்கிறீர்கள் போலும். எங்களுக்கு இஷ்டமிருந்தாலுஞ் சரி இல்லாவிட்டாலுஞ் சரி; நீங்கள் கயிற்றினால் கட்டித் தூக்கி வண்டியில் வைக்கவேண்டியது, நாங்கள் மூச்சுவிடாமல் உங்களோடு போகவேண்டியது! இது ஒருகாலும் முடி

யாது. அவளுடைய சம்மதமில்லாமல், அவளை நீங்கள் அவ்வளவு தூரம் கூட்டிக்கொண்டு போவது நன்றாயில்லை.

நரேந்திரனுக்கு ஒன்றும் விளங்கவில்லை. சிறிது நேரம் வரையில் இன்னது சொல்வதென்று தெரியாமல், அப்படியே பிரமித்து நின்றான். பின்பு, "என்ன விஷயம், சற்று விளக்கிச் சொல்லுங்கள். நான் இங்கே வருவதற்கு முன்னால், தயால் பாபுவைக் கண்டேன். அவரும் என் தீர்மானத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு இம்மாதிரி ஏதேதோ பேசினார். எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. இத்தனை பேர்களில், நளினியினுடைய சம்மதத்தைமட்டும் நான் ஏன் கேட்கவேண்டும்? அவள் ஏன் என்னுடைய யாத்திரையைத் தடைசெய்யவேண்டும்? இவை எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே! என்ன விஷயம்? சற்று விளக்கமாகச் சொல்லுங்களேன்!" என்றான்.

விஜயா :—அவளைக் கலியாணம் செய்துகொள்ளப் போவதாக நீங்கள் பிரஸ்தாபிக்கவில்லையா?

நரேந்திரன் தலையில் இடிவிழுந்ததுபோல் இருந்தது? "இல்லை, ஒருபோதும் நான் அவ்வாறு சொல்லவில்லையே!" என்றான்.

விஜயாவின் முகம் சிவந்தது. "நீங்கள் சொல்லவில்லை யென்றே வைத்துக்கொள்வோம். இனிமேலாவது சொல்ல வேண்டியது அவசியமல்லவா? உங்கள் மனத்திலுள்ள எண்ணம் எங்களுக்கெல்லாம் தெரியாமற் போகவில்லை!"

நரேந் :—இம்மாதிரி வதந்தி எப்படிப் பரவியதென்று தெரியவில்லையே! நளினி ஒருகாலும் அவ்விதம் சொல்லி யிருக்கமாட்டாள். ஏனென்றால், அது முடியாத காரியம் என்று முதலிலிருந்தே அவளுக்குத் தெரியும். ஆனால்........

விஜயா :—ஏன் முடியாது?

நரேந் :—காரணங்கள் அநேகம் இருக்கின்றன. எல் லாம் அவளுக்குச் சொல்லியிருக்கிறேன். அவைகளில் ஒரு

காரணத்தைமட்டும் உங்களுக்குச் சொல்லுகிறேன். நான் ஹிந்து; அவள் *பிரம்மசமாஜி. மேலும் அவள் வேறு ஜாதி; நான் வேறு ஜாதி.

விஜயா :—நீங்கள்கூட ஜாதி பேதம் பார்க்கிறீர்களா ?

நரேந் :—ஏன் பார்க்கக்கூடாது ? ஹிந்து சமூகத்தில் ஒரு ஜாதியோடு இன்னொரு ஜாதி விவாக சம்பந்தம் வைத்துக்கொள்வது வழக்கமன்று. உங்களுக்கு இந்த வித்தியாசமெல்லாம் கிடையாதா ?

விஜயா:—தங்களைப்போன்ற சிறந்த கல்வியறிவு வாய்ந்தவர்கள் ஜாதிபேதம் கொண்டாடுவது சரியா ?

நரேந் :—(சிரித்துக்கொண்டு) பொதுவாக டாக்டர்களுக்கே கொஞ்சம் புத்திமட்டு. அதிலும், பூதக்கண்ணாடியின் உதவியினால், அற்ப ஜீவன்களாகிய கிருமிகளைக் கண்டுபிடித்து அவைகளைப் பற்றிப் பிரமாதமாக வாதவிவாதம் செய்யும் டாக்டர்களுக்கு மிகவும் அற்பபுத்திதான் இருக்கும். ஆகையினால் என்னைத் தயைசெய்து மன்னித்துவிடுங்கள்.

நரேந்திரன் வெகு தந்திரமாக ஜாதிப் பிரச்னையை விட்டுத் தப்பிக்க முயல்கிறான் என்று விஜயா அறிந்துகொண்டாள். ஆகையினால் மிகுந்த கோபத்துடன், "நல்லது, அந்நிய ஜாதிப் பேச்சை விட்டுவிடுங்கள். ஆனால் ஒரே ஜாதியில் மதம் வேறாயிருந்தால், அப்பொழுதும், கலியாணம் செய்துகொள்ளக்கூடாது என்பீர்களோ ? நீங்கள் எப்படி ஹிந்து ஆவீர்கள் ? உங்களைத்தான், ஜாதிப்பிரஷ்டஞ் செய்து, சமூகத்தினின்றும் விலக்கிவிட்டார்களே ! ஒரு பிரம்ம சமாஜக் குடும்பத்தைச் சேர்ந்த பெண் உங்களை விவாகம் செய்துகொள்வதற்கு யோக்கியதை யற்றவள் என்று நீங்கள் கூடவா நினைக்கிறீர்கள் ? உங்களுக்கு இத்தனை அகங்காரம்

*பிரம்மசமாஜிகள் தங்களை ஹிந்துக்களென்று சொல்லிக்கொள்வதில்லை.

எங்கிருந்து வந்தது? உங்களுடைய கொள்கை அப்படியிருந்தால், அதை முதலிலேயே சொல்லிவிடுவதற் கென்ன?" என்றாள்.

இப்படிச் சொல்லிக்கொண் டிருக்கும்போதே, விஜயாவின் கண்களில் கண்ணீர் கலங்கிவிட்டது; அதை மறைப்பதற்குத் திடீரென்று தன்னுடைய முகத்தை ஒரு புறம் திருப்பினாள். ஆனால் நரேந்திரனுக்கு அது தெரியாமல் இல்லை. அதைக் கண்டு அவன் மிகுந்த ஆச்சரிய முற்றான். "ஆனால் இப்பொழுது நீங்கள் சொல்வது என் கொள்கையல்ல" என்றான்.

"அதுதான் உங்கள் கொள்கை. எனக்கு நன்றாய்த் தெரியும்" என்று விஜயா கோபத்துடன் சொன்னாள்.

நரேந் :—கிடையவே கிடையாது. நீங்கள் என்னை நன்கு பரீக்ஷை செய்துபார்த்தால், அது உங்களுக்குத் தெரியவரும். மேலும், நளினியைப்பற்றி நீங்கள் ஏதோ தவறாக நினைத்துக்கொண்டு இம்மாதிரி பேசுகிறீர்கள். அவளுடைய மனத்தை யாருக்குப் பறிகொடுத்திருக்கிறாள் என்பது எனக்குத் தெரியும்; நான் ஏன் இம்மாதிரி, ஊரைவிட்டுத் தேசத்தைவிட்டு ஓடுகிறேன் என்பதுகூட அவளுக்குத் தெரியும். ஆகையினால் நீங்கள் என்னுடைய யாத்திரைக்காக வருந்தவேண்டாம்.

மின்னல்போல் வேகமாய் விஜயா திரும்பி, எழுந்து நின்றாள். "நளினி சம்மதிக்காவிட்டால், உங்கள் இஷ்டப்படி எங்குவேண்டுமானாலும் போகலாம் என்று நினைத்திருக்கிறீர்கள்?" என்று அவள் கேட்டாள்.

விஜயாவினுடைய இவ்வார்த்தைகள் நரேந்திரன் ஹிருதயத்தில் அம்புகளைப்போல் தைத்தன. அச்சமயம் மேஜையின்மீது கிடந்த அழைப்புப் பத்திரத்தின்மீது அகஸ்மாத்தாய் அவனுடைய பார்வை சென்றது. "நீங்கள்

சொல்வது சரிதான்; உங்கள் இஷ்டத்திற்கு மாருக நான் ஒன்றும் செய்யமுடியாது. ஆனால் என்னுடைய வாழ்க்கையின் லக்ஷியம் என்னவென்பது உங்களுக்குத் தெரியாததல்ல. அந்த லக்ஷியத்தை அடைவதற்கு, ஒரு வேளை அந்நிய நாடுகளில் எனக்குச் சந்தர்ப்பங்கள் கிடைக்கலாம்; ஆனால் இத்தேசத்தில், என்னைப் போன்ற தரித்திரர்கள் இருப்பதும், இல்லாததும் ஒன்றே. ஆகையினால் தாங்கள் என்னைத் தடுக்கவேண்டாம்" என்று அவன் கூறினன்.

விஜயா தலைகுனிந்த வண்ணம் மெல்லிய குரலில், "நீங்கள் தரித்திரர் அல்லவே; உங்களுக்குத்தான் எல்லாம் இருக்கிறதே. உங்களுக்கு இஷ்டமானபொழுது, நீங்கள் எல்லாவற்றையும் திரும்ப எடுத்துக்கொள்ளலாம்" என்று சொன்னாள்.

நரேந் :—அதெப்படி முடியும்? தாங்கள் என்மீது காட்டிய கருணைக்காக வந்தனம். இதை நான் எந்நாளும் மறவேன்; நீங்கள் கொடுத்தாலும், அதை எடுத்துக் கொள்வதற்கு எனக்கு அதிகாரம் வேண்டுமல்லவா? அவ்வதிகாரம் எனக்கில்லை.

விஜயா :—ஏன் அதிகாரம் இல்லை? இந்த ஜமீன் முழுதும் என்னுடையதல்ல; தந்தையினுடையது. அவர் இவை எல்லாவற்றையும் உங்களுக்கு அளித்திருப்பதால், தங்களுக்கு அதிகாரம் இருக்கத்தான் செய்கிறது. உங்களுடைய நிலைமையில் நான் இருந்தேனாகில், இவ்வெல்லாச் சொத்துக்களின் மீதும் கட்டாயம் தாவா செய்வேன்; ஒரு பைசாகூட விடமாட்டேன்.

நரேந்திரன் ஒன்றும் பேசவில்லை. விஜயாவும் தலைகுனிந்து மௌனமாய் உட்கார்ந்திருந்தாள். இரண்டு மூன்று நிமிஷங்கள் அறை நிசப்தமாயிருந்தது. திடீரென்று ஒரு நீண்ட பெருமூச்சின் சப்தத்தைக் கேட்டு,

விஜயா திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தாள். நரேந்திரனுடைய முகம் வெளுத்திருந்தது. அவர்களிருவருடைய கண்களும் கலந்தன. நரேந்திரன் சொல்லலுற்றான்: "நளினி சொன்னது உண்மையாகிவிட்டது, விஜயா! அவள் நினைத்தது சரிதான்; ஆனால் நான் அதை நம்பவில்லை. என்னைப்போல் உபயோகமற்றவர்கள்கூட ஒரு சிலருக்கு அவசியமா யிருப்பார்கள் என்பது எனக்குச் சுத்த அசம்பாவிதமாகத் தோன்றியது. ஆதலால் அவள் அங்ஙனம் சொல்லியபோது, நான் அதைச் சிரித்து மழுப்பிவிட்டேன்....ஆனால் இவ்வசம்பாவிதமான அபிலாஷையானது உன்மனத்தில் தோன்றியிருந்தால், அதை ஏன் ஒரு முறையாவது முன்னமே வாய்விட்டுச் சொல்லியிருக்கக் கூடாது? என்னைப் பொறுத்தமட்டில், கனவிலும் அங்ஙனம் கருதுவது பைத்தியக்காரத்தனமென்று மதித்தேன்!"

இத்தனை நாட்களுக்கப்புறம் இன்று நரேந்திரன் வாயிலிருந்து, அன்பு கனிந்த குரலில், தன் பெயரைக் கேட்டதும், விஜயா புளகாங்கிதம் அடைந்தாள். அவளுடைய சரீரம் முழுவதும் நடுங்கியது. அழுகை பொங்கி வந்தது. முன்தானையை வாயில்வைத்து அதையடக்க யத்தனித்தாள்.

பின்னாலிருந்து யாரோ வரும் சப்தங் கேட்டு, நரேந்திரன் திரும்பினான். தயால் பாபு அறைக்குள் நுழைந்து கொண்டிருந்தார். சிறிது நேரம் பேசாமல் வாசலில் நின்று அவர்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். பின்பு மெள்ள மெள்ள விஜயாவின் பக்கத்தில் வந்து, அவள் உட்கார்ந்திருந்த மெத்தையின்மீதே உட்கார்ந்து, வலது கையினால் அவளுடைய தலையைத் தடவிக்கொண்டு, மிக்க அன்புடன், "மகளே!" என்றார்.

விஜயாவுக்குத் தன் தந்தையின் ஞாபகம் வந்ததோ, என்னவோ தெரியவில்லை; கிழவருடைய மடியில் அவளு

டைய முகத்தை வைத்து விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டாள்.

தயாலின் கண்களினின்றும் கண்ணீர் வடிய ஆரம்பித்தது. இவ்வுலகத்தில் அவர் ஒருவர்தாம் உள்ளத்தை உருக்கும் இவ்வழுகையின் காரணத்தையறிவார். "உன்னுடைய துக்கத்துக்கெல்லாம் காரணம் நானே. நளினியினிடத்தில், இப்பொழுதுதான் இதைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தேன். அவளுக்கு உள் இரகசியமெல்லாம் தெரிந்திருக்கிறது. ஆனால் இதெல்லாம் நமக்கென்ன தெரிகிறது? நரேந்திரன் மனத்தில் உன்னையே...............ஆனால் நானும் எத்தகைய முட்டாள்! நான் பெருந்தவறு இழைத்துவிட்டேன். சுத்தத் தவறான, ஆதாரமற்ற ஒரு செய்தியை உன்னிடத்தில் சொல்லி உனக்கு இவ்வளவு மனோவேதனையை உண்டாக்கிவிட்டேன்" என்று அவர் வருத்தந் தொனிக்கும் குரலிலே கூறினார்.

மணி மூன்று அடித்தது. மூவரும் திடுக்கிட்டார்கள். விஜயாவினுடைய அழுகை கொஞ்சம் கொஞ்சமாக நிற்க ஆரம்பித்தது. இதைக் கண்டதும் தயால் பாபு விஜயாவினுடைய முதுகை மெதுவாய்த் தடவிக்கொண்டு, "விஜயா, இப்பொழுது வேறு ஒன்றும் வழியில்லையா?" என்று கேட்டார்.

"இல்லை, சாவைத் தவிர வேறு ஒருவழியும் இல்லை" என்று விஜயா விம்மல்களுக்கும் விக்கல்களுக்கு மிடையில் சொன்னாள்.

தயால் :—அப்படிச் சொல்லாதே, அம்மா.

விஜயா :—நான் வாக்குக் கொடுத்துவிட்டேன். என் உயிருள்ளவரையில் அதைக் காப்பாற்றி யாகவேண்டும். நான் சாவதைத் தவிர வேறு............

இதற்குமேல் அவளால் ஒன்றும் சொல்லமுடியவில்லை; தொண்டை அடைத்துக்கொண்டது. தயால் பாபுவுக்கும்

என்ன சொல்வதென்று தெரியவில்லை. விஜயாவின் தலையை மெதுவாய்த் தடவ ஆரம்பித்தார்.

சதீசன் வந்து, " அம்மா, மூன்றுமணி ஆகிவிட்டது " என்றான்.

விஜயாவைக் குளித்துவிட்டுச் சாப்பிடும்படி தயால் பாபு பெரிதும் வேண்டிக்கொண்டார். ஆனால் அவள் எழுந்திருப்பதாகத் தெரியவில்லை.

சதீசன் மீண்டும் வந்து, " அம்மா, உங்களால் எல்லோரும் சாப்பிடாமல் இருக்கிறாங்க " என்றான்.

உடனே விஜயா கண்களைத் துடைத்துக்கொண்டு எழுந்து மெள்ள மெள்ள அங்கிருந்து சென்றாள்.

தயால் :—நரேந்திரபாபு, நீங்களும் இதுவரையில் ஒன்றும் சாப்பிடவில்லையல்லவா ?

நரேந் :—ஏதோ யோசித்துக்கொண்டே; " இல்லை " என்றான்.

தயால் :—அப்படியானால், வாருங்கள் வீட்டிற்குப் போகலாம்.

" சரி " என்று சொல்லி நரேந்திரன் எழுந்து நின்றான். இருவரும் அங்கிருந்து சென்றார்கள்.



## இருபத்தாறாம் அத்தியாயம்

### திருமணம்

அன்று மாலை, விவாக சம்பந்தப்பட்ட சில முக்கிய விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டு ராஸ் விஹாரியும், விலாஸ் விஹாரியும் போனபின்பு, விஜயா தன் புத்தகாலயத்திற்குச் சென்றாள். அங்கே தயால் பாபு ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து உட்கார்ந்திருந்தார். அவர் எப்பொழுது வந்தார், எவ்வளவு நேரமாய் அங்கு உட்கார்ந்திருக்கிறார் என்பது ஒன்றும் அவளுக்குத் தெரியாது. அவருடைய சிந்தனையைக் கலைக்க விஜயா விரும்பவில்லை. ஆகையினால் வந்தபடியே சத்தமில்லாமல் திரும்பிச் சென்றுவிட்டாள். ஆனால் சுமார் ஒரு மணி நேரத்திற்குப் பின்பு, அவள் மீண்டும் வந்து பார்த்த பொழுது, அவர் முன்போலவே தியானத்தில் ஆழ்ந்திருந்தார். உடனே மெதுவாய்ச் சென்று அவர் முன்னால் நின்றாள்.

தயால் திடுக்கிட்டு, "உனக்காகத்தான் நான் காத்துக் கொண்டிருக்கிறேன், விஜயா" என்றார்.

"அப்படியானால் என்னைக் கூப்பிடுவதற்கென்ன?" என்று மிகுந்த அன்புடன் கேட்டாள்.

தயால் :—நீங்கள் பேசிக்கொண்டிருந்தீர்கள் ; ஆகையினால் உங்களைத் தொந்தரவு செய்யக்கூடாதென்று நினைத்தேன். நாளை மத்தியானம் நீ எங்கள் வீட்டிற்கு வர வேண்டும். இல்லை, இல்லை, மாட்டேன் என்று நீ சொல்ல முடியாது. ஒருவேளை நீ வருவதற்கு மறுத்துவிடுகிறாயோ என்று பயந்தே இவ்வளவு தூரம் நடந்து நானே நேரில்

வந்திருக்கிறேன். மத்தியான்ன வெயிலில் நாளை மறுபடியும் உன்னைக் கூப்பிடமுடியாது என்பதையும் உன்னிடத்தில் இப்பொழுதே சொல்லிவிடுகிறேன். பல்லக்கும், போகிகளும் ஏற்பாடு பண்ணியிருக்கிறேன். அவர்கள் வந்து உன்னைக் கூட்டிக்கொண்டு வருவார்கள்.

கிழவருடைய அன்பார்ந்த வார்த்தைகளைக் கேட்டதும் விஜயாவின் கண்களில் கண்ணீர் ததும்பியது; "நீங்கள் ஒரு கடிதம் எழுதி அனுப்பியிருந்தாலும், நான் 'முடியாது' என்று சொல்லியிருக்கமாட்டேன். தாங்கள் வீணில் இவ்வளவு தூரம் ஏன் நடந்துவந்தீர்கள்?" என்றாள்.

தயால் எழுந்து நின்று விஜயாவினுடைய கையைப் பிடித்துக்கொண்டு சொல்லலுற்றார்: "மறந்துவிடாதே, மகளே, கிழவனிடத்தில் வாக்குக் கொடுத்துவிட்டாய்! நீ வராவிட்டால், வெயிலில் நான் இங்கே மறுபடியும் ஓடிவர வேண்டியிருக்கும். நான் உன்னை விடவேமாட்டேன்."

"நல்லது" என்று விஜயா தலையசைத்தாள்.

இன்று தயால் பாபு தன்னை இவ்வளவு தூரம் வற்புறுத்துவதைக் கண்டு அவள் ஆச்சரியமுற்றாள். ஒன்று, தயால் பாபு இதுவரைக்கும் அவளைத் தம் வீட்டிற்கு அழைத்ததே கிடையாது; இரண்டாவதாக, இரவில் விருந்துக்கு அழைக்காமல், மத்தியான்ன போஜனத்திற்கு அழைத்திருக்கிறார்; மூன்றாவதாக 'மறந்துவிடக்கூடாது' என்று மீண்டும் மீண்டும் சொல்லுகிறார். இவற்றையெல்லாம் யோசிக்கும்பொழுது அழைப்புச் சாதாரணமானதாயிராது என்று அவள் சந்தேகிக்கலானாள். இன்று மத்தியான்னம்வரை இவ்வழைப்பைப்பற்றிய எண்ணமே, அவர் மனத்தில் இல்லை என்பது நிச்சயம். அதற்கப்புறம் இவ்வெண்ணம் திடீரென்று தோன்றியிருக்கிறது, பல்லக்குங் கூட ஏற்பாடு செய்திருக்கிறார்!

"என்ன காரணத்திற்காகத் தாங்கள் என்னை அழைக்கிறீர்கள் என்பதைத் தயைசெய்து சொல்வீர்களா?" என்று விஜயா தயால் பாபுவைக் கேட்டாள்.

"காரணம் இப்பொழுது சொல்லமுடியாது, மகளே. நாளைக்கு வந்தால் எல்லாம் தெரிந்துவிடுகிறது!"

விஜயா:—நல்லது, காரணம் சொல்லவேண்டாம்; ஆனால் யார் யாரை அழைத்திருக்கிறீர்கள் என்றாவது சொல்வீர்களா?

தயால்:—அவர்களெல்லாம் உனக்குத் தெரியாதம்மா. எல்லோரும் என் பந்துமித்திரர்களும், அடுத்தவீடு, அண்டை வீட்டுக்காரர்களும். அதில் உனக்குத் தெரிந்தவர்கள் இரண்டு பேர்களே. ஒருவர் ராஸ் விஹாரி; மற்றொருவர் நரேந்திர பாபு.

தயால் பாபு சென்றபின்பு, விஜயா வெகுநேரம் வரைக்கும் இவ்வழைப்பின் காரணம் என்னவாயிருக்கலாம் என்று யோசித்துக்கொண்டிருந்தாள். ஆனால் அவள் யோசிக்க யோசிக்க, ஒருவிதமான சந்தேகத்தினால் அவளுடைய ஹிருதயத்தில் அந்தகாரமே அதிகரிக்க ஆரம்பித்தது.

மறுநாள் ஒன்றரை மணி ஆகியும் பல்லக்கு வராததைக் கண்டு விஜயா ஆச்சரியமுற்றாள். அவளுடைய உள்ளத்தில் ஒரு சாந்தி நிலவியதுபோல் தோன்றியது. சதீசனுடைய தாயையும், தன்னுடன் வருமாறு அவள் சொல்லியிருந்தாள்.

கிழவருக்குப் பைத்தியம் ஒன்றும் பிடித்துவிடவில்லையே! அவளை அழைத்ததையே அவர் மறந்துவிட்டாரோ, என்னவோ!—இம்மாதிரியெல்லாம் அவள் யோசிக்க ஆரம்பித்தாள். ஆனால், தயாலின் வீட்டிற்கு ஆள் அனுப்பி, விஷயம் அறிவதற்கும் அவளுக்கு வெட்கமாயிருந்தது. மேலும், ஆள் அனுப்பிக் கேட்பது, தயால் பாபுவையும் அவமானப்படுத்துவதாகும். இத்தகைய தர்மசங்கடத்தில் என்ன செய்வ

தென்று அவளுக்குத் தெரியவில்லை. இப்படியிருக்கையில், சதீசன் ஓட்டமாய் ஓடிவந்து, இளைத்துக்கொண்டே, பல்லக்கு வந்துவிட்டதாகச் சொன்னான்.

விஜயா புறப்படும்பொழுது சாயந்திரமாகிவிட்டது. ராஸ் விஹாரி, வேலைக்காரர்கள் மத்தியில் நின்றுகொண்டு, அவர்களை அதிகாரம் செய்துகொண்டிருந்தார்; மூச்சு விடுவதற்குக்கூட அவருக்கு நேரமில்லை என்றாலும், விஜயாவைக் கண்டதும்,பல்லக்கின் சமீபத்தில் வந்து சிரித்துக்கொண்டே, "திடீரென்று இம்மாதிரி விருந்து வைப்பதற்குத் தயால் பாபுவுக்கு என்ன சந்தோஷம் கிளம்பிவிட்டதென்று தெரியவில்லை. இன்றிரவு நானும் அங்கே வரவேண்டியிருக்கும்; கட்டாயமாக வரச் சொல்லியிருக்கிறார். ஆனால் அவர் பல்லக்கு அனுப்புவதற்குத் தாமதமாகிவிட்டால், நான் வர முடியாது என்பதை, நீ அவரிடத்தில் சொல்லிவிடு, விஜயா" என்றார்.

தயால் பாபுவின் வீட்டு வாசலில், மாவிலைத் தோரணம் கட்டியிருந்தது. இரண்டு புறமும் பூரண கலசங்கள் வைக்கப்பட்டிருந்தன. இதையெல்லாம் கண்டு விஜயா ஆச்சரியமுற்றாள். கிராமத்தார்கள் பலருடன் தயால் பாபு பேசிக்கொண்டிருந்தார். விஜயா உள்ளே நுழைந்ததும், பேச்சை நிறுத்திவிட்டு, அவளை வரவேற்றுக் கையைப் பிடித்து மாடிக்கு அழைத்துக்கொண்டு சென்றார்.

"பசி பொறுக்க முடியாமல் என் உயிர் போகிறது! இப்படித்தானா, நீங்கள் என்னை மத்தியான்ன போஜனத்திற்கு அழைப்பது?" என்று மாடிக்கு ஏறிச் செல்லும்பொழுது விஜயா மெல்லிய குரலில் சொன்னாள்.

தயால்:—இன்று நீங்கள் இருவரும் உபவாசம் இருக்க வேண்டும், மகளே. நரேந்திரன் பாவம்! பிரக்ஞையற்றவன்

போல் கிடக்கிறான். இன்று ஒரு நாளாவது பட்டாச்சாரி யாருடைய சொல்படி நடக்கவேண்டாமா?

மாடியில் சென்று பார்த்தபொழுது, விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டிருந்தன! அவைகளைக் கண்டதும் அவளுடைய ஹிருதயம் துடிக்க ஆரம்பித்தது. அவைகளெல்லாம் என்ன என்று கேட்பதற்குக்கூட அவளுக்குத் தைரியம் இல்லை.

தயால்:—சூரியாஸ்தமனத்திற்குப் பிறகுதான் நல்ல லக்னம் இருக்கிறது. இன்று உனக்குக் கலியாணம், விஜயா! உன் அதிர்ஷ்டம், இன்று நல்ல முகூர்த்தமும் கிடைத்து விட்டது. இல்லாவிட்டாலும், இன்று இவ்விவாகத்தை எப்படியாவது முடித்துவிடுவதாகவே தீர்மானித்திருந்தேன். கடவுள் கிருபையால் எல்லாம் இனிது நிறைவேறும். இந்த லக்னம் இவ்விவாகத்திற்கென்றே பஞ்சாங்கத்தில் எழுதி யிருக்கிறதென்று, பட்டாச்சாரியாருங்கூடச் சிரித்துக் கொண்டே சொன்னார்.

விஜயா:—ஹிந்து நியமங்களின் பிரகாரமா எனக்கு விவாகம் செய்யப்போகிறீர்கள்?

தயால்:—ஏனம்மா, ஹிந்து விவாகம், விவாகமல்லவா? உன்னுடைய மூதாதையர்களெல்லாம் ஹிந்துக்களாய்த் தானே இருந்தார்கள்? அவர்களுடைய விவாகமெல்லாம் இப்படித்தானே நடந்திருக்கும்? மனிதன் கிரியைகளுக்கும் சடங்குகளுக்கும் அடிமை யாகிவிடுகிறான். நேற்று இரவு முழுவதும் நான் இதைப்பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன். என் மனம் சமாதானம் அடையவே இல்லை. இறுதியில் நளினி வந்து என்னைச் சமாதானப்படுத்தினாள். " மாமா! விஜயாவின் தகப்பனார், அவளை யாருக்கு மணஞ் செய்ய நிச்சயித்திருந்தாரோ, அவர் கையில் அவளைப் பிடித்துக் கொடுத்துவிடுங்கள். ஹிந்துவாயிருந்தால் என்ன?

பிரம்மசமாஜியா யிருந்தால் என்ன? மனமொத்த விவாகமே உண்மை விவாகமாகும். விவாக மந்திரங்கள் சமஸ்கிருதத்தில் சொன்னால் என்ன? தாய்ப் பாஷையில் சொன்னால் என்ன? புரோகிதர் சொன்னால் என்ன? ஆச்சாரியர் சொன்னால் என்ன? எல்லாம் ஒன்றே" என்று சொன்னாள். ஆனால் எனக்கு இன்னொரு சந்தேகம் இருந்தது. "விஜயா அவர்களுக்கு வாக்குக் கொடுத்துவிட்டாளே; அதற்கென்ன செய்வது, நளினி?" என்று நான் அவளைக் கேட்டேன். அதற்கு அவள், "மாமா, விஜயா மனமிசைந்து அவ்வாக்குக் கொடுக்கவில்லை என்பது தங்களுக்கே தெரியும். மனமிசைதல் பெரிதா? கையெழுத்திடுவது, வாயினால் சொல்வது பெரிதா? உள்ளத்தில் உண்மை ஒளி இருக்க வேண்டுமா? வாக்கினிலே மட்டும் ஒளி இருந்தால் போதுமா?" என்று சமாதானம் கூறினாள்.

நான் ஆச்சரியமுற்று, "இதெல்லாம் எங்கே கற்றாய் மகளே?" என்று கேட்டேன். "நரேந்திர பாபுவினிடத்தில் தான் யாவும் கற்றேன். சத்தியத்தின் இருப்பிடம் உள்ளமே, நாவல்ல என்று அவர் அடிக்கடி சொல்வதுண்டு. நாவினால் சொல்லியதை எல்லாம் காப்பாற்றவேண்டுமென்பது அசட்டு வேதாந்தம். ஆயினும் ஜனங்களெல்லாம் வாய்ச்சொல்லையே பெரிதாக மதித்து, அதைக் காப்பாற்றுவதே தங்களுடைய கடமையென்று நினைப்பது, சத்தியத்தின்மீது அவர்களுக்குள்ள நம்பிக்கையினால் அல்ல; தாங்கள் சத்திய சீலர்கள் என்று வெறும் வாய்ப்பறை அறைந்துகொள்ள வேண்டுமென்கிற வீண் ஆசையினால்தான்" என்று சொன்னாள். (சிறிது நேரம் மௌனமாயிருந்து பின் விஜயாவை நோக்கி) நரேந்திரன் உன்னை எவ்வளவு காதலிக்கிறான் என்பது உனக்குத் தெரியுமா, விஜயா?

விஜயா பேசாமல் நின்றுகொண்டிருந்தாள்.

சமையல் அறையில் நளினி மும்முரமாய் வேலை செய்துகொண்டிருந்தாள். விஜயா வந்த செய்தியை அறிந்ததும், ஓடிவந்து அவளைக் கட்டி அணைத்துக்கொண்டு, "உனக்கு அலங்காரம் செய்யும் வேலையை நரேந்திர பாபு என்னிடத்தில் ஒப்பித்திருக்கிறார்; வா" என்று இரகசியமாய் அவள் காதிற்குள் சொல்லி அவளை ஒருபுறம் வலிய இழுத்துக்கொண்டு போய்விட்டாள்.

சுமார் இரண்டு மணிநேரத்திற்குப் பிறகு புஷ்பம், சந்தனம், மாலைமுதலியவைகளால் விஜயாவை நளினி அலங்கரித்து மணவறையில் கொண்டுவந்து உட்கார்த்தினாள். முன்னாலுள்ள ஜன்னலைத் திறந்ததும், அழகிய சந்திரிகை அவள் மீது விழுந்தது. அது, சுவர்க்கலோகத்தில் இருக்கும் அவளுடைய தாய்தந்தையரின் ஆசீர்வாதம்போல் இருந்தது.

திருமணச் சடங்குகள் யாவும் முடிந்து விட்டன. தம்பதிகள் மணவறையினின்றும் எழுந்தார்கள். அச்சமயம் ராஸ் விஹாரி உள்ளே நுழைந்தார். தயால் பாபு எழுந்து நின்று, அவரை மரியாதையுடன் வரவேற்று, "வாருங்கள். யாதொரு விக்கினமும் இல்லாமல் கலியாணம் நிறைவேறி விட்டது. இச்சுபதினத்தில் மனத்தில் யாதொரு களங்கமும் இல்லாமல், இவர்களை ஆசீர்வதியுங்கள்" என்று கைகுவித்து வேண்டிக்கொண்டார்.

ராஸ் விஹாரி க்ஷணநேரம் ஸ்தம்பித்து நின்றார். பின்பு சகஜ பாவத்துடன், "வனமாலியினுடைய மகளுக்குக் கடைசியில் ஹிந்துமதப் பிரகாரமா கலியாணம் நடத்திவிட்டீர்கள்? என்னிடம் முன்னமேயே சொல்லியிருந்தால், இதற்கு அவசியம் நேர்ந்திராதே" என்றார்.

தயால் :—எல்லா விவாகமும் ஒன்றுதான்.

ராஸ் :—(கடூர த்வனியுடன்) ஒருகாலும் இல்லை. இந்த ஹிந்துக்களெல்லாம் சேர்ந்து இவளுடைய பிதாவைக் கிராமத்திலிருந்தும் துரத்தினர்களே என்பதைக் கூட இவள் கொஞ்சமாவது யோசித்துப் பார்க்கவில்லைபோலும் !

பக்கத்தில் நளினி நின்றுகொண்டிருந்தாள் ; " தந்தையினுடைய ஆக்ஞையைத்தான் விஜயா நிறைவேற்றியிருக்கிருள். வனமாலி பாபுவினுடைய விருப்பம் தங்களுக்கும் தெரியுமல்லவா ? அதை வேறு எவ்வகையில் பூர்த்தி செய்ய முடியும் ?" என்ருள்.

ராஸ் விஹாரி அவளைக் கோபத்துடன் முறைத்துப் பார்த்து, " உம், உம் !" என்ருர்.

ஆனல் நளினி பிடிவாதத்துடன், " பேஷ் ! கலியாண வீட்டிற்கு வந்துவிட்டு, இப்படிச் சும்மா போய்விடலா மென்று நினைக்கிறீர்கள் ? அது முடியாது. தாங்கள் சாப்பிட்டுவிட்டுத்தான் போக வேண்டும். நான் மாமாவோடு எவ்வளவு சண்டையிட்டு உங்களுக்கு அழைப்புப் பத்திரிகை அனுப்பினேன் !" என்ருள்.

ராஸ் விஹாரி ஒன்றும் பதில் சொல்லவில்லை. கோபக் கனல் கக்கும் கண்களால் இன்னும் ஒருமுறை அவளை உறுத்து நோக்கிப் பின் அங்கிருந்து சென்றுவிட்டார்.

முற்றும்.



# ஆனந்த மடம்

வங்காளி மூலத்திலிருந்து

**டி. என். குமாரஸ்வாமி, பி. ஏ., அவர்கள்**

மிக்க அழகாய் மொழிபெயர்த்தது.

**ரூ. 1—4—0**

**மதிப்புரைகளிற் சில**

**The Hindu:**— * * The translation into Tamil has been done remarkably well.

* * *

**தனவணிகன் :**—* தமிழ் மக்கள் அவசியம் படிக்கவேண்டிய நூல்களுள் இது ஒன்று. மொழிபெயர்ப்பு அருமையாய் இருக்கிறது. கண்கவர் முறையில் அமைந்த புத்தகம்.

* * *

**கலா சேவகி :**—* சொல் அமைப்பு இலகுவாயும். கற்பனை வெகு சோர்த்தியாயும், கதைப்போக்கு விருவிருப்பாயும் இருக்கிறது.

* * *

**நவசக்தி :**—* இந்தியாவுக்குச் சுதந்திர உணர்ச்சி ஊட்டியது ஆனந்த மடம். * மொழிபெயர்ப்பு நன்றாயிருக்கிறது.

* * *

**ஹனுமான் :**—இக் கதையின் போக்கே நூதன வசீகரம் படைத்தது. தேசீய ஆவேசத்தை ஊட்டும் இந்த நவீனத்தைப் படிக்கும்போது, ஒரு கதையைப் படிப்பதுபோன்ற உணர்ச்சியே நமக்கு ஏற்படவில்லை. மொழிபெயர்ப்பு என்ற எண்ணமும் நமக்கு உண்டாகவில்லை. எளிய லளிதமான தமிழ் நடை. உயர்ந்த நாவல். நல்ல மொழிபெயர்ப்பு.

* * *

**மணிக்கொடி :**—* பங்கிம் பாபுவின் மூலத்திலுள்ள வேகம் பூராவையும் கொண்டு வந்திருக்கிறார். அழகான வர்ணனைகளை நன்றாக மொழிபெயர்த்திருக்கிறார்.

* * *

**கலைமகள் :**—* வர்ணனைகள் எல்லாம் தத்ரூபமாகக் கண்முன் வந்து நிற்கின்றன: இயற்கை வர்ணனைகளை அநாயாசமாகப் படம் பிடித்துக் காட்டுகிறார். ஆரண்யத்தின் காட்சிகள், பஞ்சத்தின் கொடுமை, ஆனந்த மடம், சந்தானர்களின் போர் முதலியவை உயர்ந்த சித்திரங்கள்.

---

**அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை**

# துர்க்கேச நந்தினி

(பங்கிம் சந்த்ரரின் சிறந்த நூல்களில் ஒன்று)

இதில் வீரம், காதல், சோகரசங்கள் சிறந்து விளங்குகின்றன

வங்காளி மூலத்திலிருந்து மொழிபெயர்த்தவர்

ஸ்ரீ. கு. ப. ராஜகோபாலன், பி. ஏ.

படங்கள் கொண்டது : : விலை ரூ. 1-4-0

## புகழுரைகளிற் சில

**தனவணிகன்:**—"இந்த நவீனத்தில் தோன்றும் விமலாவின் வீரத்தனம், தமிழ்நாட்டுக் கண்ணகியை ஞாபகப்படுத்துகின்றது. ஆயிஷாவின் ஆழ்ந்த காதலும், விரிந்த நோக்கமும் பெண்மையின் பெருமையை உயர்த்துகின்றன. ஆசிரியர், தமது அரிய கருத்துக்களையும், கொள்கைகளையும் அநேக விடங்களில் புகுத்தியிருக்கிறார். இடையிடையே கருத்தழகும் சொல்லழகும் தோன்றித் தோன்றி இன்பம் அளிக்கின்றன. மொழிபெயர்ப்பு நன்றாயிருக்கிறது. நடையின் போக்கும், கதையின் போக்கும் வாசகர்களுக்கு இன்பமூட்டும். தமிழ் மக்கள் ரசிக்க வேண்டிய நூல்களுள் இது ஒன்று.

* * *

**ஜோதி :**—"மொழிபெயர்ப்பு மிக நன்றாயிருக்கிறது. பங்கிம் சந்திரருடைய உள்ளத்தோடு தம்மை ஈடுபடுத்திக்கொண்டு இந்த மொழிபெயர்ப்பைச் செய்திருக்கிறார். அல்லயன்ஸ் கம்பெனியாருடைய எல்லாப் பிரசுரங்களைப்போலவே, இந்த துர்க்கேச நந்தினியும் அச்சு, பதிப்பு முதலிய எல்லா வகையிலும் நன்றாக இருக்கிறதென்று நாம் சொல்லாமலே வாசகர்கள் தெரிந்துகொள்வார்கள்.

* * *

**நவசக்தி :**—"வீரேந்திரன், ஜகத்ஸிங், அயேஷா முதலியவர்கள் எப்பொழுதும் கண்முன் நிற்கிறார்கள். அல்லயன்ஸ் கம்பெனியார் புத்தகத்தை அழகாக அச்சிட்டிருக்கின்றனர்.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

# விஷ-விருக்ஷம்

**310—பக்கங்கள் .... 9-படங்கள் :: ரூ. 1-8-0**

**பங்கிம் சந்த்ர சட்டோபாத்யாயர்**

வங்காளியில் எழுதியதன் தமிழ் மொழிபெயர்ப்பு

சம்பவங்கள் கண்முன் நடப்பவைபோல், துரிதமாக ஒன்றன்பின் ஒன்றாக வந்து, வாசகர்கள் மனதைக் கவர்ந்து, கதை முடியுமுன் கீழே வைக்க முடியாதபடி செய்கின்றன. —ஜோதி

**ஸ்ரீ டி. என். குமாரஸ்வாமி. பி.ஏ.,**

(மிக்க அழகாய் மொழிபெயர்த்தவர்)

## பத்திரிகைகளின் புகழுரைகள்

**ஜயபாரதி:—** * முதல் நூலிலிருந்த நயத்தையும், அழகையும், வர்ணனையையும் இம் மொழிபெயர்ப்பில் இருப்பதைவிட அழகாக மொழிபெயர்க்க முடியாது.

* * *

**தினமணி:—** * 'நகேந்திர தத்தன் படகில் செல்லப் புறப்பட்டான்' என்ற வரியைப் படிக்கத் தொடங்கிவிட்டால் போதும்; புஸ்தகத்தை முடிக்கும்போதுதான் ஒரு ரஸிகன் மூச்சுவிடுவான். அத்தகைய மோகன சக்தியுடன் கதை செல்கிறது.

* * *

**மணிக்கொடி:—** * கதை சுவாரஸ்யம் என்று சொல்லி விட்டால் மாத்திரம் போதாது. அதில் அங்கங்கே சித்தரிக்கப் பட்ட வர்ணனைகளும், கம்பீரமான கற்பனைகளும் மிகவும் இன்புறுத்துகின்றன. * இலக்கிய மணம் கமழும்படி, இனிய நடையில், ரொம்ப அழகாக மூலத்திலிருந்து கொண்டுவந்திருக்கிறார்.

* * *

**தாருல் இஸ்லாம்:—** * * இக்கதையை மிகத் திறம்பட வரைந்திருக்கிறார். கதைப்போக்கு படிப்பவருள்ளத்தை மேன் மேலும் தூண்டி ஈர்த்துக்கொண்டே செல்லக்கூடியதாய் அமைந் திருக்கிறது. தமிழ் மக்கள் இந் நவீனத்தைப் படித்துப் பெரிதும் பயன்பெறுவார்களாக.

---

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

சென்னை அரசாங்க முதல் மந்திரி

ராஜாஜி

இயற்றிய

# குட்டிக் கதைகள்

இந் நூலில் அடங்கியவை :—

(1) தேவானை
(2) அன்னையும் பிதாவும்
(3) திக்கற்ற பார்வதி
(4) ஜகதீச சாஸ்திரிகள் கனவு
(5) அறியாக் குழந்தை
(6) முகுந்தன்
(7) தீபாவளியில் தேவ தரிசனம்
(8) எலெக்ஷன் கதை
(9) சோதிடம் பொய்யாகுமா ?
(10) வேணுகானம்
(11) பட்டாசுக் கட்டு

நல்ல காகிதத்தில், பெரிய எழுத்துக்களில் அழகாய் அச்சிடப்பட்டது. உங்கள் பிரதிக்கு உடனே எழுதிக்கொள்க. விலை அணு 12

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை

ராஷ்ட்ரபதி

# சுபாஷ் சந்த்ர போஸ்

## ஜீவிய சரித்திரம்

(12 - போட்டோ படங்களுடன்)

"தினமணி" ஆசிரியர் ஸ்ரீ டி. எஸ். சொக்கலிங்கம் அவர்கள் இயற்றியது.

பொருளடக்கம்



— விலை அணு 4 —

ஊல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.

# எங்களுடைய தேசிய நூல்கள்

| | | ரூ. | |
|---|---|---|---|
| (1) | தியாகமூர்த்தி பண்டித மோதிலால் நேரு 33-படங்களுடன் | 0 | |
| (2) | வீரகேசரி விட்டல்பாய் படேல் 10-படங்களுடன் | 0 | |
| (3) | அரசியல் ஞானி அரங்கசாமி ஐயங்கார் சுமார் 500-பக்கங்கள்-கலிகோ பயிண்ட் | 2 | |
| (4) | சாந்த சொரூபன் பாபு ராஜேந்திரப் பிரசாத் | 0 | |
| (5) | காங்கிரஸ் சரித்திரம் - விரிவாய் எழுதப் பெற்றது. தலைவர் படங்களுடன் 272 - பக்கங்கள் - கலிகோ பயிண்ட் | 1 | |
| (6) | பண்டித ஜவாஹர்லால் நேரு - காங்கிரஸ் அக்கிராசனப் பிரசங்கத்துடன் - புதிய பதிப்பு | 0 | |
| (7) | பாஞ்சால சிங்கம் லாலா லஜபதிராய் | 0 | |
| (8) | லோகமான்ய பால கங்காதர திலகர் | 0 | |
| (9) | எல்லைக்காந்தி கான் அப்துல் கப்பார்கான் | 0 | |
| (10) | கவியரசி சரோஜினி தேவி | 0 | |
| (11) | மௌலானா அபுல்கலாம் ஆஜாத் | 0 | |
| (12) | பண்டித மதன்மோகன் மாளவ்யா | 0 | |
| (13) | ஹரிபுரா காங்கிரஸ் வைபவம் (மலிவான பதிப்பு) | 0 | 6 |
| (14) | ராஷ்ட்ரபதி சுபாஷ் சந்திரபோஸ் | 0 | 4 |
| (15) | திரிபுரா காங்கிரஸ் வைபவம் | 0 | |

திருக்கு 12 ளா

அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்